# சாமான்களின் பத்திரமான பாதுகாப்புக்கு கீரா ஸ்டீல் காபினெட்கள்




வீட்டுக்கும் சரி, ஆஃபீஸுக்கும் சரி, இடவசதிக் கேற்ப அலங்காரமாக அமையும் கீரா ஸ்டீல் காபினெட் சாமான்களைப் பத்திரமாகப் பாதுகாக்க மிகச் சிறந்தது. துரு, அரிப்பு இவற்றினால் பாதிக்கப்படாதபடி பிரத்தியேக முறையில் தயாரான உயர் ரக ஸ்டீலினால் செய்யப்பட்ட இந்த காபினெட் பல வருஷங்கள் மெருகு குலையாமல் இருப்பதற்காக 'ஓவன் பேக்டு' எனாமல் பூசப்பட்டது. இந்த காபினெட் உங்கள் தேவைக் கேற்றபடி பொருத்திக் கொள்ள பல உபகரணங்கள் பொருத்தப்பட்டு பலவித வகைகளிலும் கிடைக்கிறது. மதிப்புள்ள பொருள்களுக்கு பத்திரமான பாதுகாப்பு அளிப்பது கீரா ஸ்டீல் காபினெட்.

**Khira**

கீரா ஸ்டீல் ஒர்க்ஸ் பிரைவேட் லிமிடெட் ஸ்வாமி விவேகானந்தா ரோடு, சாந்தா க்ரூஸ், பம்பாய்-54

# கல்கி

## பொருளடக்கம்

விசுவாவசு ஐப்பசி 29 ❋ நவம்பர் 14





'இதற்கு நான் ஜவாப்தாரி அல்ல' என்று பொறுப்பைத் தட்டிக் கழிப்பது பற்றி டாக்டர் ராதாகிருஷ்ணன் வேடிக்கையாகக் கூறியது:

''குற்றம் புரிந்தது ஆதம் அல்ல, ஈவ் அல்ல, பாம்பும் அல்ல — ஆப்பிளினுடைய தவறுதான்!''

''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

கைக்கு எட்டியது...!





மலர் 25 ★ இதழ் 16

# அவசியமற்ற தலையீடு

பத்திரிகைக் கவுன்ஸில் என்பதாக ஓர் அமைப்பை ஸ்தாபிப்பதற்காகப் பாரத சர்க்கார் கொண்டுவந்த மசோதா வழக்கம் போல் காங்கிரஸ் மெஜாரிட்டியினரால் நிறைவேற்றப்பட்டு விட்டது. ''பத்திரிகைகளின் சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்கும், அவற்றின் தரம் உயர்வதற்கு உதவி புரிவதற்காகவும்'' கவுன்ஸில் அமைக்கப்படுவதாகக் காரணம் கூறப்பட்டுள்ளது.

இவ்விரண்டு நோக்கங்களையும் பத்திரிகைகள் தாமே பூர்த்தி செய்து கொண்டுவிடும். இதன் பொருட்டு, மறைமுகமாகச் சர்க்கார் சார்புள்ள ஒரு புதிய அமைப்பை ஏற்படுத்த வேண்டிய அவசியமே இல்லை. பத்திரிகைகளின் சுதந்திரத்தில் அரசாங்கத்தின் தலையீட்டை அதிகப்படுத்தி, ஆள்கிற கட்சியின் கருத்துக்களை நிலைப்படுத்துவதற்கே கவுன்ஸிலைப் பயன்படுத்திக் கொள்ள இடமுண்டு என்ற நியாயமான சந்தேகம் எழுகிறது. சுதந்திரமான கவுன்ஸில் என்று கூறினாலும் அதன் தலைவரை இந்திய சர்க்கார்தான் நியமிக்கப் போகிறது. நிர்வாகிகள் — தொழிலாளர்கள் என்ற வர்க்க பேதத்தை வலுப்படுத்தும் முறையிலேயே கவுன்ஸிலின் அமைப்பு இருக்குமென எண்ண வேண்டியிருக்கிறது. தலைவர் நியமனம் கட்சிச் சார்பில்லாமல் செய்யப்படுகிறது என்ற அபிப்பிராயத்தை உண்டாக்கும்பொருட்டு சுப்ரீம் கோர்ட்டின் பிரதம நீதிபதியின் சிபாரிசைக் கோரப் போகிறார்கள். இது பிரதம நீதிபதியைத் தருமசங்கடத்தில் சிக்கவைக்கின்ற உபாயமேயாகும். இக்கவுன்ஸில், நீதிமன்றத்தின் அதிகாரங்களைப் பெறவில்லை என்று கூறியபோதிலும் இதன் முடிவுகளை ஆட்சேபித்து வழக்குத் தொடர முடியாத ஓர் அந்தஸ்தைப் பெறப் போகிறது. பத்திரிகைகள் தவறு செய்தால் அவற்றைக் கண்டனம் செய்ய மட்டுமே இக்கவுன்ஸில் உரிமை பெற்றுள்ளதேயன்றித் தண்டனை வழங்க அதிகாரம் பெற்றிருக்கவில்லை எனக் கூறப்பட்டபோதிலும், இவ்வதிகாரத்தையும் மறைமுகமாக மற்றொரு ஷரத்து கவுன்ஸிலுக்கு அளிக்கிறது. 'ஒரு முறைக்கு மேல் ஏதேனுமொரு பத்திரிகை ஆசிரியரோ, பத்திரிகையாளரோ கவுன்ஸிலின் கண்டனத்துக்கு ஆளாகிவிட்டால் அவரைக் குறித்து சர்க்கார் என்ன நடவடிக்கை எடுக்க வேண்டுமெனக் கவுன்ஸில் மத்திய அரசாங்கத்துக்கு யோசனை கூறலாம்' என்கிறது இந்த ஷரத்து! !

பிரிட்டனில் இதுபோன்ற பத்திரிகைக் கவுன்ஸில் உள்ளது என்று காரணம் காட்டுகிறார்கள். ஆனால் அங்கு எதிர்க் கட்சியானது ஆட்சி அதிகாரம் பெறும் வாய்ப்பு எப்போதுமே உள்ளது. எனவே ஆட்சியில் உள்ள கட்சி தன் செல்வாக்கைப் பத்திரிகைக் கவுன்ஸிலின் மீது பிரயோகிப்பதில்லை. நம் நாட்டில் காங்கிரஸ் ஆட்சி இந்த நியதியைப் பின்பற்றுமா?

ஊதியம் பெறுகிற ஒரு தலைவரும், அலவன்ஸ் பெறும் இருபத்தைந்து அங்கத்தினர்களும் கொண்ட பத்திரிகைக் கவுன்ஸில் இந்த நெருக்கடி காலத்தில் வீண் செலவுகளைப் பெருக்கும் ஒரு தேவையற்ற அமைப்பேயாகும்.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி — பாப்பா
—பாரதியார்

# ராணுவமும் உணவும்

ஒரு நாடு யுத்த ஆபத்தை எதிர்நோக்கியிருக்கும் தருணத்தில்தான், பொருளாதாரம் ராணுவம் இரண்டிலுமே அந்நாடு அந்நிய தேசங்களிடம் உதவி நாடிப் பெறுவது வழக்கம். ஆனால் இந்தியாவிலோ துரதிர்ஷ்டவசமாக நிலைமை தலைகீழாக இருக்கிறது. போர் ஆபத்துப் பெருகியிருக்கும் இச்சமயத்தில் 'அந்நிய உதவிகளை எதிர்பார்ப்பதற்கில்லை; உணவு, தொழில், ராணுவ தளவாடம் யாவற்றிலுமே நாடு தன்னிறைவு பெற வேண்டும்' என்று காங்கிரஸ் பிரமுகர்கள் ஓயாமல் கூறிவருகின்றனர். நடைமுறையில் இது எப்படிச் சாத்தியம் என்பதை மக்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். அந்நிய உதவி நின்றுபோனாலும் நமது நியாயமான உரிமைகளுக்காக நாம் இரத்துடன் போராடித் தியாகங்கள் புரியத்தான் வேண்டும் என்பது உண்மை. ஆனால் நாமாக 'அந்நிய உதவி வேண்டியதில்லை; எல்லாத் துறைகளிலும் நாமே சமாளித்துக் கொண்டு விடலாம்' என்று வீறாப்புப் பேசுவது நடைமுறைக்கு ஒவ்வாதது. அத்துடன், இவ்வளவு காலமாக நமக்கு உதவி புரிந்து வரும் நாடுகளிடம் நன்றி மறந்ததாகவும் ஆகும்.

காங்கிரஸ் பிரமுகர்கள் சமீப காலமாகத்தான் 'தன்னிறைவு' பற்றிப் பேசுகிறார்கள். ஆனால், முடிந்தவரையில் நமது தேச சக்திகளையெல்லாம் ஊக்கி உற்பத்தியைப் பெருக்க வேண்டும் என்பதைச் சுதந்திரக் கட்சி ஆரம்ப காலத்திலிருந்தே கூறி வந்திருக்கிறது. 'விவசாயிகளுக்குச் சகல விதத்திலும் வசதிகள் அளிக்க வேண்டும். பலவந்தக் கொள்முதலை நிறுத்த வேண்டும். தானியப் போக்குவரத்தில் மண்டலக் கட்டுப்பாடுகளை நீக்க வேண்டும்; சர்க்காரின் வழக்கமான இலாகாக்களில் ஒன்றாக இராமல், பூரண சுதந்திரம் பெற்ற ஒரு விலைவாசி கமிஷன் நியமிக்கப்பட்டு அது நிர்ணயிக்கும் நியாயமான விலைகளின்படி விவசாயிகளிடமிருந்து தானியம் கொள்முதல் செய்ய வேண்டும்; தேவைக்குச் சரியாக உற்பத்தி உயரும்வரையில் சர்க்கார் இவ்விதம் உற்பத்தியாளருக்குப் போதிய லாபம் கிடைக்குமாறு நியாய விலை கொடுத்து தானியக் கொள்முதல் செய்து ஏழை மக்களுக்கு அதனைக் குறைந்த விலைக்கு விற்க வேண்டும்' — இவ்வாறெல்லாம் சுதந்திரக் கட்சியின் தேசிய நிர்வாக சபை புதுடில்லியில் இம்மாதத் தொடக்கத்தில் கூடி அரிய யோசனைகள் கூறியுள்ளது.

ஆனால் 'தன்னிறைவு' பற்றிப் பிரசங்கம் செய்யும் ஆளும் கட்சித் தலைவர்கள் அது காரியாம்சத்தில் நடப்பதற்கு இன்றுவரை எவ்வித ஊக்கமும் அளிக்கக் காணோம். ஊக்கம் அளிக்காததோடு ஏற்கனவே உள்ள ஊக்கத்தையும் கெடுக்கும் வகையில் காரியம் செய்து வருகிறார்கள். இன்று தமிழக அரசாங்கம் சமர்ப்பித்துள்ள பட்ஜெட் ஒன்றே இதற்குப் போதுமான சான்றாகும். நில வரியை நீக்கி உணவு உற்பத்திக்கு ஊக்கமளிக்க வேண்டியதிருக்கத் தமிழக அரசாங்கம் அதற்கு நேர்மாறாக இப்போது இவ்வரியை மேலும் உயர்த்தியுள்ளது. உணவுக் கட்டுப்பாடுகளை நீக்காததோடு மட்டுமின்றி, அரிசி ரேஷனைக் கொண்டு வந்து பிரச்னையை உக்கிரமாக்கியுள்ளது.

---

'ராணுவம் [கால்களின் சக்தியால் மட்டும் நடக்கவில்லை; வயிற்றின் சக்தியாலேயே நடக்கிறது' என்ற நெப்போலியனுடைய வாக்கின் உண்மையை உணர்ந்து நமது சர்க்கார் செயலாற்றும் நாள் எந்நாளோ?

# மாணவருக்குத் தேசிய சேவைத் திட்டம்

பள்ளிப் படிப்பை முடித்த பின் ஓராண்டு காலத்துக்கு மாணவர்களைத் தேசிய சேவையில் ஈடுபடுத்திவிட்டு, அதன் பின் மேற்படிப்புக்கு அநுமதிப்பது பற்றி மத்திய சர்க்கார் யோசித்து வருகிறதாம். மேலெழுந்தவாரியில் பார்க்கும்போது இது நல்ல திட்டமாகவே தோன்றினாலும் இதிலுள்ள இடையூறுகளையும் மனத்தில் கொள்ள வேண்டியது அவசியம். தற்போதுள்ள கல்வி முறையில் பள்ளிப் படிப்பை முடித்து உடனே கல்லூரிப் படிப்பைத் தொடங்கும்போதே மாணவர்கள் பாடத்தைப் புரிந்து கொள்ள முடியாமல் சிரமப்படுகிறார்கள். ஓராண்டு இடைக்காலம் வேறு ஏற்பட்டுவிட்டால் மாணவர்கள் பள்ளியில் கற்றதையெல்லாம் மறந்து கல்லூரியில் நுழையும்போது திக்குத் திசை தெரியாமல் திண்டாடுவார்கள். ஓராண்டு தேச சேவை என்பதிலும் மாணவர்களைப் பயில்விப்பதிலேயே கணிசமான பகுதி செலவழிந்துவிடும். மீதமுள்ள காலத்தில் அவர்கள் விசேஷமாக என்ன செய்துவிட முடியும் என்பது தெரியவில்லை. தற்போது கல்லூரிப் படிப்புடனேயே அளிக்கப்படும் என். ஸி. ஸி. பயிற்சி, சமூக சேவைப் பயிற்சி இவற்றினால் விளையும் பலனைவிட அதிகமாக ஏதும் புதுத் திட்டத்தினால் விளையுமெனத் தோன்றவில்லை.

இதைக் காட்டிலும் சாலச் சிறந்த ஒரு யோசனையை ராஜாஜி கூறியுள்ளார்கள். நாற்பது குடும்பத்துக்கு ஒருவர் வீதம், நாடு முழுவதுமாக இருபது லட்சம் இளைஞர்களைத் திரட்டி முப்பத்தைந்து வயதுவரை அவர்களை ராணுவப் பணியில் ஈடுபடுத்தும் ஒரு ரிஸர்வ் படையை அமைக்க வேண்டுமென்பது அவரது யோசனை. நீண்ட காலப் பயிற்சியும், பயின்றதைச் செயலில் காட்டும் வாய்ப்பும் இத்திட்டத்தில் சாத்தியம். ரிஸர்வ் படையினர் முப்பத்தைந்தாவது வயதில் படையிலிருந்து விலகும் வரையில் திருமணம் செய்து கொள்ளாமல் இருப்பதால் ஓரளவு 'குடும்பக் கட்டுப்பாடு'ம் நடைபெறும். சர்க்கார் அவசியம் செவி சாய்த்து, காரியக்கிரமங்களை வகுப்பதற்குரிய சிறப்பு வாய்ந்த ஒரு திட்டம் இது. இதைவிடுத்துக் கோடானு கோடி மாணவர்களை விசேஷப் பயனில்லாத ஒரு காரியத்தில் ஈடுபடுத்திக் கல்விக்குக் குந்தகம் விளைவிப்பதில் சாரமில்லை.

# ராஜாஜியின் கருத்துக்கள்

உணவு தானியங்களில் பற்றாக்குறை இருக்கிறதெனில் அதனை ஈடுகட்டுமளவுக்கு விளைச்சலைப் பெருக்க ஊக்கம் தருவதே முறை. ஆனால் காங்கிரஸ் சர்க்காரோ நாட்டின் உணவுத் தேவையில் துண்டு விழுவதற்கு ஈடாக மக்கள் தங்கள் ஆகாரத்தைக் குறைத்துக் கொள்வதே பிரச்னைக்குத் தீர்வு என்று கருதுகிறது. மக்கள் குறைவாகச் சாப்பிட்டால் உணவுப்பற்றாக்குறையை இட்டுநிரப்பியதாகி விடும் என்பது பிரதமர் கண்டுள்ள தீர்வு. 14 வேளை உணவில் ஒன்றைக் கைவிடுவதால் பிரச்னையைச் சமாளித்து விடலாம் என்பது பிரதமரின் கணக்கு. ஆனால் கணித சாஸ்திரத்தால் மக்களின் சித்தப் பண்பை அலட்சியம் செய்துவிட முடியாது. ஒருவேளை உபவாசமிருப்பதெனில் அதற்கு முன்னோடியாக முதல் வேளையே ஆண்களும், பெண்களும், குழந்தைகளும் சிறிது அதிகமாக ஆகாரம் செய்வார்கள்; உபவாசத்துக்கு அடுத்த வேளையும் கூடுதலாக உண்பார்கள். இது தேக இயந்திரத்தின் வேலை முறை பற்றிய விஷயம்; இதை மாறும்படி உத்தரவிடுவது இயலாது.

இது ஒருபுறமிருக்க அடிப்படைக் கேள்வி இதுவே: பட்டினி கிடப்பதுதான் உணவுப் பற்றாக் குறைப் பிரச்னைக்குத் தீர்வா?

ஃஃஃ

உணவுப் பிரச்னை ஏழைகளைத்தான் அதிகம் பாதிக்கிறது. அவர்கள்தான் நாட்டு ஜனத் தொகையில் பெரும்பான்மையினர். அரிசி, சோளம் முதலிய தானியங்களையே விலை கொடுத்து வாங்க இயலாத மக்கள் இவர்கள். இவர்களிடம் அரிசியைக் குறைத்துக் கொண்டு அதற்குப் பதிலாக அதைவிட விலை உயர்வாக உள்ள காய்கறிகளை வாங்கி உண்ணுமாறு உபதேசிப்பதன் பொருள் என்ன? இவ்வாறு பத்திரிகைகளில் யோசனை கூறுபவர்கள் தங்களுடைய பொருளாதார நிலையை மனத்தில் வைத்தே எழுதுகிறார்கள். ஆனால் இவர்கள் நாட்டு மக்கள் தொகையில் சூக்ஷ்ம தரிசினி வைத்துப் பார்க்க வேண்டிய அளவுக்குச் சிறுபான்மையினராவர். நம் நாட்டின் பொதுமக்கள் இப்போதே போதிய ஆகாரம் உட்கொள்ளவில்லை என்பது ஸயன்ஸ் கூறும் உண்மை. ஆகாரத்தைக் குறைத்துக் கொள்ளும் காரியத்தைத் தங்களுடைய வறுமை காரணமாகத் தாமாகவே மேற்கொண்டு விட்ட மக்களிடம், இனி ஆகாரக் கட்டுப்பாடு பற்றிப் புதிய உபதேசம் தேவையில்லை.

ஃஃஃ

இந்தோனேசிய வியவகாரங்களை இன்னமும் ஒரு பனிப் படலம் மூடியிருக்கிறது. ஜெர்மனியின் பிரபல பத்திரிகையொன்றின் நோக்கில் இன்றைய நிலவரம் வருமாறு:

சுகர்ணோல் தளபதியாக நியமிக்கப்பட்டவரும், கம்யூனிஸச்சார்புள்ளவருமான ஜெனரல் பிரநோடோவை ராணுவத் தலைவர்கள் பதவி நீக்கம் செய்து விட்டிருக்கிறார்கள். சுகர்ணோவின் விருப்பத்துக்கு மாறாக ஜெனரல் சுஹர்தோ புதுத் தளபதியாக நியமிக்கப்பட்டிருக்கிறார். இவர்தான் புரட்சியாளர்களை அடக்கியவர். விமானப் படையின் சேனாதிபதியான தனி என்பவர் கம்யூனிஸச் சார்புள்ளவர் என்ற சந்தேகத்தின் மீது நாடு கடத்தப்பட்டிருக்கிறார். பீகிங்கின் அரசியல்வாதிகள் இந்தோனேசிய நிலவரம் குறித்துக் கடுமையான கண்டனங்கள் தெரிவிப்பதும், அல்ஜீரியா மகாநாடு குறித்துச் சீனா கூறிய யோசனைகளுக்கு இந்தோனேசியாவில் எதிர்ப்புத் தோன்றியதும் அந்நாடு வலதுசாரியின் புறமாகச் சாயத் தொடங்கியிருப்பதற்கு அடையாளமெனக் கொள்ளலாம். அங்கு ராணுவத்தின் பொறுப்பு மிகவும் கடினமாக உள்ளது. ஏனெனில், கம்யூனிஸ்ட் கட்சி நாடு முழுவதிலும் தனக்கு மூப்பது லட்சம் அங்கத்தினர்கள் இருப்பதாகப் பெருமையடித்துக் கொண்டிருக்கிறது. நல்ல ஒருமைப்பாட்டுடன் நிர்வகிக்கப்பட்ட கட்சி அது என்பதை எண்ணுகையில் இந்தோனேசியாவின் நெருக்கடி விரைவில் முடிவதற்கான சாத்தியக்கூறு இல்லை என்றே தோன்றும்.

ஃஃஃ

சோஷலிஸ நாடுகளில் உள்ள தொழிலாளிகள் ஏனைய நாட்டினரைவிடச் சந்தோஷமாக இருக்கிறார்களா? இதை ஒப்பிட்டு விளக்குவதற்கு நல்ல சான்றாக ஜெர்மனியின் இரு பாகங்களும் அமைந்துள்ளன. மேற்கு ஜெர்மனி சுதந்திரத் தொழில் முறையையும், கிழக்கு ஜெர்மனி சோஷலிஸத்தையும் பின் பற்றுகின்றன. இவ்விரண்டு நாடுகளிலுமுள்ள தொழிலாளர்களின் 'பொருள் வாங்கும் சக்தி'யைப் பற்றிய அறிக்கை கீழ்க்கண்ட உண்மைகளை வெளிப்படுத்துகிறது:

ஒரு கிலோகிராம் காப்பி பானம் கிடைப்பதற்காக மேற்கு ஜெர்மனித் தொழிலாளர் நான்கு மணி இருபத்தியொரு நிமிடங்கள் உழைக்க வேண்டுமெனில், அதே அளவைப் பெறுவதற்கு (சோஷலிஸ) கிழக்கு ஜெர்மனித் தொழிலாளர் 29 மணி இருபது நிமிடங்கள் உழைத்தாக வேண்டியிருக்கிறது; அதாவது சுதந்திரத் தொழில்முறையின் கீழ் இருப்பதைப் போல் ஏழு மடங்கு காலம் உழைக்க வேண்டியுள்ளது. மேற்கு ஜெர்மனியில் நான்கு மணி பத்து நிமிட உழைப்பினும் பெறக்கூடிய பாப்ளின் சட்டைக்காக சோஷலிஸ ஜெர்மனித் தொழிலாளர் அதைப்போல் மும்மடங்கு வேலை செய்ய வேண்டியிருக்கிறது. ஒரு கிலோகிராம் வெண்ணெய் வாங்குவதற்கு மேற்கு ஜெர்மானியர் சுமார் இரண்டுமணி நேரம் உழைத்தால் கிழக்கு ஜெர்மானியரோ அதுபோல் இரு மடங்கு நேரம் வேலை செய்ய வேண்டியுள்ளது. சுதந்திரத் தொழிலாளர் 2 மணி 18 நிமிட உழைப்பில் பெறுகிற அளவு மாட்டிறைச்சியைப் பெற சோஷலிஸத் தொழிலாளர் நான்கு மணி ஆறு நிமிடங்கள் உழைக்கின்றனர். முக்கால் மணி உழைப்புக்கான ஊதியத்தில் சுதந்திரத் தொழில் முறையின்

கீழ் உள்ள தொழிலாளர் உயர்த்த நைலான் வாங்க முடிகிறதெனில், இதே ஊதியத்தைப் பெற சோஷலிஸ ஜெர்மனியில் சுமார் ஐந்து மணி நேர உழைப்புத் தேவையாக உள்ளது. செருப்புகள் வாங்குவதற்கும் சோஷலிஸ ஜெர்மனியில் மேற்கு ஜெர்மனியில் உள்ளது போல் சுமார் இரண்டரை மடங்கு வேலை செய்தாக வேண்டியிருக்கிறது. மேற்கு ஜெர்மனியில் 236 மணி உழைப்பில் ஒரு தொழிலாளி டெலிவிஷன் சாதனம் வாங்கலாம்; கிழக்கு ஜெர்மனியிலோ இதற்கு 838 மணி உழைப்புத் தேவை. சுதந்திரத் தொழில் நடக்கும் மேற்கு ஜெர்மனியில் 1306 மணி நேரம் உழைத்துப் பெறும் ஊதியத்தால் மோட்டார் கார் வாங்க முடிகிறது: சோவியத் ருஷியாவின் ஆதிக்கத்திலுள்ள கிழக்கு ஜெர்மனியிலோ இதற்கு 6368 மணி நேரம் உழைத்தாக வேண்டும்.

⁂

பிரபல அமெரிக்கப் பத்திரிகையான 'லைஃப்' பின்வருமாறு கூறுகிறது:

> நியூயார்க்கில் டெமகிராடிக் கட்சி நீண்ட காலமாக அதிகார ஏகபோக்கியம் கண்டு விட்டதால் ஆட்சி கொடூரமாகிவிட்டது. ரிபப்ளிகன் கட்சியும் இவ்வளவு நீண்ட காலம் ஆட்சியில் இருந்திருந்தால் நியூயார்க்கின் கதி இதைவிட நல்ல நிலையில் இருந்திராது. ஏனெனில், கட்சிக் கொள்கை ஒருபுறமிருக்க, எந்தக் கட்சியாயினும் சரி, மனிதன் ஓர் அரசியல் பிராணி என்ற ரீதியில் நோக்கினால் ஏக கட்சியின் ஆட்சி ஊழலில் முடிவதுதான் இயற்கை.

பலமுறை கூறி, ருசிபோன விஷயம்தான். எனினும் இதுவே பரம சத்தியம்.

⁂

நகரப்புறங்களுக்கு ஒழுங்கான தானிய ஸப்ளை கிடைக்க வேண்டுமாயின் பெரிய நில உடைமைகள் இருந்தேயாக வேண்டும் என்ற உண்மையை அரசாங்கம் உணர்ந்து வருவதாகத் தோன்றுகிறது. ஜாயின்ட் ஸ்டாக் கம்பெனிகளைக் கொண்டு பெரிய பண்ணைகளைச் சிருஷ்டிக்கவும் நிர்வகிக்கவும் வேண்டும் என்று மத்திய சர்க்கார் யோசித்து வருவதாகத் தெரிகிறது. நில உடைமைக்கு வரம்பு கட்டியேயாகவேண்டும் என்கிற வெற்றுச் சித்தாந்தத்தைத் திட்டக் கமிஷன் இன்னமும் விட்டபாடில்லை. ஏற்கனவேயுள்ள பெரும் நில உடைமைகளைச் சிதைத்துவிட்டு, அவ்வுடைமைக்காரர்களைப் போன்ற அக்கறையோ, விஷய ஞானமோ இல்லாதவர்களை ஒன்று சேர்த்து மானேஜிங் டைரக்டர்களின் கீழ்ப் புதிதாகப் பெரும் பண்ணைகள் நிறுவுவது அறிவுடைமையா, நீதியா? இயற்கையாக உள்ள உறுப்பில் ஏதோ குறை கண்டு அதனை வெட்டி எறிந்துவிட்டு அதற்குப் பதிலாகச் செயற்கைச் சாதனத்தைத் தேடும் 'விவேக'த்தைத்தான் சர்க்கார் நடவடிக்கையில் காண்கிறோம்.

# என்ன சேதி?

## மஸானிக்குப் பாராட்டு

அந்நிய நாடுகளில் நமது அரசாங்கக் கருத்துக்கு ஆதரவாகப் பிரசாரம் செய்வது விசேஷ ஞானம் தேவைப்படுகிற ஒரு விஷயம். சமீப காலமாக நம் கருத்துக்களை உலக நாடுகள் ஆதரிக்காததற்குக் காரணம் நமது வெளிநாட்டுத் தூதர்கள் சரியானபடி செயலாற்றாததே என்று சர்க்கார் நினைக்கிறது. எனவே, அதிகாரபூர்வமான தூதர்கள் போதாதென்று கருதி இந்திய சர்க்கார் விசேஷத் தூதுகோஷ்டிகளை வெளி நாடுகளுக்கு அனுப்பி வருகிறது. அந்நிய நாடுகளில் நமது தரப்பை எடுத்து விளக்குவது எப்படி என்பதற்குத் தேவையான விஷய ஞானமும் பக்குவமும் அரசியல் கட்சித் தலைவர்களுக்கு இருக்குமா என்பது சந்தேகம். எனவே, இவர்களைக் கொண்ட குழுக்களை அனுப்பி வைப்பதால், அதிகார பூர்வமாக நடைபெறும் அந்நியத் தொடர்புகளின் காரியக் கிரமத்தில் உரசல் ஏற்படக்கூடும். நெருக்கடி காலங்களில் எந்த நாட்டின் தூதருமே இக்கட்டுகளுக்கு ஆளாவதும், திறம்படச் செயலாற்ற இயலாமற் போவதும் இயற்கை. இதை அரசியல்வாதிகளைக் கொண்டு சீர்செய்ய இயலாது. இக்கருத்துக்களை ஸ்ரீ எஸ். நடராஜன் அவர்கள் 'ஒபினியன்' பத்திரிகையில் வெளியிட்டிருக்கிறார். 'அதிகாரபூர்வமற்றதும்' அந்நிய செலாவணியில் பெருத்த செலவு உண்டாக்குவதுமான தூதுக் கோஷ்டிகளில் அங்கம் வகிப்பதற்குச் சுதந்திரக் கட்சியின் பொதுக் காரியதரிசியான ஸ்ரீ மஸானி அவர்கள் இசையவில்லை என்பது இங்கு குறிப்பிட்டுப் பாராட்ட வேண்டிய விஷயம்.

## நாணயமான நடவடிக்கை

கஷ்டம் ஏற்பட்ட காலத்தில் சிந்தனையைத் தெளிவாக வைத்துக் கொண்டு செயல்படுவது மிகவும் சிரமசாத்தியமான காரியம். இதனை இந்திய சர்க்கார் சிறப்புறச் சாதித்து விட்டதைப் பாராட்டுகிறோம். சிந்து நதித் தண்ணீர் ஒப்பந்தப்படி பாகிஸ்தானுக்குத் தர வேண்டிய எட்டு கோடி ரூபாயை இந்திய சர்க்கார் செலுத்தி விட்டது. உலக பாங்கு—பாகிஸ்தான் — இந்தியா ஆகிய மூன்றும் சேர்ந்து செய்து கொண்ட ஒப்பந்தப்படி ஆறாவது தவணையான எட்டு கோடி ரூபாயை இந்தச் சமயத்தில் அளித்து, இந்தியா உலக நாடுகளிடையே மதிப்பைத் தேடிக் கொண்டு விட்டது. பாகிஸ்தானின் சமீப நடவடிக்கை காரணமாக, மேற்படி ஒப்பந்தத்தை நாம் நிறைவேற்ற வேண்டிய அவசியமில்லை என்று காங்கிரஸ் கட்சியிலேயே பல அங்கத்தினர்கள் அபிப்பிராயப்பட்டனர். அவற்றைப் புறக்கணித்து இந்தியா பெருந் தன்மையுடனும் நாணயத்துடனும் நடந்து கொண்டதைப் பற்றி நாம் பெருமைப்பட வேண்டும்!

# தொழிலுலகின் மகத்தான நஷ்டம்

தமிழகத்தின் தலைசிறந்த தொழிலதிபர் திரு அ.மு.மு. முருகப்ப செட்டியார் எதிர்பாராதபடி மரணமுற்றது இந்தியத் தொழிலுலகத்துக்கே மகத்தான நஷ்டமாகும். நகரத்தார் சமூகத்தில் தோன்றி, பர்மா, மலேயா போன்ற நாடுகளில் பரம்பரைத் தொழிலில் ஆரம்ப நாட்களில் ஈடுபட்டிருந்தாலும், தாய் நாடான பாரதத்தின் எதிர்காலம் தொழில் உற்பத்தியின் வளத்தைத்தான் அடிப்படையாகக் கொண்டுள்ளது என்பதைத் தீர்க்க தரிசனத்துடன் பல்லாண்டுகளுக்கு முன்னமே உணர்ந்திருந்தவர் திரு முருகப்ப செட்டியார். உற்சாகத்துடன் புதுப் புதுத் தொழில்களில் புகுந்து தமது தொழில் அறிவையும் ஆற்றலையும் கொண்டு தாய்நாட்டை வளப்படுத்தியவர்களில் திரு முருகப்ப செட்டியார் முதன்மை ஸ்தானம் வகித்தவர் என்று சொல்ல வேண்டும். பொட்டல் வெளியாகக் கிடந்த சென்னைக்கடுத்துள்ள அம்பத்தூரை 'இந்தியாவின் பர்மிங்ஹாம்' என்று கூறும் அளவுக்கு மாற்றிவிட்ட பெருமை முருகப்ப செட்டியாரையே சாரும். டி. ஐ. சைக்கிள் தொழிற்சாலையை மையமாகக் கொண்டு பல உபதொழிற்சாலைகளைச் சுற்றிலும் அமைத்து அவற்றுக்குத் தேவைப்பட்ட அந்நிய நாட்டுத் தொழில் கூட்டுறவையும், அந்நிய செலாவணி மூலதனத்தையும், தக்க முறையில் சேகரித்து லட்சக் கணக்கில் சைக்கிள்களை ஆண்டுதோறும் உற்பத்தி செய்து புகழ் பெற்றவர். திருவொற்றியூரில் கார்ப்பரண்டம் யூனிவர்ஸல் என்ற சாணைக் கற்கள் தயாரிக்கும் தொழிற்சாலையையும் பிரபல அமெரிக்க ஸ்தாபனத்தின் தொழில் நுட்பக் கூட்டுறவு ஏற்படுத்திக் கொண்டு வெற்றிகரமாக நடத்தி வந்தவர்.

தொழிற்சாலைகளை நடத்துவதோடு மட்டும் நிற்காமல், சமூகம் செழிக்க வேண்டும் என்ற தர்ம சிந்தனையுடன் தமது தந்தை திவான் பகதூர் அ. மு. முருகப்ப செட்டியார் பெயரில் ஒரு தரும ஸ்தாபனத்தை நிறுவி அதன் மூலமாகக் கல்வி அறிவையும் மருத்துவ உதவியையும் நவீன முறையில் அளிக்கச் சிறந்த ஏற்பாடுகளைச் செய்தவர் திரு முருகப்ப செட்டியார். அம்பத்தூரில் நிறுவப்பட்டுள்ள பாலிடெக்னிக் தொழிற் கல்விக்கூடமும், சர் ராமசாமி முதலியார் உயர்நிலைப் பள்ளியும், திருவொற்றியூரில் செயலாற்றி வரும் வெள்ளையன் செட்டியார் உயர்நிலைப் பள்ளியும், செட்டி நாட்டில் அவரது பிறந்த ஊரான பள்ளத்தூரில் நவீன வசதிகளனைத்தும் அமையப்பெற்ற மருத்துவ இல்லமும் முருகப்ப செட்டியாரின் தரும சிந்தனைக்கு கட்டியம் கூறுகின்றன. அம்பத்தூரில் அவர் கட்டத் தொடங்கிய நவீன ஆஸ்பத்திரியும் வேகமாக முடிவடைந்து கொண்டிருக்கிறது.

அவருடைய தொழில் திறமையையும், கலங்காத உள்ள அமைதியையும், சீரிய பண்பையும், நண்பர்களுடன் பழகும் ஒப்பற்ற நேர்மையையும் பயன் செய்துகொண்ட ஸ்தாபனங்களும், தொழிற் சங்கங்களும் பலப் பல. பல கம்பெனிகளில் டைரக்டராகவும் அகில இந்திய வர்த்தக சம்மேளனத்தின் தலைவராகவும் ஆங்கிலேய வர்த்தகர்களின் ஸ்தாபனம் என்று மதிக்கப்பெற்ற சென்னை வர்த்தகச் சங்கத்தின் முதலாவது இந்தியத் தலைவராகவும் பணியாற்றிச் சீரும் சிறப்பும் எய்தியவர் திரு செட்டியாரவர்கள்.

வெளிநாட்டுப் பயணத்தின்போது எதிர்பாராத முறையில் மரணமுற்றார் திரு செட்டியார். அவரது மனைவியாருக்கும், புதல்வர் திரு எம். எம். முத்தையாவுக்கும், சகோதரர் திரு ஏ. எம். எம். அருணாசலத்துக்கும், தமது புதல்வரைப் போலவே அவரால் மதிக்கப் பெற்ற திரு எம். வி. அருணாசலத்துக்கும் நமது மனமார்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். மகத்தான ஸ்தாபனங்களை அவர்களுடைய பொறுப்பில் திரு முருகப்ப செட்டியார் விட்டுச் சென்றிருக்கிறார். அவற்றையெல்லாம் மேன்மேலும் அபிவிருத்தி செய்ய அவர்களுக்குள்ள ஆற்றலும் பலமும் வளர்வதாக!





# பார்! பார்! பட்டணம் பார்!

பட்டணத்தான்

கெட்டும் பட்டினம் சேர் என்று வசனம் சொல்லு கிறது. ஆயினும் ஏதோ பட்டினத்தில் வந்து வசிப்பதே தவறு என்று நினைப்பவர்கள்தான் நம்மிடையே அதிகமாகத் தென்படுகிறார்கள். நம்மை யாராவது எப்படியாவது எந்த ஊர் என்று கேட்டால் திருநெல்வேலி என்கிறோம், தஞ்சாவூர் என்கிறோம், அல்லது கோயமுத்தூருக்குச் சமீபம் என்கிறோம். இரு தலைமுறைகளாகப் பட்டினத்திலேயே வசிப்பவர்கள்தான் என்றாலும் பட்டினம் என்று சொல்லிக் கொள்வது கௌரவக் குறைவாக இருப்பதுபோல இருக்கிறது.

1921ல் என்று எண்ணுகிறேன். என் தாய் மாமன் சைதாப்பேட்டையில் எல்.டி.க்குப் படித்துக்கொண்டிருந்தார். என் தாயாரும் நானும் வந்து அவரோடு தங்கியிருந்தோம். அப்போது கல்கத்தாவிலிருந்து வந்திருந்த என் தகப்பனாரிடம் என் தாய் பட்டினம் பார்க்க வேண்டுமென்று வற்புறுத்திச் சொல்லவே ஒருநாள் பட்டினம் பார்க்கக் கிளம்பினோம். சைதாப்பேட்டையிலிருந்து நட நட என்று நடந்து சென்டிரல் வருவதற்குள் அம்மாவுக்கும் எனக்கும் பட்டினம் பார்த்தது போதும் என்றாகிவிட்டது. செத்த காலேஜ், உயிர்க் காலேஜ், பிரஸிடென்ஸி காலேஜ், லா காலேஜ் எல்லாம் பார்த்துவிட்டு வீடு திரும்பும்போது இரவு மணி எட்டு. சுமார் முப்பது மைல்களாவது நடந்திருப்போம். அது முப்பது மைலாக அல்லாமல் முந்நூறு மைல் போலக் காலை வலித்தது. அம்மா ஹோட்டலில் பச்சைத் தண்ணீர்கூட அருந்த மறுத்துவிட்டாள். மீன் காலேஜ், லைட் ஹவுஸ் எல்லாம் பார்க்க அம்மாவை அப்பா அன்புடன் அழைத்தபோது 'அம்மா, நீங்கள் போய்ப் பார்த்து விட்டு வந்துவிடுங்கள். நான் பட்டினம் பார்த்து விட்டேன்' என்று காலைப் பிடித்துக் கொண்டே சொல்லி விட்டாள்.

பட்டினத்தின் ஒரு சிறப்பு அது நேற்று இருந்த மாதிரி இன்று இருக்கவில்லை என்பதுதான். ஒரு காலத்தில் பனோட்டோ மூலை என்று அப்போது பெயர் பெற்ற இடத்திலிருந்து கொண்டு கூவ நதி இரு பக்கமும் கரை புரண்டு ஓடுவதை மணிக் கணக்காக நின்று பார்க்கலாம். இப்போது அந்த இடத்தில் இரண்டு நிமிஷங்கள் சேர்ந்தாற்போல் நிற்க முடியாது. மேலே இருந்து பிளஷ் அவுட் நீரோ அல்லது ஸ்டோரேஜ் நீரோ தெறிக்கும். தெருவோடு போகிறவர்கள் வருகிறவர்கள் எல்லோரும் குடையின் கீழ் நடுத் தெருவில் கையைக் காட்டிக் கொண்டு பரத நாட்டியம் ஆடும் போலீஸ்காரருக்குப் பயந்துகொண்டு நிற்பவர் விலாவில் இடித்துக் கொண்டுதான் போவார். ஜீவநதிப் பிரவாகமும் அப்படி ஒன்றும் சுவாரசியமாக இருப்பதில்லை.

திருவல்லிக்கேணியில் மின்சார விளக்குகளோ, பிளஷ் அவுட் கக்கூஸ்களோ இல்லாத காலம். எம்மில் எத்தனை பேருக்கு நினைவில் இருக்கிறதோ எனக்குத் தெரியாது. பெல்ஸ் ரோடிலும், லாயிட்ஸ் ரோடிலுமிருந்த கள்ளுக் கடைகள் சில சமயங்களில் தவிர சூனியப் பிரதேசமாகத்தான் இருக்கும். ரவுண்டானாவில் பப்ளிக் கன்வீனியன்ஸ் கட்டுகிறேன் என்று பொதுஜன நலவாதிகள் தொடங்கியபோது ஹிந்துப் பத்திரிகையில் - அப்போது ஹிந்துப் பத்திரிகைக் காரியாலயமே ரவுண்டானாவில் தானே இருந்தது - ரைட் ஆனரபிள் சாஸ்திரியார் என்ன, ஸர் பி. எஸ். சிவஸ்வாமி அய்யர் என்ன, மகமது உஸ்மான் என்ன, கூர்மா வெங்கட ரெட்டிகாரு என்ன, இன்னும் எத்தனையோ பேர்கள் அங்கு கக்கூஸ் கட்டினால் பட்டினமே நாற்ற மெடுத்துவிடும் என்று கடிதங்கள் எழுதினார்கள். கக்கூஸ் கட்டி, இப்போது சரங்க வழிக்காக அதை இடித்துக் கொண்டும் இருக்கிறார்கள்.

மயிலாப்பூர் பிரதேசத்தில் பெரிய மனிதர்கள் தவிர மற்ற யாரும் குடியிருக்க முடியாத நாட்கள் ஒருகாலத்தில் இருந்ததாகத்தான் ஞாபகம். அதே போல மாம்பலம் பிரதேசத்தில் யாருமே மனிதர்கள் குடியிருந்து வாழ முடியாமல் இருந்த காலமும் உண்டு. அதற்கு முன் மவுண்ட் ரோடிலிருந்து புரசைவாக்கம் போக வேண்டுமென்றால், குதிரை வண்டியில் போகலாம், அல்லது டிராம் ஏறி சென்ட்ரல் போய் சென்ட்ரலிலிருந்து பெரியமேட் வழியாகப் போகலாம். இரவு எட்டு மணியாகி விட்டால் தைரியமிருந்தால் நடந்து போகலாம்- அதிருஷ்டம் இருந்தால் போய்ச் சேரலாம் புரசைவாக்கத்துக்கு.

இதெல்லாம் சமீப காலத்து மாறுதல்கள்.

பதினேழாம் நூற்றாண்டில் வெனிஸ் நகரத்திலிருந்து வந்து இப்போது சர்வகலாசாலைப் பரீட்சை மண்டபம் இருக்கிற இடத்தில் மாளிகை அமைத்துக் கொண்டு ஆர்க்காடு நவாபு, பிரிட்டிஷ்காரர்கள், பிரெஞ்சுக்காரர்கள் என்று பலருக்கும் வைத்தியம் பார்த்துக் கொண்டிருந்த நிகோலோ மனுச்சி என்பவர் அந்தக் காலத்துப் பட்டினம் பற்றித் தமது நூலில் விரிவாகவே எழுதி வைத்திருக்கிறார். ரெனின்யூ போர்டு ஆபீஸாக இன்று மாறிவிட்ட ஆர்க்காடு நவாபின் அந்தப்புர மாளிகையின் மாடிச் சாளரங்களிலிருந்து எத்தனையோ பீபிமார்கள் வெளி உலகத்தின் ஒரு சிறு பகுதியை அன்று பார்த்திருப்பார்கள்!

சென்னை சர்வகலாசாலைக் கட்டிடங்கள்தான் கடற்கரையிலே எப்படி நிமிர்ந்து நிற்கின்றன இன்று! இத்தனை கட்டிப் பெருமையில்லாமலே எத்தனை வேலைகளை எவ்வளவு நிறம்படச் சாதித்திருக்கிறது இந்தச் சர்வகலாசாலை அந்த நாளிலே!

டிராம் வண்டிகள் சென்னைத் தெருக்களிலே கலகலவென்று ஓடிக்கொண்டிருந்த காலமும் பலருக்கு நினைவு இருக்கும். அந்தக் காலத்தில் இந்தியக் காடுகளில் ஆசிரமங்கள் அமைத்துக் கொண்டு முனிபுங்கவர்கள், ரிஷி சிரேஷ்டர்கள் வசித்து வந்தார்கள் என்றும், அவர்கள் ஆசிரமங்களை அணுகுகிறவர்கள் காதில் வேத கோஷம் விழுந்து ஆசிரமங்களின் இருப்பிடத்தை அறிமுகப்



# அன்றும் இன்றும்



அன்று வானமே கூரை; நடுத் தெருவே பழக்கடை; பேரம் பேசிப் பழ வியாபாரம் நடக்கும். இன்று புரூட் மார்க்கெட்டில் கட்டடம் எழுப்பப்பட்டுக் கடைகளில் 'ஆள்பாதி ஆடை பாதி' மாதிரி அழகிய வர்ணத் தாள்களில் பழங்களைச் சுற்றி விற்றால் அந்த மவுசு தனி தான். எத்தனை விலை சொன்னால்தான் என்ன? வாய்மூடி அவற்றை வாங்கி வரும்படியல்லவா செய்து விடுகிறது!

படுத்தும் என்றும் கேள்விப்படுகிறோம். - பார்த்தறியோம். சென்னையில் டிராம் வண்டிகள் கலகலத்தது (அல்லது கணகணத்தது) ஒரு நாற்பது ஆண்டுகளுக்கும் அதிகமாக. சிறப்பாகவே சொல்ல வேண்டிய விஷயம். ஓர் ஆறு மாதங்கள் நான் வால்டாக்ஸ் ரோடில் சைனா பஜார் திரும்பும் மூலையில் ஒரு வீட்டு மாடியில் அறை வைத்துக்கொண்டு குடியிருந்தேன். அந்தத் திவ்வியமான டிராம் திருப்பச் சத்தத்தைக் கேட்டுக் கேட்டுப் பண்பட்ட எனக்கு அரைத் தூக்கத்தில், நள்ளிரவில் டிராம் வண்டிகள் சிங்கங்களாக மாறிக் கர்ஜிப்பது காதில் விழும். பின்னர்தான் ஒருநாள் அது மனப் பிராந்தியும் அல்ல, கனவும் அல்ல, ரயில்வே லேனுக்கப்பாலிருந்த உயிர் காலேஜ் சிங்கங்கள்தான் கர்ஜிக்கின்றன என்று தெரிந்து கொண்டேன்.

சென்னைப்பட்டினத்தை இன்றைய கண்கொண்டு மட்டும் பார்த்தால் போதாது. சரித்திரக் கண்கொண்டும் பார்க்க வேண்டியது அவசியமாகும். திருவள்ளுவர் காலத்திலிருந்து திருவள்ளுவர் கோயில் கொண்டுள்ள ஸ்தலம் இன்றும் அதே காலத்ததாகத்தான் இருக்கிறது.

மூர்மார்க்கெட்டிலோ சைனாபஜாரிலோ சாமான் வாங்கினால் நாட்டுப்புறத்தான் ஏமாற்றப்படுவான் என்று நம்பிய காலம் ஒன்று உண்டு. இப்போது நாட்டுப்புறத்தான் மட்டுமல்ல, நகரத்தானும் கூடத்தான் மூர்மார்க்கெட்டிலும் சைனா பஜாரிலும் மட்டுமின்றி, பட்டினத்தில் எங்குமே ஏமாறவேண்டியதுதான். அதே அளவில் தஞ்சாவூர் மைனர் பிராமணப் பையன்கள் சென்னைக்கு வந்து, முஸ்லீம் ஹோட்டலில் தைரியமாக ம சாப்பிட்டுவிட்டு ஊர் திரும்பிய பிரதாபத்தைத் தங்கள் சக வயதினர்களிடம் ஊரிலே அளப்பார்கள், அந்த நாட்களில். கார்க் முனை சிகரெட்டுகள் வந்திருந்த காலத்தில் புதிதில் கிராமத்துப் பையன்கள் இருட்டில் சிகரெட்டைத் தப்பான முனையில் பற்ற வைத்துக் கார்க் புகையை ஆனந்தமாகப் பிடித்து அநுபவித்த காலம் அது. இந்த நாகரிகமெல்லாம் சென்னையில் தொடங்கியதுதான். பீடி, ஐஸ் கலர், சோடா, சினிமாவுக்குக் கியூ நிற்பது, ஹோட்டல் சகோதரத்துவம் எல்லாமும் பட்டினத்திலே தொடங்கியதுதான். இட்டிலி வடை சாம்பார் சாப்பிடுவதும் இங்கு தொடங்கியதுதான். மசால் தோசை நாகரிகம் மைசூரிலிருந்து வந்தது என்று எண்ணுகிறேன். இட்லி தோசைக்கு நெய் என்று ஏதோ ஒன்றைப் போட்டுக் கொண்டு அநுபவிப்பதும் (அவதிப்படுவதும்) இங்கு தொடங்கிய காரியம்தான்.

இப்படி நமது காரியங்களிலே சென்னைப்பட்டினம் சர்வ செல்வாக்கும் வகிக்கிறது. என்றாலும் சென்னையில் வாழ்வது பற்றி நாம் ஏதோ குறைப்படுவது போலத்தான் இருக்கிறது. திருப்தியோ நிறைவோ இல்லாத மாதிரி இருக்கிறது. இதற்குக் கூவம் மட்டும்தான் காரணம் என்று சொல்கிற நண்பர்களை நான் பூரணமாக நம்புவதில்லை. பட்டினத்துக்கென்று மற்ற சின்ன ஊர்களுக்கும் இருப்பது போன்ற ஒரு ஸ்தல புராணம் இல்லாததுதான் காரணம் என்று எனக்குத் தோன்றுகிறது. 'மதி மோசக் களஞ்சியம்' அல்லது சென்னையில் இந்த இந்த விதத்தில் நீங்கள் ஏமாற்றப்படலாம் என்று 1929 வாக்கில் ஒரு நூல் வெளிவந்தது. அதை ஸ்தல புராணம் என்று நான் ஏற்றுக்கொள்ள மாட்டேன். கேவலம் வசனத்தில் உள்ள ஒரு நூல் எப்படி ஸ்தல புராணமாக முடியும்! சென்னைப்பட்டினத்துக்கு அதி அவசரத் தேவை ஒரு கவி. ஒரு காவியம் படைத்து விட்டோமானால் சென்னைப்பட்டினம் உலகில் அதற்குரிய ஸ்தானத்தை எட்டிவிடும் என்பதில் எனக்குச் சந்தேகம் சிறிதும் இல்லை.

# அவள் பெருமையுடன் போற்றும் உடைமைகளில்

## ஒன்று உஷா தையல் மெஷின் ...



உஷாவின் உதவியால் அவளது குழந்தைகள் தங்கள் புதிய யூனிபாரம் உடைகளில் மகிழ்ச்சியுடன் திகழ்கிறார்கள். தாய்க்கோ, அவ்வுடைகளைத் தானே தைத்துக் கொடுத்த பெருமை. உஷா வாங்கியது ஒரு புத்திசாலித்தனமான முதலீடு. மேலும் அதிகமான புதிய உடைகளை குறைவான செலவில் தைக்க உதவுகிறது.

இது தவிர ஓய்வு நேரத்தை உற்சாகமாகக் கழிக்கவும் அற்புதமான வாய்ப்பு. தொந்தரவற்ற உஷாவில் தைப்பதே ஓர் ஆனந்தம். இதன் காரணமாகவே ஐம்பதுக்கு மேற்பட்ட நாடுகளிலுள்ள மாதர்கள் உஷா வாங்கி வைத்துக் கொள்வதில் பெருமையடைகிறார்கள்.

நவநாகரீக முறையில் தைக்கக் கற்றுக்கொள்ளுங்கள். நாடு முழுவதிலும் 1200க்கு மேற்பட்ட உஷா எம்பிராய்டரி, தையல் பள்ளிக்கூடங்களும் 2400க்கு அதிகமான உஷா விற்பனை மற்றும் சர்வீஸ் கேந்திரங்களும் உள்ளன.

சுலபமாகத் தைக்கலாம்—

**உ ஷா**

வில் தையுங்கள்



ஜெ (JAY) தயாரிப்பு

JESM/G/668

ஜே என்ஜினீயரிங் ஒர்க்ஸ் லிமிடெட், கல்கத்தா - 31



# பூமாலை

ஆணைப் பொழுதில் தோன்றி மறையும் வெறி புணர்ச்சி அவனை மிருகமாக்கி விட்டது. அந்த வெறி புணர்ச்சிக்கு இரையானவள் பூமாலை. தன்னையும் மீறி ஏற்பட்டுவிட்ட விபரீதச் செயலின் பலனை அவள் தன் வயிற்றிலும் உள்ளத்திலுமாகச் சுமந்தாள். உள்ளச் சுமை இறங்கவில்லை; ஆனால் வயிற்றுச் சுமை யாருக்காகவும் காத்திருக்கவில்லை; உரிய காலத்தில் ஆண் மகவாய்ப் பிறந்தது. அவனையும் மீறி ஏற்பட்டுவிட்ட விபரீதச் செயலுக்கு அவள் பொறுப்பாக மாட்டாள் என்று தந்தை கூற, அவள் தமையன் அவளுக்கு மணம் செய்து வைக்கிறான். தெய்வாதீனமாக அவள் கணவன் முன்பு அவளைக் கெடுத்தவனாகவே இருந்துவிடுவதுதான் 'பூமாலை' படத்தைச் சிக்கல் இல்லாமல் முடித்து வைக்கிறது.

இது மிகவும் 'டிபிகல்ட் சப்ஜெக்ட்'. மு. கருணாநிதி இதற்குத் திரைக் கதை, வசனம் திறமையாகத் தீட்டியிருக்கிறார்.

பூமாலையாக வந்து ஆடிப் பாடி, வாடி வதங்கி அற்புதமாக நடித்திருக்கிறார் விஜயகுமாரி. உள்ளத்தில் பழியையும், வயிற்றில் பிள்ளையையும் சுமந்து கொண்டு தவிக்கும் ஒரு பெண் எப்படியெல்லாம் வேதனைப்பட்டுத் துடிப்பாள் என்பதை விஜயகுமாரியைப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம்.

தான் ஓர் அபலைப் பெண்ணுக்குச் செய்த தீராப் பழியை நினைந்துகொள்ளும் போதும், கடைசிக் காட்சியில் தன் மனைவியிடம் தன்னைப் பற்றிக் கூறிக் கொள்ளும் போதும் எஸ். எஸ். ஆரின் நடிப்பு நன்றாயிருக்கிறது.

எஸ். எஸ். ஆரின் அக்காவாக வரும் அஞ்சலி தேவி அற்புதமாக நடித்திருக்கிறார்.

நாகேஷ் - மனோரமாவின் தமாஷ் காட்சிகள் சோகக் கதையின் கனத்தை இலகுவாக்குகின்றன.

ப. நீலகண்டன் படத்தை நன்றாய் டைரக்ட் செய்திருக்கிறார்.

பூமாலை துணிந்து புனைந்த சித்திரம். நீண்ட நெடுங்காலமாக நம் நாட்டிலுள்ள பழம் பெரும் பிரச்னையைக் கதையாகப் புனைந்து மாலையாகத் தொடுத்திருக்கிறார்கள். பூமாலையின் புதுமணம் நாடு நகரமெல்லாம் பரவிப் பலன் தருமானால் யார் வேண்டாம் என்பார்கள் !

# எங்க வீட்டுப் பெண்

'இந்தக் காலத்துச் சிறுசுகள் பெரியவங்களுக்கு ஒண்ணுமே தெரியாதுன்னு நெனைக்குதுங்க. நாங்களும் இவங்களைப் போல் இருந்தவங்க தாங்கறதை மறந்துடறாங்க.'
— ராதா பேசும் ஒரு வசனம்

இந்தக் காலத்துப் படாதிபதிகள் ரசிகர்களுக்கு ஒண்ணுமே தெரியாதுன்னு நெனைச்சுடறாங்க. இந்த மாதிரிக் கதைங்களை எத்தனை வருஷமா எத்தனை படங்களிலே பார்த்திருப்போம்ங்கறதை மறந்துடறாங்களே!
— ஒரு ரசிகர்

'எதுக்கு இந்த ஜோக்குலே
எங்களுக்குப் பார்க்கச் சகிக்கல்லே...'

— இரு நாகேஷ் ஹாஸ்ய பாகத்தில் பாடும் பாட்டைக் கேட்டு, அதைப் பார்த்த போது வெறுப்பினால் குப்பன் மனத்தில் எழுந்த சங்கடக் கவிதை இது.

நல்ல நடிப்பும், டைரக்ஷன் திறமையுமுள்ள ஒரு படத்துக்குக் கதையோடு ஒட்டாத பொருத்தமற்ற விரசம் நிறைந்த ஹாஸ்யம் தேவையா? இவ் வகை ஹாஸ்யமில்லாத படங்களை நம் மக்கள் ரசிக்க மாட்டார்கள் என்று தப்புக் கணக்குப் போடும் நம் படாதிபதிகளைப் பற்றி என்னவென்று சொல்வது?

விஜயாவின் பட்டுக் கொடி இந்தப் படத்தில் படபடத்துப் பறக்கா விட்டாலும் விஜய நிர்மலா இந்தப் படத்தின் மூலம் சினிமா வானின் உச்சிக்கு வந்து ஒளி வீசுவார் என்று கூசாமல் கூறலாம். நல்ல முக வெட்டு, கண்ணியம் நிறைந்த கவர்ச்சியான தோற்றம். நல்ல வைரம். ஆனால் பட்டை தீட்டியாக வேண்டும், பளபளக்க!

ஒலி, ஒளிப்பதிவுகள், காட்சி ஜோடனைகள் நன்றாக இருக்கின்றன என்று விஜயாவின் படத்துக்கு விமரிசனம் எழுதுவது சர்க்கரை தித்திக்கும் என்பதைப் போலத்தான்.

அதே போலக் கவிஞர் கண்ணதாசனின் பாட்டுகளெல்லாமே வெற்றி பெற்றுவிடும் என்று எண்ணுவதும் தவறுதான்.

எங்க வீட்டுப் பிள்ளை — சொன்னை போகவில்லை; ஆனால் பெண்ணோ? அவளைப் பொறுப்பாக வளர்க்கவில்லை என்றுதான் குற்றம் சாட்ட வேண்டியிருக்கிறது.





# கவி பாடின கற்கள்

சிற்பி ஒருவனின் வாழ்க்கைப் பகைப்புல னாகக் கொண்டு புனையப்பட்ட கதை. திரையுலகச் சிற்பியின் சிற்றுளிச் செதுக்கல்களுக்கு இலக்காகித் திரைச் சிற்பமாகத் திகழும் கதை.

கதைச் சுருக்கம் இதுதான் :

சிற்பி ஒருவனின் சிற்பங்களுக்கு மாதிரியாக நிற்பதோடு அவன் இதயத்திலும் இடம் பெற்று வாழ்க்கைத் துணைவியாகிறாள் ஓர் இளநங்கை. அவனை வளர்த்த அன்னையோ.......? அவனைக் கொண்டு பணம் சுட்ட ஆசை கொண்டவள். அதற்கு ஒரு தனவந்தன் கருவியாக வருகிறான்.

தில்லிவாழ் தனவந்தர் ஒருவரின் மனத்திலே சிற்ப மாளிகை ஒன்று எழுப்ப வேண்டும் என்ற ஆசை தோன்றுகிறது. பிள்ளைப் பிராயத்திலே, காணாமற் போய்விட்ட தன் மகள் எப்படியும் திரும்பி வருவாள் என்ற அசையாத நம்பிக்கையிலே. அது வீண் போகவில்லை.

இளம் சிற்பி இப்பணியை ஏற்க வருகிறான். பிறகு என்ன? காதலர் பிரிவு, சந்தேகம், சோகம், தாபம் ஆகிய கட்டங்கள் வலுப்பெறுகின்றன. அதே தனவந்தர் வீட்டுக்குச் சமையற்காரியாக வருகிறாள் சிற்பியின் மனைவி. அது மட்டுமா? மீண்டும் சிற்பியின் மனைவியாகித் தனவந்தரின் மகளுமாகிக் கதையைச் சுபமாக முடிக்கிறாள்.

இப்படியாகத்தானே கதை திரைப்படக் கதைகளுக்குரிய சகல இலட்சணங்களும் இம்மிகூடப் பிசகாமல் பொருந்தி அமைந்தாலும் ஓர் அதிர்ஷ்டம் செய்திருக்கிறது. 'கீத் காயா பத்தரோன்னே!' என்ற தலைப்பில் சாந்தாராமின் கைத்திறனால் ஒளிருகிறது. பழைய மாடல் வண்டியையும் இயந்திர நுட்பங்கள் அறிந்த மெகானிக் திறம்பட இயக்க வைப்பது போலச் சாந்தாராம் இந்தப் படத்தை இயக்க வைத்திருக்கிறார். உணர்ச்சிகளையும் சூழ்நிலைகளையும் மெருகூட்டி, குறைபாடுகள் தென்படும் இடங்களைத் தட்டிக் கொட்டி வர்ணம் தீட்டிப் புதிது போன்ற பிரமையை உண்டுபண்ணுகிறார்.

கதாநாயகியாக வரும் ராஜஸ்ரீ, கதாநாயகனாக வரும் ஜிதேந்திர என்ற புது முகம், நானுபாலின் கார், சிற்பியின் மகனாக வரும் பப்லு என்னும் பாலகன் ஆகியவர்கள் பாத்திரங்களின் பண்பறிந்து நடித்துப் படத்துக்குப் பெருமை சேர்த்திருக்கிறார்கள்.

ஆயினும்.......?

ஒருமைப்பாட்டைப் பற்றி மார் தட்டிக் கொள்ளும் ஹிந்திப் படக்காரர்கள் தென்னிந்தியர்களைச் சித்திரிக்கும் முறை, அதை வளர்ப்பதாக அமையாமல் கேலிக்கிடமாகவே அமைந்து வருகிறது. ஒருமைப்பாடு என்னும் சொல் ஓங்கி ஒலிக்கிறதேயொழிய அதன் தூய்மையைச் சாந்தாராமிடத்தும் காண முடியவில்லை என்பதை வருத்தத்துடன் கூறத்தான் வேண்டியிருக்கிறது.

மொத்தத்தில் சர்வசாதாரணக் கதை சாந்தாராமின் டைரக்ஷனில் பிழைத்தெழ முயல்கிறது என்று கூறலாம்.



# களம் கண்டேன்

எஸ்.எஸ். மாரிசாமி எம்.பி

## பாட்டன் பட்ட பாடு!

'ஓடு, ஓடு' என்றார்கள் நண்பர்கள். பழைய தில்லி ரயில்வே நிலையம் திமிலோகப் படும்படி ஓடினோம்.

நான்காவது பிளாட்பாரம் நெருங்கியதும் தான் எங்களது ஓட்டத்தின் வேகம் குறைந்தது.

நாங்கள் ஏறிச் செல்வதாக இருந்த 'எல்லைப்புற மெயிலுக்கு' இன்னும் இஞ்சினே வந்து சேரவில்லை!

மேல் மூச்சோடு கீழ்மூச்சு போட்டியிட ஓடி வந்த நண்பர்கள் சிரித்தார்கள். வண்டி ஒரு மணி நேரம் தாமதமாக வருமென்று அறிந்த போது அவசரத்தில் விட்டு வந்த சாமான்களையும் மற்றவற்றையும் நினைத்துக் கொண்டு பரிதாபப்பட்டுக் கொண்டோம்.

காக்கி நிற ஆடையணிந்த துருப்புகள் நடமாட்டம் மிக மிக அதிகம். ரயில்வே நிலையமே அவர்கள் ஆதிக்கத்துக்கு வந்து விட்டதோ என்ற பிரமை.

குறிப்பிட்ட நேரத்துக்குப் பின் பல நிமிடங்கள் கடந்து ரயில் கிளம்பியது. அலுத்துப் போன எங்களுக்கு ரயில் கிளம்பியதும் தூக்கம் தான் வந்தது.

மறு நாள் அதிகாலை. 'ஜலந்தர்—ஜலந்தர்' என சகப் பிரயாணிகள் கூப்பாடு போட அந்தச் சிக்கியப் பட்டணத்தில் இறங்கினோம்.

இங்கும் திரும்பிய பக்கமெல்லாம் காக்கி நிறம்தான். கம்பீர நடை போடும் ஜவான்களையும், அவர்கள் பின்னால் வரும் அதிகாரிகளையும் கண் குளிரக் கண்டோம். ஆனால் வந்தவர்கள் எங்களுக்காகத்தான் வருகிறார்கள் என்பது முதலில் தெரியவில்லை.

ராணுவ அதிகாரிகளும் சிவில் அதிகாரிகளும் எங்களை வரவேற்றுக் காலை ஆகாரம் வழங்கினார்கள். அதை முடித்துக் கொண்டதும் ராணுவ லாரிகளில் ஏறிக் களம் சென்றோம்.

இதுதான் பாகிஸ்தான் குண்டு வீச்சுக்கு உள்ளான 'கர்த்தார்பூர்' என்றார்கள்.



அமிருதஸரஸ் ஜில்லாவிலுள்ள ஒரு நகரத்தின் பகுதிகள் பாகிஸ்தானின் வெடிகுண்டுகளால் நாசமாயின.



பாகிஸ்தானின் குண்டு வீச்சினால் கிராமத்தில் கட்டடங்கள் அழிந்த

பைத்தியக்கார பாகிஸ்தானியர்களின் கைவரிசையைக் கண்டு சிரித்தோம். அவர்களுக்கு மரங்கள் மீதும் பயிர் பச்சைகள் மீதும் ஏன் தான் இவ்வளவு கோபமோ? ஒரு மரம் செடியைக்கூட விடவில்லை. கண்ணை மூடிக் கொண்டு குண்டுகளைப் போட்டிருக்கிறார்கள்.

கர்த்தாப்பூர் தாண்டியதும் இந்திய தேசியத்தின் பிறப்பிடம் எனக் கருதப்படும் அமிர்தசரஸ் வந்தோம். ஊரின் மத்திய பகுதியில் அழகிய சிலை ஒன்று எங்களை வரவேற்றது. பளிங்குச் சிலையை உற்றுப் பார்த்தபோதுதான் நேதாஜி சிலை என்பது தெரிந்தது. வீரர்கள் பட்டணத்தில் வீரர் சிலை இருப்பது எவ்வளவு பொருத்தம்!

அதோ 'பாட்டன் — பாட்டன்' என்று ஒரு குரல் எழுந்தது. 'யாருடைய பாட்டன்? இங்கு எங்கு வந்தான்' என்று வினவியபோது, 'அதோ, அதோ' என்ற குரல்கள் எழுந்தன. பாட்டன் டாங்கிகளைத் தான் அப்படி 'பாட்டன்' என்று அவர்கள் அழைக்கிறார்கள் என்பது தெரிந்தது.

அமிர்தசரஸ் காங்கிரஸ் மகாநாடு நடந்த வரலாறு நமக்குத் தெரியும். அந்த இடத்துக்கு அருகில் ஒரு முக்கோண வடிவத்தில் சதுக்கம் ஒன்று உள்ளது. இச் சதுக்கத்துக்குத் தியாகிகள் சதுக்கம் என்று பெயர். அந்தத் தியாகிகள் சதுக்கத்தில்தான் மக்கள் காணப் பிடிபட்ட 'பாட்டன்' ஒருவர் நிற்கிறார். ராக்ஷஸ உருவத்துடன் நிற்கும் அந்த டாங்கி, பார்த்தாலே பயத்தைத் தரக் கூடியது. சுமார் 13 அடி நீளத்தில் பீரங்கிக் குழாய் ஒன்று டாங்கியின் முன் துருத்திக் கொண்டு நிற்கிறது.



லாகூர் பகுதியில் பிடிக்கப்பட்ட பாட்டன் டாங்கிக்கு அருகே லெப்டினன்ட் ஜெனரல் டில்லானும் பாரதப் பிரதமர்

இந்தப் பீரங்கியை எப்படியும் திருப்பலாம். இதன்மூலம் வானில் பறக்கும் விமானத்தைச் சுடலாம். தரையில் ஊர்ந்து வரும் எதிரி டாங்கிகளைத் தகர்க்கலாம். பக்கவாட்டில் வருகிற படை மீதும் சுடலாம். அத்தகைய நாலா பக்கமும் திருப்பக் கூடிய பீரங்கி. இந்தப் பீரங்கிக்கு அடியில்தான் டாங்கியின் முகப்பு. இந்த முகப்புக்கு உதாரணமாக எதையும் கூற முடியாது. மலைகளில் காணப்படும் சிறு சிறு குன்றுகளைப் பார்த்திருக்கிறோமல்லவா? அந்தக் குன்று ஒன்றைத்தான் பெயர்த்து முகப்பில் வைத்திருக்கிறார்கள். இதன் கனம் ஓரடி. உயரம் சுமார் ஐந்தடி. இதன் எதிரே நின்று சுட்டால் குண்டு முகப்பில் பட்டுத் தெறிக்குமே தவிர உள்ளே நுழையாது. நாணல் குச்சியால் யானையின் மத்தகத்தில் அடித்தால் என்ன பலனளிக்குமோ அந்தப் பலன் தான் துப்பாக்கியால் சுட்டால் இருக்கும். அத்தகைய காட்டு யானை இந்த டாங்கி.

இந்த டாங்கியின் உள்ளே இறங்கிப் பார்த்தோம். திரும்பிய பக்கமெல்லாம் சின்னச் சின்னக் கருவிகளும்

ஸியால்கோட் பகுதியில் பாகிஸ்தானியரிடமிருந்து கைப்பற்றப்பட்ட பாட்டன் டாங்கியின்மீது நிற்போரில் மையத்திலிருப்பவர் ஜம்மு காஷ்மீர் கவர்னர் கரண்ஸிங்

அமிர்தஸரஸ் ஜில்லாவிலுள்ள ஒரு
துடன் ஆடு மாடுகளும் பலியாயின.





கடிகாரங்களும் விசைகளும் பொத்தான்களும் இருக்கின்றன. இவற்றின் உபயோகத்தை யெல்லாம் ஓர் அதிகாரி வர்ணித்த போது, வியப்பாக இருந்தது. பாகிஸ்தானியர்களுக்கு அமெரிக்கர்கள் டாங்கிகளைத் தரவில்லை; நடமாடும் இரும்புக் கோட்டைகளையே தந்திருக்கிறார்கள் என்ற உணர்வு ஏற்பட்டது. இருந்த போதிலும் நமது ஜவான்கள் இந்தக் கோட்டைகளை அப்பளத்தை நொறுக்குவது போல் நொறுக்கியிருக்கிறார்கள் என்றதும் எங்களுக்கு ஏற்பட்ட பெருமையை வர்ணிக்க இயலாது.

விஷயம் தெரிந்த ஒருவர் டாங்கிகள் ஒழிப்புப் படலம் எப்படி நிகழ்ந்தது என்பதை விளக்கினார்:

''மலை புரண்டு வருவது போல் பாட்டன் மார்கள் வந்தார்கள். முதலில் நம்மவர்கள் மலைத்தார்கள். ஆனால் சிறுகச் சிறுக மலைப்பு தணிந்தது. ஒருசில ஜவான்கள் துணிந்து டாங்கிகளை நெருங்கினார்கள். நெருங்கியவர்களின் நெஞ்சுரம் இருக்கிறதே, உலகப் போரில் இதுவரை கண்டுராத உரமாகும். டாங்கியின் முகப்பில் ஒரு கதவு இருந்தது பார்த்தீர்களா? அதுதான் உள்ளே போகவும் வெளியே வரவும் உள்ள ஒரே வழி.

''இந்தத் துவாரத்தை உள்ளே யிருந்தும் வெளியே இருந்தும் திறக்கலாம். இதை அறிந்த நமது ஜவான்கள், நத்தை ஊறுவது மாதிரி ஊர்ந்து சென்று மிகத் துணிச்சலாக டாங்கி மீதே ஏறி விட்டனர். பிறகு மேற்கதவைத் திறந்து கைக்குண்டுகளைப் போட்டனர். பிறகு என்ன நடந்திருக்கும்?''

விளக்கம் தேவையில்லை என்பதற்கு எதிரே நின்ற டாங்கியே சாட்சியம் கூறியது.

இன்னும் சில டாங்கிகள் வேறுவிதமாக அழிக்கப்பட்டிருக்கின்றன:

''இந்த டாங்கிகள் வரும்போது பயங்கர இரைச்சல் கேட்குமாம். அதோடு புழுதி மயமும் கிளம்பும். உள்ளே இருக்கும் பாகிஸ்தானியன், மிக மிதப்பில் இருந்திருக்கிறான். அதாவது தன்னையோ டாங்கியையோ அழிக்கும் சக்தி உலகிலேயே இல்லை என்ற நம்பிக்கை அவனுக்கு. எனவே, சிறிது தூரம் முன்னேறி, சில குண்டுகளை வெடித்து, பல சேதங்களை விளைவித்ததும் அவனுக்கு உற்சாகமும் வெறியும் எல்லையைக் கடந்து விடும். எதிரிகளான இந்தியப் படையினர் தலை தெறிக்க ஓடுவதாகத் தானே கற்பனை செய்து கொள்ளுவான். அந்தக் களிப்பில், ஓடுகிற இந்தியர்களைக் காண அவன் மேல் கதவைத் திறந்து எட்டிப் பார்ப்பானும். இதை எதிர் பார்த்துப் பதுங்கியிருக்கும் இந்திய ஜவான் சும்மா இருப்பாரா? கையிலே இருக்கும் துப்பாக்கி அலறும். மறுகணம், டாங்கியின் மூடி மீது பாகிஸ்தானியின் முடி உருளும்....

மற்றொரு முறை இன்னும் ஆச்சரியமானது.

''இந்த டாங்கிகள் கல்லானாலும் முள்ளானாலும் புழுதியானாலும் ஓடும். மேட்டில் ஓடுவதோ பள்ளத்தில் இறங்குவதோ இதற்குச் சர்வ சாதாரணம். ஆனால் ஜெனரல் பாட்டன் இந்த டாங்கை நிர்மாணிக்கும்போது மற்றோர் உண்மையை மறந்திருக்க வேண்டும். அதாவது ஈரச் சகதியில் இந்த டாங்கிகள் ஓடுவதற்கு வழி செய்திருக்க வேண்டும். அப்படிச் செய்யவில்லை என்பதை இந்திய ஜவான்கள் கண்டுபிடித்திருக்கிறார்கள். உடனே என்ன செய்திருக்கிறார்கள் தெரியுமா? சிறு ஓடைகளைத் திருப்பிவிட்டு ரஸ்தாக்களைக் களறிச் சகதியாக ஆக்கியிருக்கின்றனர். பாகிஸ்தானியன், கையிலுள்ள பூகோள படத்தோடு வந்திருக்கிறான். படமோ ரஸ்தாவைக் காட்டுகிறது. படம் பொய் சொல்லுமா என்று நினைத்து வந்தவன் சகதியில் மாட்டிக் கொள்ளுகிறான். பிறகு டாங்கி இரைகிறதே தவிர நகர மறுக்கிறது. நகர மறுத்ததும் பாகிஸ்தானிக்கு வயிற்றைக் கலக்குகிறது. கலக்கத்தோடு பாகிஸ்தானியன் படை வரிசையில் நின்றதாகச் சரித்திரமில்லை. எனவே மூடியைத் திறந்துகொண்டு, ''அபயம், அபயம்'' என்று சரணம் போட, நம்மவர்கள் ''தந்தோம், தந்தோம்'' என முழக்கமிடப் பல பாட்டன் டாங்குகள், எள்ளு முனை கூட உடையாத முறுக்குகள் போல் பிடிபட்டிருக்கின்றன.

'இங்கே பாருங்கள், இங்கே பாருங்கள்' என்றார் ஒரு வட இந்திய நண்பர். டாங்கியின் முன்புறத்தில் ஒரு பெரிய ஓட்டை தெரிந்தது. அதைப் பற்றி விசாரித்தபோது சொன்னார்கள்:

''நமது பீரங்கிப் படையின் சாதனை இது. வெல்ல முடியாது என்று கீர்த்தி பெற்ற இந்த டாங்கியின் அமைப்பை நமது பீரங்கிப் படையினர் கவனித்தனர். சகதியில் சிக்கிச் சரணடைந்த ஒரு டாங்கி அவர்களின் தீவிர சோதனைக்கு உள்ளாகியது. அதன் பிறகு அவர்கள் இந்தக் குறிப்பிட்ட இடத்தில் சுட்டால் குண்டு பிய்த்துக் கொண்டு உள்ளே செல்லும் என்ற முடிவுக்கு வந்தனர். பிறகு என்ன நடந்திருக்கும்? மதராஸியினர்தான் பீரங்கிப் படையில் மிக அதிகம். அவர்கள் குறிக்குத் தப்பக் கூடியது எது? பல பாட்டன் டாங்குகளை இப்படிச் சுட்டுத் தள்ளினார்கள்....''

மதராஸி என்றதும் சப்பாத்திக்குப் பதில் சாம்பார் சாதம் கிடைத்தால் எப்படி யிருந்திருக்குமோ அப்படி இருந்தது எனக்கு.

வட இந்தியர் என்று நாம் எப்படி மொத்தமாக எல்லா வடநாட்டாரையும் அழைக்கிறோமோ அப்படி வடநாட்டாரும் ஆந்திரம் மைசூர், தமிழகம், கேரளம் ஆகிய மாநில மக்களுக்கு 'மதராஸி' என்று மொத்தப் பெயரிட்டிருக்கின்றனர். இராவிட மொழி பேசும் இவர்கள் சாதனையும் இந்தப் போரில் சாமானிய சாதனையல்ல. வடக்கே செல்லும் எந்த மதராஸியும் தலைநிமிர்ந்து நடக்கலாம். அதிலும் ஜலந்தர், அமிர்தசரஸ், அதேபோல் அம்பாலா, லூதியானா போகிறவர்கள் ரயில் டிக்கட்டுக்கு மட்டும் காசு வைத்திருந்தால் போதும். சுட்ட ரொட்டி, பால், மிட்டாய், சாயா எல்லாம் சும்மாகூடக் கிடைக்கும். மேலும் 'மதராஸ் ராஜு'வுக்குத் தம்பி, அண்ணன் என்றால் டிக்கட்கூட வாங்கித் தருவார்கள் போலும். ஏனெனில் மதராஸ் ராஜுவின் குறி, பல பாகிஸ்தானி ஜெட் விமானங்களுக்கும், அமெரிக்க விமானங்களுக்கும் எமனாக இருந்திருக்கிறது.


ஆரோக்
கியமான.
பளபளக்கும்
கூந்தலுக்கு . . .




Tata's
Perfumed
HAIR OIL
COCONUT
LAVENDER

# வெற்றித் திருநகர்

அகிலன்

## அத்தியாயம் ஆறு

## வீரனைக் கண்டாள்

**வி**சுவநாதனை அழைத்துச் சாளுவ நரசிம்மரைப் பற்றி விசாரித்து விட்டு, ''அரண்மனையில் நடந்திருக்கும் நிகழ்ச்சிகளைப் பற்றி அவர் ஏதும் கூறினாரா?'' என்று கேட்டார் நாகம நாயக்கர்.

விசுவநாதனுக்கு அப்போதுதான் அவனுடைய தவறுதல் புலப்பட்டது. 'மறந்தே போய் விட்டோம்' என்று நினைத்துக் கொண்டு ''மாமா ஒன்றும் கூறவில்லை: தங்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம் என்று வந்து விட்டேன்'', என்றான்.

''நீ தெரிந்து கொள்ள வேண்டிய முதற் செய்தி, இப்போது அப்பாஜி அமைச்சராக இல்லை என்பது. அப்பாஜியும் அவருடைய குமாரர்களும் இப்போது சிறையில் இருக்கிறார்கள்.''

''என்ன! அப்பாஜி சிறையிலிருக்கிறாரா?'' திடுக்கிட்டான் விசுவநாதன்.

''மரண தண்டனை பெற்று இந்த மண்ணிலிருந்தே மறைந்திருக்க வேண்டியவர்



அப்பாஜி. சக்கரவர்த்திகள் கருணை காட்டியதால் இன்னும் அவர் உயிரோடிருக்கிறார்.''

விசுவநாதனுக்கு ஒன்றுமே புரியவில்லை. அப்பாஜி வெறும் அமைச்சராக மட்டும் இருந்தவரில்லை. சக்கரவர்த்திகள் அவரைத் தமது தந்தையாகவே மதித்து, தந்தைக்குரிய இடம் கொடுத்து, 'அப்பாஜி' என்ற செல்லப் பெயரால் அப்பா என்றே அழைத்து வந்தார். அந்தச் சாம்ராஜ்யத்துக்கே தந்தையாக இருந்து அதைக் கட்டிக் காத்தவர் அவர். சக்கரவர்த்தி அவரிடம் வைத்திருந்த நம்பிக்கைக்கு ஓர் எல்லையே இல்லை.

''அப்பாஜிக்குத் தண்டனையா?'' என்று, நம்பாதவன் போல் மீண்டும் கேட்டான் விசுவநாதன்.

''அப்பாஜிதாம் நம் சக்கரவர்த்திகளைப் பிள்ளைப் பிராயத்திலிருந்து வளர்த்து வந்தவர். இந்த நாட்டின் வளர்ச்சிக்கு அவரைப் போல் பாடுபட்டவர்கள் வேறு யாரு

மில்லே. கலிங்கத்தை வென்று அடக்கிப் பணிய வைத்தவர் அவர்தாம். சக்கரவர்த்திகளும் அவர் வேறு தாம் வேறு என்று நினைக்கவில்லே. அப்படியிருந்தவர்...... கடைசியில்.''

''காரணம் என்ன?''

''நீ புறப்படும் போது இளவரசன் திருமலே தேவன் நோய்ப் படுக்கையில் கிடந்தானல்லவா? அவன் இப்போது உயிருடன் இல்லே.''

''அப்பா!'' என்று அவர் கரங்களேப் பற்றிக் கொண்டு கதறி விட்டான் விசுவநாதன். சக்கரவர்த்தியின் குமாரன் திருமலே தேவன் ஆறு வயதே நிரம்பப் பெற்ற சிறுவன். விசுவநாதன் அவனேத் தன் தம்பியாகவே நினேத்து வளர்த்து வந்தான். நோய்ப் படுக்கையில் அவனே விட்டு விட்டுத் தமிழ் நாட்டுக்குச் செல்வதற்கு அவனுக்குத் தயக்கமாகத்தான் இருந்தது. ஆனலும் சக்கரவர்த்தியின் கட்டளே என்பதால் அவன் சென்முன்.

''திருமலேக்கு மருந்தோடு விஷத்தைக் கலந்து கொடுத்து விட்டான் அப்பாஜியின் குமாரன் சிறிய திம்மன். அதற்கு அப்பாஜியும் உடந்தையாக இருந்திருக்கிறுர் என்பது தெரிந்து விட்டது. இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு சக்கரவர்த்திகளின் மன நிலேயே சரியாக இல்லே. மலே குலேந்தாலும் மனம் குலேயாதவர் இப்போது மாறிப் போய் விட்டார்.''

மாலே மாலேயாகக் கண்ணீர் வடித்தான் விசுவநாதன். சக்கரவர்த்தி தமது சாம்ராஜ்யத்தின் எதிர்கால நம்பிக்கை முழுவதையுமே அந்தச் சிறுவன் மீது வைத்திருந்தார். அவன் தம்மிலும் சிறந்தவனுக வரவேண்டுமென்பதற்காக, அந்த வயதிலேயே அவனே இளவரசனுக்கி, அவனுக்கு அமைச்சராகத் தம்மை ஆக்கிக் கொண்டு, அவனே அரசியலில் பயிற்சி பெறச் செய்தார். விசுவநாதனேயும் அமைச்சர் அப்பாஜியின் குமாரன் சிறிய திம்மனேயுமே அவனேடு பழகுவதற்கு அனுமதித்தார்.

''அப்பா! முதலில் நீங்கள் இந்தச் செய்தியை என்னிடம் கூறியிருக்க வேண்டும்'' என்று சற்றுக் கடுமையாகவே அவரிடம் கூறினுன் விசுவநாதன்: ''இளவரசரைப் பறிகொடுத்துத் தவிக்கும் சக்கரவர்த்திகளே முதலில் போய்ப் பார்க்காமல், பதவியில் உயர்ந்தவருக்கு நான் போய் மாலே போட்டு வந்திருக்கிறேன்; என்னல் இந்தச் சிறுமையைத் தாங்க முடியவில்லே; தாங்கவே முடியவில்லே'' என்று அவன் குமுறினுன்.

நாகம நாயக்கர் தலே குனிந்தார். தவறு அவருடையதுதான்; வேண்டுமென்றே அவர் செய்த தவறு அது.

''விசுவநாதா! வந்தவுடன் உன் மாமாவைச் சந்திக்க வேண்டிய நிலே எப்படியோ ஏற்பட்டு விட்டது. ஆண் பிள்ளேயில்லாத அவர் உன்னேயே தம் குமாரனுக நினேத்துக் கொண்டிருக்கிறுர். நீ அவர் மாளிகைக்கு வந்து முறைப்படி அவரைக் கௌரவிக்க வேண்டும் என்பதையும் அவரே கட்டிக்காட்டி விட்டார். இதற்கிடையில் நான் இந்தச் செய்தியைக் கூறியிருந்தால், நீ நேரே அரண்மனேக்குத்தான் சென்றிருப்பாய். நான் செய்த தவறு இது.''

விசுவநாதன் அதற்கு மேலும் அங்கு தங்கவில்லே. அவனுடைய உச்சி முதல் உள்ளங்கால் வரையிலும் பதறியது. தன் குதிரையின் மீது தாவி ஏறினுன். விஜயநகரத்துத் தெருக்களில் அது புயலெனச் சீறிப் பாய்ந்தது. போர்க்களத்தில் பகைவர் மீது பாயச் செல்பவனேப் போல் அவன் தன் புரவியை விரட்டிக் கொண்டு சென்முன்.

சுறுசுறுப்பு நிறைந்த நகரம் விஜயநகரம். தெருவில் நடந்து கொண்டிருந்த மக்கள் கூட்டம் குதிரைக் குளம்பொலி கேட்டுச் சிதறி ஓடியது. கோபத்தோடு சிலர் அவனே வெறித்துப் பார்த்தார்கள்.

குறுகலான ஒரு தெருவில் சிவிகையொன்று போய்க் கொண்டிருந்தது. சிவிகை தூக்குவோர் குளம்பொலி கேட்டுப் பரபரப்படைந்தார்கள். திடீரென்று அவர்கள் ஒடி ஒதுங்குவது கண்டு, அதற்குள்ளிருந்த பெண் ஞெருத்தி பட்டுத்திரையை விலக்கிக் கொண்டு கோபத்துடன் எட்டிப் பார்த்தாள். அவனே விசுவநாதன் கவனிக்கவில்லே. அவன் கவனமெல்லாம் குதிரை போகும் வழியில் நேராகப் பாய்ந்து கொண்டிருந்தது. ஆனல் அவளோ கண்ணிமைக்காமல் அவனேயே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

சிதறி ஓதுங்கிய மக்கள் கூட்டத்திலிருந்து ஒரு சிறுவன் மட்டிலும் குதிரையைக் கவனிக்காமல் குறுக்கே பாய்ந்து ஓடி வந்துகொண்டிருந்தான். நேரடியாகக் குதிரையின் கால்களில் பட்டு மடிந்து விழுவதற்கென்றே விதி அவனே அப்படித் துரத்தியது போலிருந்தது. சுற்றிலுமிருந்த மக்கள் திகைத்துப் போய் நின்முர்கள்.

''போய் விட்டது, குழந்தை!'' என்று கத்தினுர்கள் அந்தப் பெண்ணின் சிவிகை தூக்கிகள். பெண்ணும் அந்தக் காட்சியைத் தான் நெஞ்சு பதைக்கப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

மறு விநாடி மரணத்தின் விநாடி.....

கண்ணிமைக்கும் பொழுதுக்குள் அது எப்படித்தான் நடந்ததோ தெரியவில்லே. மின்னலென விசுவநாதன் குதிரையிலிருந்து சரிந்து, தனது வலக் கரத்தில் அந்தச் சிறுவனேப் பற்றித் தூக்கிக் கொண்டான். அவனது இடது கரத்தில் அகப்பட்ட கடிவாளத்தின் இழுப்பைத் தாங்காமல் குதிரை தனது முன்னங் கால்கள் இரண்டையும் காற்றில் தூக்கியபடி நின்றது.

குதிரையை நிறுத்திக் கொண்டு, அந்தச் சிறுவனே அன்போடு தட்டிக் கொடுத்து, அலறிக் கொண்டு ஓடி வந்த அவன் தாயாரிடம் விட்டான் விசுவநாதன். பிறகு மீண்டும் கிளம்புவதற்குச் சித்தமானுன்.

''நில்லுங்கள்!'' என்ற குரல் அதட்டுவது போல், அந்தச் சிவிகைக்குள்ளிருந்து ஒலித்தது. சிவிகை அவனருகே வந்து கொண்டிருந்தது.

திரும்பிப் பார்த்தான் விசுவநாதன்.

அது அரண்மனேச் சிவிகையை ஒத்திருந்தது. குரல் கொடுத்தவள் திரைக்குள் தன்னே மறைத்துக் கொண்டிருந்தாள். யாரேனும்

# கவர்ச்சியுடன் இருப்பது எப்படி?



பிரமாதமான பருத்திப் ப்ரிண்ட் உடுத்திப் பாருங்கள். புகழ் மாலைகளாய் வந்து குவியும். பிரதியொரு உடை, மனோபாவம், சந்தர்ப்பம் ஆகியவற்றுக்கு ஏற்ற ப்ரிண்டகளைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். சாயம் தோய்த்த ப்ளெயின் பாப்ளின் ரகங்கள் பல உள்ளன. ஷோக்காக, ஜிலுஜிலுவென. அதி கம்பீரமாகத் திகழ உதவுகின்றன. நீண்டகாலமும் உழைக்கின்றன. அணிந்து பார்க்கலாமே!

பருத்தி ப்ரிண்டோ, சாயம் தோய்த்த ப்ளெயின் பாப்ளினோ, எது வாங்கினாலும் ஸயாஜி அல்லது சுபலக்ஷ்மி என்று குறிப்பிடுவது லாபகரமானது.

**ஸாயாஜி மில்ஸ் நெ.1(பரோடா) மற்றும் நெ.2(பம்பாய்)**
**சுபலக்ஷ்மி மில்ஸ் லிட். (கேம்பே)**

SHBI-BP.17 TM

அரண்மனைப் பெண்டிராக இருக்க வேண்டுமென்று நினைத்துக் கொண்டான் அவன்.

''குதிரைகளில் போவோருக்கு மட்டிலும் இந்த நகரத்தின் தெருக்கள் சொந்தமில்லை. வெறி பிடித்த வேகத்தில் போகக் கூடாதென்பது உங்களுக்குத் தெரியுமா? அந்தச் சிறுவன் இறந்து போயிருந்தால்?''

குரலின் ஒலி அவனுக்குப் பழக்கமான ஒலிபோல் தோன்றியது. என்றாலும் பணிவோடு பதில் அளித்தான்.

''விரைந்து சென்றது தவறுதான். என்றாலும் வேகத்திலும் ஒரு கட்டுப்பாடு உண்டு எனக்கு. அந்தச் சிறுவனுக்கு மட்டுமல்ல. வழியில் யாருக்குமே ஆபத்து நேராமல் என்னால் பார்த்துக் கொள்ள முடியும்.''

பளிச்சென்று திரை விலகியது. லட்சுமி வியப்போடு அவனை விழித்துப் பார்த்தாள். விசுவநாதன் கண்ணிமைக்க மறந்தான்.

''எப்படி அவனை உங்களால் காப்பாற்ற முடிந்தது?''

''அவசரமாகச் செல்வதாலேயே எச்சரிக்கையோடு சென்றேன். அவனைக் காப்பாற்றியதொன்றும் கடினமான வித்தை இல்லையே!''

''அப்பா கூறியது போல் நீங்கள் நீறுபூத்த நெருப்புத்தான். மிகவும் பொல்லாதவர் தான்!'' புன்னகை பூத்தவாறு நாணித் தலை கவிழ்ந்தாள் லட்சுமி.

''நான் அரண்மனைக்கு அவசரமாகப் போக வேண்டும்'' என்று அவனுடைய புகழுரையிலிருந்து தப்ப விரும்புகிறவன்போல் கூறினான் விசுவநாதன்.

''நானும் அங்குதான் புறப்பட்டேன். வேகமாகச் சென்றவரைத் தடுத்து நிறுத்தியதற்காக என்னை மன்னித்துக் கொள்ளுங்கள்.''

வேகத்தைக் குறைத்துக் கொண்டு விசுவநாதன் புறப்பட்டான். அவனையே பார்த்துக் கொண்டிருந்து விட்டுப் பிறகு திரைக்குள் மறைந்தாள் லட்சுமி.

சிவிகை திடீரென்று வானத்தில் எழும்பி மேகத்திரளுக்கிடையே பறந்து செல்வது போல் தோன்றியது அவளுக்கு. மின்வெட்டி மறையும் பொழுதுக்குள் அவன் புயலெனப் பாய்ந்து வந்ததையும், லாகவமாகக் குதிரையிலிருந்து இழிந்து வந்து அந்தச் சிறுவனைத் தூக்கியதையும், குதிரையைக் கண்டி இழுத்து அதை இரண்டே கால்களில் நிற்கச் செய்ததையும் அவள் தன் மனத் திரையில் பசுமையாகப் பதித்துக் கொண்டாள். 'எவ்வளவு அலட்சியமாக இந்த வீர சாகசத்தைச் செய்துவிட்டார் இவர்! நவமித் திருவிழாவின்போதுகூட எந்த வீரனுமே இப்படி ஒரு வீர விளையாட்டைத் துணிந்து செய்ததில்லையே!' என்று அவளால் நினைக்காமல் இருக்க முடியவில்லை.

விசுவநாதன் அப்போது வெளிக் கோட்டை மதிலுக்குள் புகுந்து, காவலாளியிடம் குதிரையை விட்டு விட்டு, அரண்மனையின் சூழ்நிலையில் ஏதேனும் மாற்றங்கள் தெரிகின்றனவா என்று திரும்பிப் பார்த்தான்.

## அத்தியாயம் ஏழு

# தியாகக் குரல்

அரண்மனைப் புறமதிலின் உட்புறத்தில் ஒருபுறம் வரிசை வரிசையாக யானைக் கூடங்கள்; மறுபுறம் வரிசை வரிசையாகக் குதிரைக் கொட்டடிகள்; ஆயிரம் யானைகளும் மூவாயிரம் குதிரைகளும் எண்ணற்ற வீரர்களும் புடை சூழ்ந்திருக்க, பெரியதொரு திறந்த வெளிக்குப் பின்னே அரண்மனை எழும்பியிருந்தது.

இளவரசன் இறந்துவிட்டதற்கான சின்னங்களை விசுவநாதனால் எங்குமே காண முடியவில்லை. வழக்கம்போல் யானைகளைக் குளிப்பாட்டுவதற்காக ஆற்றுக்கு அழைத்துச் சென்று கொண்டிருந்தனர் யானைப் பாகர்கள். வீரர்களின் கொட்டில்களில் வழக்கம்போல் போர்ப் பயிற்சி நடைபெறும் ஓசை எழும்பிக் கொண்டிருந்தது. சக்கரவர்த்திகளைத் தரிசிப்பதற்காக வந்திருந்த அமரநாயகர்களின் பல்லக்குகள் வாயிலில் கூட்டமாகக் காத்திருந்தன.

முகப்பு வாயிலுக்குள் நுழைந்த விசுவநாதன் அங்கிருந்த காவலர் தலைவனை அழைத்து ''இளவரசர் இறந்துவிட்டதால் சக்கரவர்த்திகளின் அன்றாட அலுவல்களில் ஏதும் மாற்றம் உண்டா?'' என்று கேட்டான்.

''ஒரு மாற்றமுமில்லை'' என்றான் அவன்; ''அதிகாலையில் எழுந்து வாட் பயிற்சி செய்கிறார்கள்; குதிரைச் சவாரி நடத்துகிறார்கள்; குளித்துப் பூசை செய்துவிட்டு வழக்கம் போலவே அரசாங்க அலுவல்களைக் கவனிக்கிறார்கள். ஒவ்வொன்றும் குறித்தபடி குறித்த நேரத்திலேயே நடைபெற்று வருகின்றது.''

அந்தரங்கச் செய்திகள் கொண்டு வருவோரை அவர் பிற்பகலில் தனித்தனியே சந்திப்பது வழக்கம். அதற்கு இன்னும் இரண்டு நாழிகைப் பொழுதிருந்தது. 'இப்போது சக்கரவர்த்திகளைப் புலவர்களும் கலைஞர்களும் சூழ்ந்து கொண்டிருப்பார்கள்' என்று நினைத்தான் விசுவநாதன். புற உறுப்புக்களுக்குத் தினந்தோறும் பயிற்சி அளித்து அவற்றை இரும்பாக்கியது போலவே, அக உறுப்புக்களையும் பொன் போல் துலக்கித் தினந்தோறும் ஒளிபெறச் செய்து வந்தார் கிருஷ்ண தேவராயர். உள்ளத்துக்கு உறுதி, ஊக்கம், உற்சாகம், இவ்வளவும் அவருக்குப் புலவர்களின் கூட்டுறவாலும், கலைஞர்களின் கூட்டுறவாலும் கிடைத்தன.

அரசரின் தனி மாளிகையை நெருங்கிய போது அதற்குள்ளிருந்து அரசரின் வெண்கலச் சிரிப்பொலி கிளம்பி வந்தது. விதூஷகனாகிய நகைச்சுவைக் கலைஞரின் கதை கேட்டுச் சிரித்திருப்பார் போலும்! அடுத்தாற்போல் தெலுங்கு, தமிழ், கன்னடம் ஆகிய மூன்று மொழிகளிலும் ஒவ்வொரு கவிதை பாடி

விளக்கம் கூறினார்கள் அந்த அந்த மொழிப் புலவர்கள்.

விசுவநாதனின் வரவை இரகசியமாக அவரிடம் அறிவித்தான் அவருடைய மெய்க்காவலன். அவருடைய முகத்தில் மலர்ச்சி தெரிந்தது. கண்களில் ஒளி மின்னல் தோன்றியது. சட்டென்று சபையிலிருந்தோருக்கு விடை கொடுத்தனுப்பினார் சக்கரவர்த்தி. அவரைச் சூழ்ந்து நின்ற மெய்க்காவல் வீரர்களுக்கும் சைகை செய்து அவர்களை வெளியில் அனுப்பினார்.

விசுவநாதன் அங்கு நுழைந்தபோது அவரைத் தவிர வேறு யாருமே இல்லை. நவரத்தினங்கள் பதித்த பொன் முடி. பளிச்சிடச் சரிகைப் பூக்கள் நிறைந்த மேலங்கி பளபளக்க, அவருக்கே இயல்பான கம்பீரத் தோற்றத்துடன் அவர் வீற்றிருந்தார். அவருடைய காந்தக் கண்கள் விசுவநாதனை அன்போடு உற்று நோக்கின. யாராலுமே அருகில் நெருங்க முடியாதவராக இருந்த அவர் எழுந்து நின்று தமது இரு கரங்களையும் அவனுக்காக நீட்டினார். விசுவநாதன் ஓடோடியும் வந்து அவரது கரங்களுக்குள் அகப்படாமல் கால்கள் இரண்டையும் இறுகப் பற்றி வளைத்துக் கொண்டான். கண்ணீர் அருவி பாய்ந்தோடிய வண்ணம் இருந்தது. தேம்பித் தேம்பி அழுதான் அவன்.



சக்கரவர்த்திக்கு அது ஒரு வகையில் ஆறுதலாக இருந்திருக்கவேண்டும். மெல்லத் தமது ஆசனத்தில் மீண்டும் அமர்ந்தார். "எழுந்திரு மகனே! எழுந்திரு!" என்றார் நாத் தழுதழுக்க.

"நான் இங்கு இருந்திருந்தால்..." என்று அவன் தேம்பினான்.

"நீ இங்கு இருந்திருந்தால்?" என்று நீண்ட பெருமூச்சு விட்டுக் கோபத்தால் குமுறியவாறே, "அவர்களால் இளவரசனைக் கொன்றிருக்க முடியாது; நீ அவனருகில் இருப்பதைத் தடுப்பதற்காகத்தான் அப்பாஜி உன்னைத் தெற்கே அனுப்பும்படி எனக்கு யோசனை கூறியிருக்கிறார்" என்றார்.

"சக்கரவர்த்திகளே! நமது சாம்ராஜ்யத்தின் எதிர்காலம்?"

"அதைப் பாதுகாக்கும் பொறுப்பைத் திருமலையிடம் வளர்க்க வேண்டுமென்றுதான் அவனுக்குச் சிறு வயதிலேயே முடிசூட்டினேன். நான் அவனுடைய அமைச்சனைப் போல் இருந்து அவனுக்குப் பயிற்சி கொடுத்து வந்தேன். அப்பாஜியையும் அவனுக்கு ஆசிரியராக்கினேன். வயது வளர்ந்தவுடன் அவனிடமே ஆட்சியைக் கொடுத்துவிட்டு, முடி துறந்து அப்பாஜிக்குப் பிறகு நானும் அவனுக்கு அமைச்சராக இருந்துஉழைக்க நினைத்தேன். நீ அவனுக்குப் பக்கத் துணையாக நிற்கப் போகிறாய் என்று கனவு கண்டேன். எல்லாக் கனவுகளுமே நொறுங்கி விட்டன."

குமரி முதல் இமயம் வரையிலும் எவர் பெயரைக் கேட்டு நடுநடுங்கியதோ அதே கிருஷ்ண தேவராயர்தாம் விசுவநாதனைக் கண்டவுடன் அப்படி நிலைகுலைந்து போய் விட்டார். முன்பு விஜயநகரத்தைக் கொள்ளையடிப்பதையே தொழிலாகக் கொண்டிருந்த அதே மன்னர்களின் இன்றையப் பாதுகாவலராகவும் சிம்ம சொப்பனமாகவும் எவர் விளங்கினாரோ, அவர் அப்போது வேதனையால் வெந்து போயிருந்தார். கடல் கடந்த மேற்கத்தி நாடுகளிலெல்லாம் எவருடைய புகழ் மேலோங்கி நின்றதோ எவரைத் துன்பத்தையே வென்றவர் என்று உலகம் நம்பியதோ அவர் அவன் முன்பு கண் கலங்கி விட்டார். தமது மூத்த குமாரனாக நினைத்த விசுவநாதனின் முன்பு அவரால் தம்மைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. சக்கரவர்த்தி யென்றாலும் அவர் ஒரு மனிதர்; தந்தை.

திடீரென்று அவர் மீண்டும் சக்கரவர்த்தியாக மாறப் பார்த்தார். அவருடைய பிறவிக் குணமான முன்கோபம் அவரைப் பற்றிக் கொண்டு விட்டது.

"விசுவநாதா! கோழை போல் அழுவதற்காகவா இங்கு வந்தாய்? நிறுத்து உன் அழுகையை! இந்த நாடும் இதன் குடி மக்களும் நமக்குப் பெரிதே தவிர, ஒரு பிள்ளையின் பிரிவு பெரிதல்ல; அவன் போனாலும் நீ இருக்கிறாய். நானே போனாலும் இந்த விஜயநகரம் நிலைத்து நிற்க வேண்டும்!"

"சக்கரவர்த்திகளே!" என்று கதறினான் விசுவநாதன்.

"ஆமாம், வெளிப் பகைகளை நான் என் காலமெல்லாம் போராடி வென்று விட்டேன். இந்த நாட்டின் உயிருக்கோ, உடைமைக்கோ, மானத்துக்கோ என் உயிருள்ளவரை பங்கம் வெளிப் பகையால் நேராதபடி நான் தடுத்து விட்டேன். இப்போது இங்கே உட்பகை தோன்றியிருக்கிறது. காரணம் என்ன

## எட்டாதவை!



மணி: இதோ கீழ் அலமாரியில் உள்ள புத்தகங்களை யெல்லாம் நான் படிக்க எங்கப்பா வாங்கிக் கொண்டு வந்திருக்கிறார்!

சேகர்: மேலே உள்ள புத்தகங்கள்?

மணி: அதெல்லாம் எனக்கு எட்டாத விஷயங்களாம்!

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

தெரியுமா? பதவி ஆசை! அப்பாஜியின் குமாரன் அவருக்குப் பின்னல் அமைச்சராக வர முடியாதோ என்ற பயத்தால் இந்தக் கொலை நடந்திருக்கிறது.''

காரணம் தெரிந்தவுடன் திடுக்கிட்டான் விசுவநாதன். அப்போது அவனுக்கு அமைச்சர் நரசிம்மர், 'என்னைவிடப் பெரிய பதவிக்கு நீ வரவேண்டும்!' என்று வாழ்த்துக் கூறியது நினைவுக்கு வந்தது. அவன் உடல் நடுங்குவதைக் கவனித்தார் கிருஷ்ண தேவராயர்.

''நாடு என்னைவிடப் பெரியது. அதனால் தான் சிம்மாசனத்தை உதறிவிட்டு வந்து அமைச்சராகிப் பணி புரியலாம் என்று நினைத்தேன். ஆனல் அப்பாஜிக்கோ நாட்டை விட அவர் குமாரனின் அமைச்சர் பதவியே பெரிதாகத் தோன்றி விட்டது.''

''இனி எனக்கு எந்தப் பதவியும் வேண்டாம். தங்களருகில் இருந்து தாம்பூலம் மடித்துக் கொடுக்கும் அந்த ஒரு பாக்கியம் எனக்குக் கிடைத்தால் போதும்.''

மெல்லச் சிரித்தார் சக்கரவர்த்தி. ''நீ இளைஞன்; இப்போது உனக்குப் பெண்ணின் மேல் ஆசை வைக்கும் பருவம் வந்திருக்கிறது. அடுத்தாற்போல் பொன்னுக்கும் பொருளுக்கும் ஆசைப்படும் காலம் வரும். அவைகளை உன் தந்தை ஏராளமாகத் தேடி வைத்திருக்கிறார். நீ பதவிக்கு ஆசைப்படத்தான் வேண்டும். அந்தப் பதவியைக் கொண்டு நீ சாம்ராஜ்யத்துக்காக உழைக்க வேண்டுமே தவிர, தன்னலத்துக்காகப் பதவியை விரும்பாமல் இருந்தால் போதும். தன்னலத்தால் இங்கு உட்பகை வளர்ந்தால் இந்த நாடு என்ன ஆகும் தெரியுமா?''

நினைத்துப் பார்த்தான் விசுவநாதன். சக்கரவர்த்தி தொடர்ந்து கூறினர்:

''நாட்டின் ஒற்றுமை குலைந்து நமக்குள்ளே கலகங்கள் ஏற்படும். வெளிநாட்டுப் பகைவர்கள் மீண்டும் படையெடுத்து வருவார்கள். ஊர்களைச் சுட்டுப் பொசுக்குவார்கள். மாளிகைகளை இடித்துக் குட்டிச்சுவராக்குவார்கள். குடிமக்களைக் கொன்று குவிப்பார்கள். செல்வங்களைக் கொள்ளையடித்துச் செல்வார்கள். பெண்களை மானபங்கப்படுத்தி இழுத்துச் செல்வார்கள். இந்த மண்ணில் இவ்வளவும் முன்பே பலமுறைகள் நடந்திருக்கின்றன. இனியும் நடக்கத்தான் வேண்டுமா?''

''இனி அப்படி நடக்காது. தாங்கள் அப்படி நடக்கவிட மாட்டீர்கள்!''

''என் காலத்துக்குப் பிறகு உன் காலத்தில் நீ அப்படியெல்லாம் நடக்க விடுவாயா? அதைச் சொல்!''

இறந்துபோன இளவரசன் திருமலையை மனத்தில் வைத்துக்கொண்டு அவனிடம் பேசுவதாக நினைத்துச் சக்கரவர்த்தி தன்னிடம் பேசுகிறார் என்பதை அவன் உணர்ந்துகொண்டான். அவனது விழிகளில் நீர் பொங்கியது.

''நம்மிடமிருந்து பிரிக்கப்பட்ட இளவரசரின் மீது ஆணையாகச் சொல்கிறேன். என் உயிர் உடலில் உள்ளவரையில் நமது சாம்ராஜ்யம் உட் பகையாலோ வெளிப் பகையாலோ சிர்குலைந்துவிடாமல் நான் பாதுகாப்பேன். என் உடல் பொருள் ஆவி எல்லாவற்றையும் இதற்காக இழக்கத் தயங்க மாட்டேன். இது சத்தியம்!''

விசுவநாதனை அன்போடு தடவிக்கொண்டு சில விநாடிகள் மெய்மறந்திருந்தார் சக்கரவர்த்தி. 'மகனே! என்னிலும் சிறந்து விளங்க வேண்டுமென்று நான் நினைத்த திருமலை உன் உருவில் எனக்குத் திரும்பக் கிடைத்து விட்டான்' என்று அவர் தமக்குள் கூறிக் கொண்டார்.

''தமிழ் நாட்டுக்குப் போய் வந்த செய்தி....'' ஆரம்பித்தான் விசுவநாதன்.

''அதை நான் மறந்துவிடவில்லை. நீ கூறலாம்.''

விசுவநாதன் எல்லாவற்றையும் கூறி முடித்தான். சந்திரசேகர பாண்டியரை அரியநாத முதலியார் அழைத்துக்கொண்டு வருகிறார் என்பதையும் தெரிவித்தான். கடைசியாக ஒரு செய்தியைக் கூற அவன் சற்றுத் தயங்குவது போல் இருந்தது.

''ஏன் தயங்குகிறாய்?''

''இவ்வளவும் நமது அமைச்சர் சாளுவ நரசிம்மருக்கு எப்படியோ தெரிந்திருக்கிறது.''

சக்கரவர்த்தி அவனை உற்றுப் பார்த்தார். அவரது நெற்றி சுருங்கியது. (தொடரும்)


சக்திக்கும், வலிமைக்கும்!
கோகோ
சர்க்கரை
மால்ட்
பால்
Cadbury's
Bournvita
THE IDEAL FOOD DRINK FOR STRENGTH AND VIGOUR
ஊட்டப்பொருள்கள் அனைத்தும் ஒருங்கே தேவையா? ஒரு கப்
போர்ன்விடா அருந்துங்கள். தசைகள் வளர புரதங்களும்,
சக்திக்கும் வலிமைக்கும் புஷ்டியான மாவுச்சத்தும், எலும்புகளை
வலுவாக்க தாது உப்புக்களும், பூரண ஆரோக்கியத்திற்கு மிக்க
அவசியமான வைட்டமின்களும் இதிலே உள்ளன. மிகச்சுலப
மாக தயாரிக்கலாம். காலையில் உற்சாகத்துடன் எழுந்திருக்க
வேண்டுமா? இரவில் அமைதியாக உறங்க வேண்டுமா?
போர்ன்விடா அருந்துங்கள்.
காட்பரீஸ் போர்ன்-விடா

# சேவைக்கு ஒரு சகோதரி




## 10

சுப்புலக்ஷ்மி மீண்டும் கான்வென்டிற்குத் திரும்பினாள். ஃபோகல்ட்டி ஆப் ஆர்ட்ஸ் பரீட்சைக்குப் படித்து முடிப்பதற்காக மதர் சேவியரையும், மதர் பாலேயும் போல் தானும் சிந்தனையையும் செயலையும் ஒருமுகப்படுத்தித் தன் வாழ்நாள் முழுவதையும் ஒரே குறிக்கோளுக்காக அர்ப்பணிக்க வேண்டும் என்று உறுதி பூண்டாள். இது குறித்து அவளுக்குக் கொஞ்சமும் சந்தேகம் இருக்கவில்லை. தன்னுடைய நற்பாக்யம், தனியான ஒன்று. தன்னையொத்த வேறு யாருக்கும் கிட்டக் கூடாதது என்பதை இப்போது நன்றாகப் புரிந்து கொண்டிருந்த அவள்; எல்லாக் குழந்தை விதவைகளுக்கும் விடுதலை அளிக்க முயல்வதும், அவர்கள் சந்தோஷமாகவும் பயனுள்ளவர்களாகவும் உலகத்துக்கு மதிப்புள்ளவர்களாகவும் உலகத்தாரால் மதிக்கப் படுகிறவர்களாகவும் விளங்குவதற்குப் பாடுபடுவதுமே வருங்காலத்தில் தனது லட்சியமாக இருக்க வேண்டும் என்று மானஸீகமாகச் சத்தியம் செய்து கொண்டாள். இப்படித் தீர்மானம் செய்து கொண்ட பிறகு அது இயல்பாகவே தோன்றியது. அவள் தேர்ந்தெடுக்கக் கூடிய வேறு வாழ்க்கை முறைதான் என்ன இருக்க முடியும்?

சித்தியும் அவள் தீர்மானத்துக்கு ஊக்கமளித்தாள். சித்தியின்றி அந்த எண்ணத்துக்குச் செயலுருவம் தந்திருக்கவே முடியாது. சுப்புலட்சுமியின் தந்தையும் ஊக்கமளித்தார். அவளுடைய உறவினனான இளைஞன் கிருஷ்ணசாமியும் அவ்வாறே உற்சாகமூட்டினான். இருந்தாலும் விசாலாட்சி மட்டும் உற்சாகமடையவில்லை. இவ்வளவு நன்றாகக் கல்வி கற்ற பிறகு சுப்புலட்சுமி வீட்டோடு இருந்து புத்தகங்களைப் படித்துக்கொண்டிருப்பதிலேயே ஏன் திருப்தி கொள்ளக்கூடாது? மகளுடைய போக்கு அவளுக்குப் புரியவில்லை. இருந்தாலும் அவளும் சம்மதித்தாள். ஆனால் காலம் செல்லச் செல்ல அவளுக்கே உற்சாகம் தோன்றியது. இறுதியில் 'பிராம்மண விதவைகள் விடுதி'யைத் தொடங்குவதற்குத் துணை நிற்பதில் விசாலாட்சி காட்டிய ஆர்வம் சித்தியினுடையதை விடச் சிறிதும் குறைந்ததல்ல. ஆனால் இதெல்லாம் நான்கு வருடங்கள் கழிந்து நடந்தவை.

அதற்கிடையில் சுப்புலக்ஷ்மியின் இந்தத் தீர்மானத்தின் விளைவாகத் தவிர்க்க முடியாத வேறு ஒரு முடிவுக்கும் வர வேண்டியதாயிற்று. மிகவும் அத்தியாவசியமான முடிவு அது என்பது அவளுக்குத் தெரிந்திருந்த போதிலும் அதனை ஒப்புக்கொள்வது அவளுக்கே சிரமமாக இருந்தது. பிறருக்குக் கல்வி அளிக்கவேண்டுமானால் அதற்குத் தான் முதலில் முழுத் தகுதி பெறவேண்டும். அதற்குச் சர்வ கலாசாலைப் பட்டம் தேவைப்படும். அப்படியென்றால் கான்வென்டில் இரண்டாவது ஆண்டு முடிந்த பிறகு மாநிலக் கல்லூரியில் சேர்ந்து படித்தாக வேண்டும். அப்போது நேரக் கூடிய கஷ்டங்களையும்

அவமதிப்புக்களையும் பொறுக்கத்தான் தயாராக இருக்க வேண்டும்.

அவள் அதைப் பற்றிக் கவலைப் படாமல் இருக்க முயன்றாள். வீட்டிலும் கான்வென்டிலும் வழக்கத்தை விட அதிகமாகப் பாடுபட்டுப் படித்தாள். என்றாவது ஒரு நாள் சுப்புலக்ஷ்மிக்குக் கிறிஸ்தவ மதத்தில் நம்பிக்கை ஏற்படச் செய்து மத மாற்றத்துக்கும் அவளை இணங்க வைத்து வெற்றி பெற வேண்டும் என்று மதர் பாட்ரிக் இன்னும் ஆசை வைத்திருந்தாள். ஏன், அதற்காக அவள் பிரார்த்தனை செய்தாள் என்பதிலும் ஐயமில்லை. ஆனால் சுபாவத்தில் அவள் அன்போடும் ஆசையோடும் இருந்தபடியால் அவள் கிறிஸ்தவ மதத்தின் ஒரு பிரிவினரான புராட்டஸ்டண்டுகளைக் குத்திக் காண்பித்ததும், இந்து மதத்தைக் குறித்து அவள் குற்றங் குறைகளைக் கண்டுபிடித்துக் கூறியதும் சுப்புலக்ஷ்மிக்கு ஒரு பொருட்டாகத் தோன்றவில்லை. இன்னும் சொல்லப் போனால் சுப்புலக்ஷ்மிக்குக் கான்வென்டில் படித்த அந்த இறுதி ஆண்டு தான் அவள் இதுவரை காணாத அளவுக்குச் சந்தோஷத்தையும் சுவாரசியத்தையும் அளித்ததாகத் தோன்றியது.

இடையிடையே சில இடைஞ்சல்கள் இருக்கத்தான் செய்தன. உதாரணமாக ஜட்கா ஓட்டிக்கும் அவன் குதிரைக்கும் இடையில் அவர்கள் எங்கு செல்ல வேண்டும் என்பதைப் பற்றி இருந்த அபிப்பிராய வேற்றுமையில் அநேகமாகக் குதிரைதான் ஜெயித்தது. ஒரு நாள் மதர் பாட்ரிக் சுப்புலக்ஷ்மியைத் தினத்தை விட அரை மணி முன்னதாகவே வரும்படி பணித்திருந்தாள். அன்று அரசினர் அமர்த்திய இன்ஸ்பெக்டர்கள் பள்ளியைப் பார்வையிட்டு மாணவர்களைப் பரீட்சிக்க வருவதாய் இருந்தார்கள்.

சுப்புலக்ஷ்மி தான் சீக்கிரமாகப் போய்ச் சேர வேண்டுமானால் அதற்காகத் தனிப்பட்ட முறையில் பிரயாசை எடுத்துக் கொள்ள வேண்டியதுதான் என்று முடிவு கட்டினாள்.

விடிந்ததும் அவள் வழக்கத்தைவிட ஒரு மணி நேரம் முன்னதாகவே கிளம்பி விட்டாள். குதிரையோ இதற்கும் சளைக்காமல் ஈடு கொடுத்தது. அன்று நகர் முழுவதும் சுற்றுப் பிரயாணம் செய்வதென்று தீர்மானித்துவிட்டது போலும். சிந்தாதிரிப்பேட்டையில் புகுந்து, மவுண்ட்ரோட்டைத் தாண்டி ராயப்பேட்டை ஹைரோடு வழியாக மயிலாப்பூருக்குச் செல்லலாயிற்று. இச்சம்பவத்தைச் சகோதரி நினைவுகூர்ந்து கூறினார்: "பாவம், வண்டிக்காரன்! அடிக்கடி கீழே இறங்குவதும், குதிரையை நல்ல வார்த்தை சொல்லித் தட்டிக் கொடுத்து ஜார்ஜ் டவுனுக்குத் திருப்ப முயல்வதுமாக இருந்தான். அந்தப் பிராணி பிடிவாதமாக மறுத்து விட்டது! தெருவில் உள்ளவர்களும் வண்டிக்காரனுக்கு உதவ முயன்றனர். ஒன்றும் பலிக்கவில்லை. பிறகு நாங்கள் மெரினா நெடுகச் சென்றோம். அப்புறம் குதிரை திருவல்லிக்கேணிக்குள் வந்து விட்டது. கடைசியில், அரை மணி நேரம் முன்னதாகச் செல்ல முயன்றது போக, அரை மணி நேரம் தாமதமாகச் சென்றேன். ஆயினும் ஒன்றும் குடிமுழுகிப் போய்விட வில்லை. என் வகுப்பு அந்தக் கட்டடத்தின் கடைசி மேல் மாடியில் இருந்தபடியால், இன்ஸ்பெக்டர்கள் அங்கு ஏறி வருவதற்கு வெகு நேரம் முன்பே நான் என் இடத்தில் அமர்ந்து விட்டேன்!"

சுப்புலக்ஷ்மியைப் பரீட்சித்த இன்ஸ்பெக்டர்கள் ரொம்பவும் திருப்தி அடைந்ததில் வியப்பென்ன இருக்கிறது? பிறகு, ஃபாகல்டி ஆஃப் ஆர்ட்ஸ் — பரீட்சையின் முடிவுகள் வெளிவந்த போது, சுப்புலக்ஷ்மி இரு தங்கப் பதக்கங்களைப் பெற்றது குறித்தும் யாரும் வியப்புறவில்லை; எல்லாரும் அடைந்த குதூகலத்துக்கும் அளவில்லை.

ஆயின், இதில் ஒரு கஷ்டம் ஏற்பட்டது. சகோதரி என்னிடம் சொன்னார்: "மதர் ஸேவியர், பரிசளிப்பு விழாவுக்கு நான் வெள்ளைப் புடவை, வெள்ளை 'ஸாக்ஸ்' வெள்ளைக் கால் அணிகள் இவை அணிந்து வரவேண்டும் என்பதில் குறியாக இருந்தாள். ஆனால் என் தாயாரோ இதைக் காதில் வாங்கவே மறுத்து விட்டாள். கிறிஸ்தவர்களும் ஐரோப்பியர்களும் ஆங்கிலோ இந்தியர்களுமான மற்ற எல்லாப் பெண்களும் வெள்ளை ஆடைகள் உடுப்பதாக இருந்தது. ஆனால் ஹிந்து சம்பிரதாயப்படி வெள்ளை என்பது விதவைகள் உடுக்கும் நிறமாகையால் என் தாயார் என்னை ஒரு போதும் வெள்ளை உடுக்க அனுமதித்ததில்லை. நான் எப்போதும் வண்ண வண்ணப் பட்டுச் சேலைகளையே உடுத்தி வந்தேன். என் வாழ்க்கையில் ஒன்றுமே நடக்காத மாதிரி......."

சகோதரி சிறிது நிறுத்தினார். பிறகு தொடர்ந்தார்: "அந்தக் கன்னிகா ஸ்திரீகள் என்னிடம் மிகவும் அன்பாக இருந்தார்கள். அவர்களுக்கோ வெள்ளை நேர்மாறான பொருள் தந்தது. கடைசியில், என் தாயாரை எப்படியோ இணங்க வைத்

தேன். என் ஆசிரியைகள் ஏமாற்ற மடையாதவகையில் என் தங்கப் பதக்கங்களை வெள்ளை உடை உடுத்தே பெற்றுக் கொண்டேன்.''

அதற்குப் பிறகு மதர் ஸேவியர், மதர் பால், மதர் பாட்ரிக் மூவரிடமும் விடைபெற்றுக் கொள்ளும் நாள் வந்து விட்டது. சுப்புலக்ஷ்மிக்கு அவர்களை விட்டுப் பிரியவே மனமில்லை. அவர்கள் தனக்குக் கற்றுக் கொடுத்த பாடங்களுக்காக மட்டுமல்ல; பிறர் சேவையில் தன்னை அர்ப்பணித்துக் கொள்வதற்குத் தனக்குத் திடசித்தத்தை அளித்ததுடன் தான் பின்பற்ற வேண்டிய உதாரண வாழ்க்கையை நடத்தி வழிகாட்டிகளாக விளங்கியதற்காகவும் எப்போதும் தான் அவர்களுக்கு நன்றியுள்ளவளாக இருக்க வேண்டும் என்பதை அவள் உணர்ந்தாள்.

அவர்களும் அவளை மறக்கவேயில்லை. இப்போது அவர்களில் யாரும் உயிருடன் இல்லை. பிரசண்டேஷன் கான்வெண்டும் ஜார்ஜ் டவுனை விட்டு நகரத்தின் அதிநாகரிகமான வேறு ஒரு பகுதிக்கு மாறி விட்டது. ஆனபோதிலும் அந்த இளம் பிராமண விதவைக்கும், அந்தக் கன்னிகாஸ்திரீகளுக்குமிடையே அன்று நிலவிய அன்பை இன்றும் அந்தக்கான்வெண்டை நடத்துவோர் ஞாபகம் வைத்துக் கொண்டிருக்கின்றனர். அந்த நினைப்பில், வருஷா வருஷம் பெருகி வரும் பெருமிதமும் கலந்திருக்கிறது. ஸிபில்-சுப்புலக்ஷ்மியின் வாழ்க்கை அங்குள்ள மற்றவர்களுக்கும் ஓர் எடுத்துக்காட்டாக விளங்கி ஊக்கம் அளித்ததோடு இன்னமும் அளித்து வருவதன் காரணமாக எழும் பெருமிதம் அது.

சுப்புலக்ஷ்மி பி. டி. ஸ்கூலில் ஆங்கிலப் பகுதியில் சேர்ந்த முதல் இந்துப் பெண்ணாக இருந்தாளேயன்றி அவளும் அவள் தங்கைகளுமே கடைசி மாணவிகளாகிவிட வில்லை. சுப்பிரமணிய ஐயரைப் பின்பற்றி இன்னும் சில பிராமணப் பெற்றோர்களும் தங்கள் பெண்களை ஐரோப்பிய பாணியில் படிக்க வைக்க ஆரம்பித்தார்கள். ஆயினும் எண்ணிக்கையில் இவர்கள் அதிகமில்லைதான்.

கல்வி புகட்டும் பணியில் மிகப் பெரிய சாதனைகளைப் புரிந்துள்ள டாக்டர் டி. டி. கார்வே பூனாவில் விதவைகளுக்குக் கல்வியளிப்பதற்கான ஆரம்ப முயற்சிகளில் அப்போது ஈடுபட்டிருந்தார்.

ஆனால், ஆசார சீலர்கள் என்று பெயர் பெற்ற தென்னிந்திய பிராமண குடும்பத்தினரில் யாருமே சுப்பிரமணிய ஐயரைப் பின்பற்றித் தங்கள் வீட்டில் இருக்கக் கூடிய இளம் விதவைப் பெண்களைப் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பவில்லை. ஓர் எடுத்துக் காட்டாக விளங்குவதுடன் நில்லாது, வற்புறுத்தியும் தீவிரமாக முயன்றும் பழங்காலத்தவரின் தவறான வெறுப்புக்களை, மூடக் கொள்கைகளைத் தகர்க்க முயலுவதே சுப்புலக்ஷ்மியின் காரியமாக வருங்காலத்தில் அமையும். இதற்கிடையில், மாநிலக் கல்லூரியில் அவள் படிக்க வேண்டும். அங்கு ஏராளமான மாணவருக்கிடையில் விதவை என்ற முறையில் தான் ஒருத்தியே இருந்தாலும் வயதில் தன்னையொத்த இன்னும் பல பெண்கள் இருக்கலாம். அதனால் தனக்கு நேர விருக்கும் கஷ்டங்கள் ஒருவாறு குறையவும் செய்யலாம் என்று அவள் நம்பிக்கையுடன் எதிர்பார்த்தாள்.

குழந்தைப் பருவத்துக்குப் பிறகு அவள் தன்னுடைய தங்கைகளின் கணவர்கள் மற்றும் தன் குடும்பத்தைச் சேர்ந்த அத்தான், அம்மாஞ்சிகளைத் தவிர வேறு எந்த ஆடவனுடனும் பேசியது கிடையாது. ஆகவே, சுப்புலக்ஷ்மிக்கு மட்டுமின்றி அவள் பெற்றோர், சித்தி யாவருக்குமே தெரியும், இனி கல்லூரியில் எதிர்ப்படவிருக்கும் நெருக்கடிகளை யெல்லாம் தாங்க அவளுக்கு ரொம்பவும் தைரியம் வேண்டும் என்று.

அவள் உறவினனான கிருஷ்ணஸ்வாமி ஏற்கனவே ராஜதானி கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தான். தான் அவளைப் பார்த்துக் கொள்வதாகவும்,



''என் உடம்பு வலியெல்லாம் குணமாகி விட்டது சார்!''

''எப்படி நம்ம மருந்து? எடும் பாக்கிப் பணத்தை!''

''உங்க மருந்திலே இல்லை சார், குணம். இன்று காலையில் எலக்டிரிக் ரயிலிலே பிரயாணம் செய்தேன் அவ்வளவுதான்!''

அவளுக்கு உதவி புரிவதாகவும் அவளை மற்றப் பையன்கள் செய்யக்கூடிய வம்புகளிலிருந்து காப்பாற்றுவதாகவும் அவன் வாக்களித்தான். சித்தி அதிகம் பேசவில்லை. பேச வேண்டிய அவசியம் இருக்க வில்லை. இது வரையில் அவளைப் போன்ற வேறு எந்தப் பெண்ணும் செய்யாத காரியங்களைச் சுப்புலக்ஷ்மி செய்ய வேண்டும் என்று சர்வ சாதாரணமாகச் சித்தி எதிர்பார்த்தாள். செய்யும் ஆற்றல் அவளுக்குண்டு என்று நம்பினாள். ஆகவே அமைதியாக நடந்து கொண்டாள். இப்போதெல்லாம் கணவனுடன் கோயமுத்தூரிலேயே இருந்து வந்த விசாலாட்சியும், என்ன இடைஞ்சல் வந்தாலும் தன் மூத்த மகள் அதை வென்று வெற்றி நாட்டுவாள் என்று பூரண நம்பிக்கை கொண்டிருந்தாள்.

குதிரை வண்டி இனி வேண்டாம் என்று தீர்மானித்து விட்டார்கள். குதிரையையோ வண்டிக்காரனையோ நம்புவதற்கில்லை என்பதுடன் அதற்குச் செலவும் அதிகமாயிற்றே. கோயமுத்தூரிலும் சென்னையிலுமாக இரண்டு ஜாகைகள் இருந்ததால் குடும்பத்துக்கான செலவும் இப்போது அதிகமாகிக் கொண்டிருந்தது.

சுப்புலக்ஷ்மி இனி எழும்பூரிலிருந்து மெரினா வரையில் ரிக்ஷாவில் செல்வது என்று முடிவாயிற்று.

கல்லூரி வாழ்வில் இதுதான் முதல் சோதனை அவளுக்கு. அது வரை எந்த இளம் பெண்ணும் ரிக்ஷாவில் தனியாகச் சென்றதில்லை. ஏன், இன்றும் தமிழ் நாட்டின் பெரிய பட்டணங்களில்கூடப் பெண்மணிகள் இப்படித் தனியாகச் செல்லத் தயங்கத்தானே செய்கிறார்கள்! சுப்புலக்ஷ்மி ரிக்ஷாவில் ஏறி உட்கார்ந்ததும் அதன் 'டாப்'பை விரித்து விட்டார்கள். அவள் தனது குடையைப் பிரித்துத் தன் முன் பெரிய கேடயம்போல் வைத்துக் கொண்டாள். இப்படிக் குடையாலும் ரிக்ஷாவின் கூரையாலும் அவள் தன்னை முழுமையாக மறைத்துக்கொள்ள முடிந்தது. தெருவில் போவோர்வருவோர் கண்களுக்குப்பட்டதெல்லாம் பளிச்சென்று துலங்கிய அவளுடைய அகலமானபுடவைக்கரைதான்.

அதுகூட எல்லார் கவனத்தையும் கவர்ந்தது. சாலையில் போவோர் வருவோரெல்லாம் அந்தக் காட்சியைக் கண்டு பிரமித்து நின்றார்கள். அவரவர்கள் வீட்டு வாசலிலோ, வெளித் திண்ணையிலோ காணப்பட்ட ஆண்களும் பெண்களும் உள்ளே இருந்தவர்களைக் கூவி அழைத்தார்கள். அவர்களுடைய குத்தலான பேச்சும், ஆபாசமான சிரிப்பும் சுப்புலக்ஷ்மிக்குக் கேட்டன. அவள் குன்றிப் போனாள். ரிக்ஷாக்காரன் சரியான வழியில் அழைத்துச் செல்கிறானா என்பதைப் பார்ப்பதற்குக்கூட அவள் குடையைத் தாழ்த்துவதில்லை. மிகவும் வெப்பமாக இருந்தது. ஒரு பக்கம் வண்டியின் கித்தானும், மறுபக்கம் அழுத்தமாக நெய்யப்பட்ட குடையின் பட்டுத் துணியுமாக உள்ளே காற்றோட்டம் என்பது லவலேசமும் இல்லை. மூச்சுத் திணறி விடும் போல் தோன்றியது.

இறுதியில் ரிக்ஷா கல்லூரியின் செங்கல் முகப்பினுள்ளே நிற்க, சுப்புலக்ஷ்மி கீழே குதித்து இறங்கியபோது அங்கு அநேக பையன்கள் காத்திருந்தனர். நூற்றுக்கணக்கானவர்கள் என்று அவளுக்குத் தோன்றியது. அவள் படியேறிச் செல்ல வழிவிட்டு நகர்ந்தபடியே அவர்கள் அவளை வியப்போடு பார்த்துக் கொண்டு நின்றார்கள். அவர்களது சிரிப்பும், கேலிப் பேச்சும் அவள் செவிகளில் விழுந்தன. காரியதரிசியின் அலுவலக அறை எதிரே, வராந்தாவில் சம்பளம் கட்டக் காத்துக் கொண்டிருக்கும் மாணவர்களின் க்யூவில் சேர அவளும் வந்துதானே ஆகவேண்டும்? அந்தக் காட்சியைத் தவறாமல் பார்க்கும்படி மாணவர்கள் ஒருவரிடம் ஒருவர் உரத்துக் கூறியதும் கேட்டது.

கிருஷ்ணஸ்வாமி அவளுக்காக 'க்யூ'வில் நின்று அவள் சம்பளத்தைக் கட்ட வேண்டும் என்று முன்னாடியே ஏற்பாடாகியிருந்தது. அவனிடம் கொடுப்பதற்காக அவள் பணத்தை எடுத்து வந்திருந்தாள். படிக்கட்டு ஏறும்போது ஒரு கணம் அவன் அவள் கண்களுக்குத் தென்பட்டான். மறுபடியும் திரும்பிப் பார்க்கும் போது அவன் மறைந்து விட்டிருந்தான். சற்று நேரம் கழித்துத் தான் சுப்புலக்ஷ்மிக்குப் புரிந்தது, அவன் எங்கும் சென்றுவிட வில்லை, தனக்குப் பின்னால் மறைந்து கொண்டு தன்னைப் பார்க்காதது போல் இருந்தான் என்று. அவன் தன்னைக் கைவிட்டு விட்டானே என்று அவளுக்குக் கோபம் வரவில்லை. எப்படிக் கோபித்துக் கொள்ள முடியும்? மற்றப் பிள்ளைகள்தான் அவ்வளவு மட்டமாக நடந்து கொண்டிருந்தார்களே! அவர்களெல்லாம் தன்னை ஏதோ வேஷம் போட்டுக் கொண்டு வந்த குரங்கை நோக்குவதுபோல் வெறித்துப் பார்ப்பதும், குத்திப் பேசுவதுமாக இருக்க, கிருஷ்ணஸ்வாமி தன்னுடன் பேசினால் அவனை அவர்கள் கேலி செய்தே கொன்று விடுவார்கள் என்பது அவளுக்குத் தெரிந்ததுதான். (தொடரும்)

# ஜீவ கீதம்

ஜெகசிற்பியன்

## அத்தியாயம் நாற்பத்தாறு

## வேளை வந்தது!

அன்று மாலை நடுச்சாமத்துக்குச் சற்று முன் கன்னியம்மாளின் வீட்டில் ஏக ரகளை. "இன்னுடா நெனைச்சுக்கிறே, கயிலாத்து! நின்னை நெலையிலே இரு வத்தைஞ்சு ரூபா வையுன்னு கேட்கறியே, இங்கே இன்னு கொண்டாந்து கொட்டியா வச்சிருக்கிறே, கேட்டதும் வொடுக்குன்னு எடுத்து நீட்றதுக்கு? பையன், ஊட்டு நெலவரம் தெரியாம வெள்ளாட்ருணுங்காட்டியும்!" என்று கூவினுள் அவள்.



''யம்மோவ்! எதுக்கு இப்படிக் கத்தறே? இப்ப கொடுக்கப் போறியா இல்லையா?'' என்று வெகு அலட்சியமாகக் கேட்டான் நச்சி.

''இன்னடா கய்தே, மெரட்றே? இருவத்தைஞ்சு ரூபாவா, மஜாக்கா? ஒரு நய்யா பைசா பேராது, தெரிஞ்சுக்க!''

''இல்லேன்னு, மாட்டை வித்துக் கொடு!''

''இன்னாது?''

''ரெண்டு எருமை மாடுகளிலே ஒன்னை வித்துக் கொடுன்னேன்!''

''அட, பாவி! எதுமேலே கண்ணு வைச்சான் பார்த்தியா?... அதையும் வித்துப்பிட்டா அப்புறம் நானும் அந்தப் பொண்ணும் இன்னாத்தைத் துன்றதாம்?''

''அதெல்லாம் எனக்குத் தெரியாது. காலம் பற பணம் வோணும். இன்னும் ஒரு வாரத்திலே புதுச்சா டில்லி எருமை மாடு ஒன்னு புடிச்சாந்து கொடுத்துடறேன்.''

''அட யங்கப்பா, டில்லி எருமை வாங்கிக் கொடுக்கிற மூஞ்சியைப் பாரு! ஊரான் ஊட்டு மாட்டைத்தான் ராவோடு ராவா திருடியாந்து கொடுப்பே!''

''நீ இப்ப கொடுக்கலே; உன் மாட்டையே ராத்திரியோடு ராத்திரியா அவுத்து ஓட்டிக்கிட்டுப் போய் வித்துப்பிடுவேன், பார்த்துக்க.''

''ஐயோ! ஐயோ!'' என்று வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்ட கன்னியம்மாள், ''எண்ணைக்கோ ஒரு நாள் ஊட்டுக்கு வர்றதுமில்லாம, இப்படி வந்ததும் என் வவுத்தெரிச்சலைக் கொட்டிக்கிறியே, கஸ்மாலம்!'' என்று பெருங் குரலில் பிலாக்கணம் தொடுத்தாள். மறுகணம் அவனுக்கு ஆத்திரமும் கோபமும் அளவுக்கு மீறிப் பொங்கின. ''டேய், ராஸ்கோல்! என் மாட்டு மேலே மாத்திரம் கை வை; அப்புறம் இன்னா நடக்குது பார்!'' என்று ஆக்ரோஷமாகச் சவால் விட்டான்.

சாவதானமாகத் தலையைத் தூக்கி அவளை முறைத்துப் பார்த்தான் நச்சி.

''இன்னடா, மொறைச்சுப் பார்க்கிறே சோமாறி!'' என்று சீறிக்கொண்டு திரும்பிய கன்னியம்மாள் தனது மகனின் வெறித்த முகத்தைப் பார்த்து உள்ளூறப் பயந்தவளாய், ''இப்ப எதுக்குடா உனக்குப் பணம் வோணும்?'' என்று தணிந்த குரலில் வினவினாள்.

''எதுக்கோ! அதையெல்லாம் சொல்லிக்கிட்டு இருக்க எனக்கு நேரமில்லே'' என்றான் நச்சி அமர்த்தலாக.

''ஆமா; இவரு இப்பப் பெரிய தொரை! அதான் நேரம் வேளைக்கெல்லாம் அளந்தபடி வைக்கிறாரு!'' என்று எரிச்சலில் பொத்துக் கொண்டு வந்த சிரிப்புடன் சொன்ன கன்னியம்மாள், ''தொரைச்சாணியை டான்ஸ் ஆடக் கூட்டிக்கினு போவ கையிலே காசு இல்லேயாங்காட்டியும்! இல்லேன்னு அவளுக்குக் கேக்குப் பொட்டி வாங்கிக் கொடுக்கணு மாக்கும்! அதுக்குத்தான் இங்கே வந்து என் தலையை உருட்டப் பார்க்கிறான்!'' என்றாள் குத்தலாக.

இதைக் கேட்டு அதிர்ச்சி யடைந்தவன் போல் நிமிர்ந்த நச்சி அவளை அவசரமாக நோக்கினான்.

இடுப்பின்மேல் இடது கையை வைத்துக் கொண்டு வேறு பக்கம் திரும்பி நின்ற கன்னியம்மாள், ''பயாஸ்கோப்புக்குப் பாட்டுக் கட்டறானாம்! பார்க்கிற பங்களாவெல்லாம் என்னதுதான்னு சொல்றானாம்! புளுவு, புளுவு, உடம்பெல்லாம் புளுவு!'' என்றவள், ''அதான் ஊரை ஏமாத்தறாப்பலே இங்கே என் கிட்டேயும் வந்து கவுறு திரிக்கிறான், டகல்பாஜி! அதுக்கெல்லாம் நானா ஏமாறுவேன்?'' என்றாள் கிண்டலும் வெறுப்புமாக.

பதிலேதும் சொல்லத் தோன்றாமல் திகைத்து நின்ற நச்சி தன் வழக்கமான கோணல் சிரிப்புடன் மெல்லப் போய்ச் சுவரோரம் கிடந்த கந்தல் பாயை விரித்துப் போட்டுப் படுத்து விட்டான்.

இவ்வளவு நேரம் அடுப்படியில் பயப் பிராந்தியோடு ஒடுங்கி முடங்கி உட்கார்ந்திருந்த வேதாவுக்கு நச்சியின் இந்தத் திடீர் அமைதியும், கன்னியம்மாளின் அந்தப் புதிரான பேச்சும் புரியவேயில்லை. முன்னொரு நாள்கூட இப்படித்தான் தன் மகனைப் பற்றிப் பேசியபோது, 'அவரு இன்னா, பெரிய தொரையாகிப்பிட்டாரு' என்று அழுத்தந் திருத்தமாகச் சொன்னதை இப்போது நினைவுகூர்ந்து வியந்தாள். அத்துடன் இந்த நடுச் சாமச் சண்டைக்குத் தானே காரணம் என்பதை நினைத்தபோது மீண்டும் அவளைப் பயம் பிடித்துக் கொண்டது.

இரவு பதினொரு மணிக்கு நாய்களின் குரைப்புக் கூச்சல்களைப் பின்னணியாகக் கொண்டு வீடு வந்து சேர்ந்த நச்சி, வேதாவிடம் அவளது வேலை சம்பந்தமாக மருதமுத்து ஏதேனும் சொல்லியனுப்பினாரா என்று விசாரித்தான். 'அன்றொரு தினம் அவர் தம் அந்தரங்கக் காரியதரிசிகளோடு வந்து போன பின் இன்றுவரை தகவல் ஏதும் இல்லை' என அவள் கூறியதைக் கேட்டு, 'புறம் போக்குப் பய! இன்னோர் இருபத்தைஞ்சு ரூபாயைக் கொண்டு போய் அவனோட ஜோபியில் திணிச்சால்தான் எதனாச்சும் உருப்படியாப் பண்ணுவான்; இல்லேன்னா முதலில் கொடுத்த இருபத்தைஞ்சு ரூபாயும் என்னாகிப்பிடும்' என்று தனக்குள் முனகிக் கொண்ட நச்சி சிறிது நேரச் சிந்தனைக்குப் பிறகு பாதித் தூக்கத்திலிருந்த தன் தாயாரை எழுப்பி, 'இருபத்தைந்து ரூபாய் வேண்டும்!' என்று நிர்த்தாட்சண்யமாகக் கேட்க, அன்று இரவு கையில் காசில்லாமல் பக்கத்து வீட்டிலே உழக்கு அரிசி கடன் வாங்கிப் பொங்கித் தின்றுவிட்டுப் படுத்திருந்த கன்னியம்மாளுக்கு ஆத்திரம் குமுறிவிடவே, அதிலிருந்து ஆரம்பமானதுதான் இந்தச் சண்டை.

சண்டையின் இடையிடையே 'எல்லாம் இந்த நாதாரிப் பொண்ணாலே வந்த வினை' என்று வேதாவைப் பார்த்துச் சீறிக் கொண்டே இருந்தாள் கன்னியம்மாள். இதனால் எந்த விநாடியும் தனக்கு அடியோ, உதையோ கிடைக்கப் போகிறது என்று






Lacto Calamine

# அம்மாவின் சமயோசிதம் உதவியது!

















## வலிதான் எங்கள் பிரச்சினை...உங்களுக்கு நாங்கள் உதவக்கூடிய விதம் இதுதான்!

**ஆராய்ச்சி:** 'ஆஸ்ப்ரோ' ஆராய்ச்சிக் கழகத்தில் ஒரு ஆராய்ச்சிக் குழுவின் தலைமை வகிப்பவன் நான். எங்களுடைய பணி வலியை நீக்க மேன்மேலும் சிறந்த முறையைக் கண்டுபிடிப்பதே. இந்தப் பிரச்சினையில் ஆழ்ந்த ஊக்கம் கொண்டுள்ள உலகத்தின் முதன்மையான பல கழகங்களுள் எங்களுடையதும் ஒன்று. வலிக்கு, இக்காலத்தில், சிறந்த ஒரே விடை 'ஆஸ்ப்ரோ'தான் என்பதை நாங்கள் இன்று அறிவோம். அதனால்தான் அது உலகமெங்கும் உள்ள டாக்டர்களாலும் ஆஸ்பத்திரிகளிலும் பயன்படுத்தப்படுகிறது.

**வலி என்பது என்ன?** உயிர்ப்பொருள், உடல் வேகத்திற்கும் மேலாக, மிக விரைவாகத் திசுக்களில் சேர்ந்து குவிந்து, ஒரு "அசாதாரணமான" வீக்கத்திற்குக் காரணமாகிவிட, அது நரம்புகளை அழுத்துவதின் மூலம் வலி ஏற்படுகிறது.

**'ஆஸ்ப்ரோ' இயங்குவது எப்படி?** 'ஆஸ்ப்ரோ' உடனடியாக இரண்டறக் கலந்துவிடுகிறது—வீக்கத்தை நீக்கி—நரம்புகளின் மீதிருக்கும் அழுத்தத்தைப் போக்கி—வலியை வெளியே இழுத்துவிடுகிறது.

**இவைகளுக்கு 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்:** வலி • தலைவலி • உடல்வலி • பல்வலி • மூட்டு வலி • ஜுரவேகத்துடன் கூடிய ஜலதோஷம் • ஃப்ளு • டெங்கு

**அளவு:**

**பெரியவர்கள்:** இரண்டு மாத்திரைகள். தேவையானால் மீண்டும் இதே அளவில் உபயோகிக்கவும். **குழந்தைகள்:** ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டரின் சொல்படி.




# 'ஆஸ்ப்ரோ'

வலியை வெளியே இழுத்துவிடுகிறது!

A.G. 8-65 TAM

நடுநடுங்கிக் கொண்டிருந்த அவள், இப்போது தாயும் மகனும் திடீரெனப் போர் நிறுத்தம் செய்துவிட்டதைக் கண்டு சற்றே நிம்மதி அடைந்தாள்.

நச்சி படுத்ததுமே குறட்டை விட்டுத் தூங்க ஆரம்பித்துவிட்டான். மாடுகளுக்கு வைக்கோல் பிடுங்கிப் போடப் போன கன்னியம்மாள் வெகு நேரமாகியும் திரும்பி வராமலிருக்கவே மெல்ல எழுந்த வேதா இரைவாணத்து வழியே வெளியில் எட்டிப் பார்த்தாள். மாட்டுக் கொட்டகையிலேயே அவள் வைக்கோலைப் பரப்பிப் போட்டுப் படுத்துவிட்டிருப்பது தெரிந்தது. தன் மகன் நச்சி சொன்னது போல் தனக்குத் தெரியாமல் இரவோடு இரவாக மாட்டை அவிழ்த்து ஓட்டிக் கொண்டு போய் எங்காவது விற்றுவிடுவானோ என்ற பயம் போலும் அவளுக்கு!

அடுப்படி கட்டைச் சுவரோரமாக வந்து படுத்த வேதாவுக்குத் தூக்கமே பிடிக்கவில்லை. எதுபற்றி நினைத்தாலும் அது அவளது தோல்விகளின் ஒரு பகுதியை, ஆசாபங்கத்தின் ஒரு முனையை, எதிர் காலத்தின் பயங்கரமான ஒரு கரும் புள்ளியைக் கீறிக்கிளறி நெஞ்சைத் துன்பத்திலும் துயரத்திலும் தோய்த்துப் புரட்டுவதாகவே இருந்தது. செவிக் குழியில் கண்ணீர் வடிந்து நிறைய ஓசையின்றி அழுதுகொண்டேயிருந்த அவள் எப்படியோ தூங்கிப் போனாள்.

பொழுது விடிந்ததோ, இல்லையோ; கன்னியம்மாளின் நாராசமான கொச்சை மொழிக் கூச்சல் அந்தத் தெருவையே கிடுகிடுக்க வைத்துக் கொண்டிருந்தது கேட்டு வாரிச் சுருட்டிக்கொண்டு எழுந்தாள் வேதா.

நச்சியைக் காணோம். அவன் வழக்கம் போல் காலைக் கருக்கலிலேயே எழுந்து போய் விட்டிருந்தான். நல்ல வேளையாக எருமை மாடுகள் இரண்டும் கொட்டகையில் கட்டியது கட்டியபடியே இருந்தன. அப்படியானல் கன்னியம்மாளின் இந்த அதிகாலை ஆவேசக் கூப்பாட்டுக்குக் காரணம் என்ன?

''அவனை வெட்டிப் பாடையிலே வெக்க! மாட்டுக்குப் போட்டுப் புண்ணாக்கு வாங்கிறதுக்கு அந்த மோலியார் ஊட்டு அம்மாகிட்டே நேத்துக் கெஞ்சிக் கூத்தாடி ரெண்டு ரூபா கடன் வாங்கியாந்து துன்னூறு டப்பாவிலே போட்டு வைச்சிருந்தேன்; அதை எப்படியோ துருப்பிடிச்சுத் தூக்கிக்கினு ஓடிப்பிட்டானே, பாவி!''

இது வழக்கமான நடைமுறைப் புகார் தான் என்றாலும் கன்னியம்மாளின் இன்றைய ஓலக் கூச்சலிலே அளவுக்கு மீறிய ஓர் ஆத்திரம் வெடித்தது. சந்தடி செய்யாமல் புறக்கடைக்குப் போய்க் குளித்துவிட்டு, வேறு ஆடை மாற்றிக்கொண்டு வந்து ஒரு மூலையில் முடங்கி உட்கார்ந்து கொண்டாள் வேதா. இடியும் மின்னலுமாக மழை பெய்து ஓய்ந்தாற்போல் அந்த வீட்டில் அமைதி நிலவியது. கன்னியம்மாள் வாடிக்கை வீடுகளுக்குப் பால் கறக்க மாடுகளை ஓட்டிக் கொண்டு போய்விட்டாள் போலும்.

'இந்தத் துன்பமயமான என் வாழ்க்கைக்கு விடிவே இல்லையா?' என்று வாய் விட்டுப் புலம்பினாள் வேதா. மனச் சுமை



## ஐந்தாம் வகுப்பு படிக்கும் குழந்தைகளுக்குப் பாவைப் பரிசு

நமது நாட்டில் உள்ள ஒவ்வோர் ஆரம்பப் பள்ளிக்கூடத்திலும் ஐந்தாம் வகுப்புப் படிக்கும் குழந்தைகளில் திருப்பாவை முப்பது பாசுரங்களையோ, திருவெம்பாவை இருபது பாசுரங்களையோ மனப் பாடம் செய்ய அவாவுள்ள குழந்தைகளின் எண்ணிக்கையை ஐப்பசி மாதம் 30-ம் தேதிக்குள் எழுதி அனுப்பும் தொண்டில் ஈடுபடுமாறு ஆசிரியர்களை வேண்டிக் கொள்கிறேன்.

மனப்பாடம் செய்த குழந்தைகளுக்குத் தலைமை ஆசிரியர் மூலம் ஸ்ரீ அம்பிகையின் முத்திரையிடப்பட்ட ரக்ஷை காமகோடி ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளின் ஆசியுடன் அனுப்பப்படும்.

விவரத்துக்குக் கீழ்க்கண்ட விலாசத்துக்கு எழுதவும்.

காரியதரிசி

திருப்பாவை, திருவெம்பாவை

மத்தியக் குழு,

பெரிய கடைத் தெரு — மாயூரம்

கரையும்வரை நன்றாக அழுது தீர்த்தாள். நகர மன்றப் பள்ளிகளில் இனி தனக்கு வேலை கிடைக்கும் என்ற நம்பிக்கையே அவனிடமிருந்து சுத்தமாகத் துடைத்துக் கொண்டு போய்விட்டது. ஒரு வாரத்துக்கு முன்பே அவள் இம்முடிவுக்கு வந்துவிட்டதால் கடந்த சில தினங்களாகத் தனியார் பள்ளிகளில் போய் வேலைக்கு முயற்சி பண்ணிப் பார்த்து வருகிறாள். ஆனால் நேற்றுவரை எந்த இடத்திலும் நம்பிக்கையான பதில் கிடைக்கவில்லை. ஆயினும் மனம் தளராமல் இன்றைக்கும் முயற்சியில் இறங்கிப் பார்ப்பது என்ற முடிவுடன் எழுந்தாள்.

நேற்றிரவு அரை வயிற்றுக் கஞ்சியோடு படுத்து இன்று பொழுது புலர்ந்து இவ்வளவு நேரத்துக்கும் ஒன்றுமே சாப்பிடாமல் இருந்ததால் பசி அவளை வாட்டி எடுத்தது. அடுக்களைக்குப் போய் ஏதாவது இருக்கிறதா என்று ஆராய்ந்து பார்த்தாள். எப்போதோ வாங்கிய காப்பித்தூள் கொஞ்சமும் இரண்டு கரண்டி சர்க்கரையும் இருந்தன. பாலும் சிறிதளவு இருந்தது. காப்பி போட்டுக் குடித்துவிட்டு வெளியே கிளம்பலாம் என்று எண்ணியவளாய் அடுப்புப் பற்ற வைக்கத் தீப்பெட்டியைத் தேடினாள். தீப்பெட்டி இருந்தது: ஆனால் அதிலே தீக்குச்சிதான் ஒன்றுகூட இல்லை.

பக்கத்து வீட்டில் போய் நெருப்பு எடுத்து வர ஒரு விராட்டியை எடுத்துக்கொண்டு சென்றாள் வேதா. அவ்வீட்டின் எதிரே தெரு ஓரம் சட்டி பானைகள் சூளை போடப்பட்டு நெருப்பும் புகையுமாகக் கனிந்துகொண்டிருக்கவே, அதிலிருந்து நெருப்புத் துண்டமொன்றை எடுத்து வராட்டியில் வைத்துக் கொண்டு திரும்பியவள் தன் வீட்டெதிரில் ஓர் அழகிய பெரிய கார் வந்து நின்றதைக் கண்டு திகைப்புடன் ஏறிட்டுப் பார்த்தாள்.

அது ஒரு பி. டி. கார்; அதாவது, பிரைவேட் டாக்சி. அதிலிருந்து இறங்கிய மருதமுத்துவின் அந்தரங்கக் காரியதரிசிகளில் ஒருவன், அப்போதுதான் அங்கு மாட்டை ஓட்டிக் கொண்டு வந்து சேர்ந்த கன்னியம்மாளிடம் ஏதோ சொல்லத் தொடங்கினான். வேதாவின் மனமும் உடலும் அளவுக்கு மீறிய மகிழ்ச்சியாலும், உள்ளார்ந்த ஒருவித பயத்தாலும் வெடவெடவென உதற ஆரம்பித்தன. அங்கிருந்து ஒரே ஓட்டமாக ஓடித் தன் வீட்டில் புகுந்துகொண்டாள்.

சற்றைக்கெல்லாம், "ஏ, வேதகொமாரி!" என்று ஓசையாக — என்றைக்குமில்லாத பரிவுடன் — கூப்பிட்டுக் கொண்டே உள்ளே வந்தாள் கன்னியம்மாள். அவள் முகம் சந்தோஷத்தாலும், பெருமையாலும் மலர்ந்திருந்தது. என்ன செய்வதென்று தெரியாமல் அங்குமிங்குமாக நடந்து கொண்டிருந்த வேதா அவளைத் திகிலுடன் பார்த்து, "ஏம்மா! அவங்க யாரு?" என்று இரகசியக் குரலில் கேட்டாள்.

"உன் அண்ணாத்தைக்காரன் பெரிய ஆளுதான் போலிருக்குதடி!" என்று நெஞ்சு கொள்ளாப் பூரிப்புடன் சொன்ன கன்னியம்மாள் சட்டென்று குரலைத் தாழ்த்திக் கொண்டு, "காலம்பற அவன் மருதமுத்துவைப் போய்ப் பார்த்து உடுஉடுன்னு உட்டானும். 'கோவிச்சுக்காதேடா மச்சான்'னு அவர் சொல்லிப்பிட்டு, உடனே நாலஞ்சு இடத்துக்குப் போன் பண்ணினாராம். ஒரு பள்ளிக்கோடத்திலே டீச்சர் வேலை காலி இருக்குதுன்னு இப்பத்தான் 'நூஸ்' வந்துச்சாம். அதுக்குத்தான் காரை அனுப்பி உன்னைக் கூட்டியாரச் சொல்லி யிருக்கிறார்" என்று விளக்கினாள்.

இந்த விவரங்களைக் கேட்ட வேதாவுக்குக் குதூகலத்தால் தொண்டை அடைப்பது போல் ஆகியது. "இப்ப என்னம்மா செய்யறது?" என்று கொஞ்சலும் குழைவுமாக வினவினாள்.

"இன்னாடி பொண்ணே இது, நீ கேக்கற கேழ்வி? டீச்சர் உத்தியோகம் பார்க்கப் போற பொண்ணுக்குத் தெரியலையே! சீக்கிரமா தலையைக் கிலையை வாரி நல்ல சேலையாய்க் கட்டிக்கிட்டுக் கிளம்பு! அத்தோட கூட மறக்காம, என்னமோ சட்டிப்பாக்கெட்டாமே அதையும் எடுத்துக்க!" என்று துரிதப்படுத்தினாள் கன்னியம்மாள். பிறகு அவளே வேதாவுக்குத் தலைவாரிப் பின்னி முடித்தாள். பத்து நிமிஷங்களுக்குள் அமரிக்கையான அழகு அலங்காரத்துடன் தனது உபாத்தியாயினி வேலைக்கான சர்ட்டிஃபிகேட்டையும் எடுத்துக்கொண்டு புறப்படுவதற்குத் தயாரானாள் வேதா. தெருவில் நின்ற கார், ஹாரன் ஒலி எழுப்பியது.

"போயிட்டு வரட்டுமாம்மா?"

"பத்திரமா போயிட்டு வா, ராசாத்தி!" என்று அன்பும் பரிவுமாகச் சொன்ன கன்னியம்மாள் அவளது முகத்தை வழித்துத் திருஷ்டி கழித்து விட்டாள்.

தயக்கத்துடன் வெளியே எட்டிப் பார்த்த வேதா தன் தாயை ஒரு முறை திரும்பிப் பார்த்துவிட்டுத் தலை குனிந்தபடி காரை நோக்கி நடந்தாள்.

இந்தக் காட்சியைக் காணக் காணக் கன்னியம்மாளுக்குப் பெருமை பிடிபடாமல் போயிற்று. தன் பெண் காரில் ஏறிச் செல்வதை அக்கம் பக்கத்து வீட்டாரெல்லாம் பார்த்து மூக்கில் விரல் வைக்க வேண்டும் என்பதற்காக வேலிப் படலோரம் ஓடிவந்து நின்றுகொண்ட அவள், "வலது காலை எடுத்து வைச்சுக் காரிலே ஏறும்மா, ராசாத்தி! சாக்கிரதையாப் போயிட்டு வா!" என்றாள் உரத்த குரலில்.

காரின் மேல் அமர்த்தலாகச் சாய்ந்து நின்று சிகரெட் பிடித்துக் கொண்டிருந்த கருப்பண்ணனும், செங்கோடனும் சுறுசுறுப்புடன் நிமிர்ந்தனர்.

"இப்ப எங்கே போகணும், சார்?" என்று மெல்லிய குரலில் மரியாதையாகக் கேட்டாள் வேதா.

"இண்டர்வியூவுக்குப் போறோம்! சரிதானே?" என்று விஷமப் புன்னகையுடன் சொன்ன செங்கோடன் காரின் கதவைத் திறந்து விட்டான்.

வேதா ஏறி அமர்ந்ததும், அந்த அழகிய பெரிய கார், குண்டும் குழியுமாயிருந்த அச்சிறிய தெருவில் ஆடி அசைந்துகொண்டு கிளம்பிச் சென்றது. (தொடரும்)

ஜெமினி ஸ்டுடியோஸ்

அளிக்கும்



# மோட்டார் சுந்தரம் பிள்ளை

*கதையமைப்பிலே ஒரு புதுமை!*
*கருத்திலே ஒரு இனிமை!*

**காலமெல்லாம் கருத்தில் நிலைத்து நிற்கும்**
**இனியதொரு குடும்பச் சித்திரம்**

சிவாஜி கணேசன் · சௌகார் ஜானகி · ரவிச்சந்திரன் · ஜெயலலிதா
சிவகுமார் · காஞ்சனா · சூர்யகுமார் · ஆஷா · நாகேஷ் · குமாரி சரஸ்வதி

## எதிர்பாருங்கள்

# கந்தன் கருணை

திருமுருக கிருபானந்தவாரியார்

## 54. அற்புதப் போர்

பெருமானின் தோற்றத்தையும் பன்னிரண்டு திருக் கரங்களையும் கண்டான் சூரபன்மன். அவற்றின் அழகு அந்த அவுணனை ஈர்க்கவில்லை. பெருமான் தமது கரங்களில் ஏந்திய ஆயுதங்களே அவனுக்கு முக்கியமாகத் தெரிந்தன. 'ஓகோ, தன் வலிமையையும், வீரத்தையும் காட்டுகிறானோ?' என்றே சினமுற்றான் சூரன்.

மேரு மலை போன்ற வில்லை எடுத்துச் சூரபன்மன் நாண் ஏற்றினான். அதனைக் கண்ட பூத வீரர்கள் மலைகளையும், மரங்களையும், சூலங்களையும் சூரபன்மன் மீது எறிந்து போர் செய்தார்கள். சூரபன்மன் மழையெனப் பொழிந்த கணைகளால் பூதப் படைகள் அழிந்தன. இலக்கத்தெண்மர் சூரபன்மனைச் சூழ்ந்து கணைகளைப் பொழிந்தனர். அக்கணைகள் சூரபன்மனின் உடலில் பட்டு அழிந்தன. இலக்கத்தெண்மர் புறங் கொடுத்து ஓடினர். வீரவாகு தேவர் சூரபன்மனின் தேரிற் பாய்ந்து சிவபெருமான் தந்த வாளாயுதத்தினால் அவனுடைய வில்லை வெட்டினார். கடுஞ் சினங் கொண்ட சூரபன்மன் இடியேறு போல் அவர் மார்பில் அறைந்தான். உதிரம் பெருகச் சோர்ந்து கீழே விழுந்தார் வீரவாகுதேவர். அவரைத் தூக்கி ஆகாயத்தில் எறிந்தான். வானத்தில் சென்ற வீரவாகுதேவர் உணர்வு பெற்று விரைவில் மீண்டு வந்து முருகவேள் அருகிற் போய் நின்றார்.

வீரவாகுதேவர் வெட்டிய வில்லைக் கீழே எறிந்த சூரபன்மன், வேறொரு பெரு வில்லை எடுத்து நாணொலி செய்தான். அதனைக் கண்ட கந்தவேள் தாமும் ஒரு மகா தனுசை யெடுத்து வளைத்து டங்காரம் செய்தார். சூரபன்மன் இருபது இலட்சம் கணைகளைப் பொழிந்தான்.

குமாரக் கடவுள் எதிர்க் கணைகளை விடுத்து அவற்றை அநாயாசமாக அழித்தார்.

மேலும் மேலும் பாணங்களைக் குமாரக் கடவுள் மீது ஏவினான் சூரபன்மன். என்னே அவனது அறிவின்மை! நெருப்பை அழிப்பதாக எண்ணிக் கொண்டு யாரேனும் அக்கினிக் கோளத்தில் விறகை எறிவாரா? சூரனின் பாணங்கள் பரமனை அடைந்ததும் நெருப்பை அடைந்த விறகு போல் அழிந்தன. இவ்வாறாக, இருவரும், விடுக்கிற கணைகள் மண், விண், கடல், மலை முதலிய எங்கும் உலாவின. கந்தப் பெருமானும் சூரபன்மனும் போர் செய்வதைக் கண்ட வீரலட்சுமி, ''இவ்விருவருள் எவரிடம் செல்வது?'' என்று ஐயுற்று நின்றாள்.

குமாரக் கடவுளின் கணைகளையெல்லாம் சூரபன்மன் அழித்தெறிந்தான். அவருடைய தேரில் கட்டிய கொடியை அறுத்து வீழ்த்தி வெற்றிச் சங்கை ஊதினான். கணைகளை விடுத்து அவருடைய திருமேனியை மறைத்தான். முருகவேள் மகிழ்ச்சியோடு அவனது புஜபல பராக்கிரமம் முழுவதும் வெளியாவதற்கு இடமளித்தார். இனிபொறுப்பதற்கில்லை என்ற நிலை தோன்றியவுடன் ஏழு பாணங்கள் விடுத்துக் கொடியை அறுத்துக் கடலில் இட்டார். அதனைக் கண்ட பானுகம்பன் என்ற பூதப்படைத் தலைவன் தனது ஆயிரம் வாய்களிலும் ஆயிரம் வெற்றிச் சங்குகளை வைத்து ஜயகோஷம் எழுப்பினான். பானுகம்பனின் சங்கொலியைக் கேட்டுத் திருமாலின் பாஞ்சஜன்யம் சங்கும் திடீரென்று முழங்கியது. மற்ற தேவர்களும் தத்தமது சங்குகளை ஊதி ஆர்த்தனர்.

அக்கினி தேவனிடம் அமரர்கள், ''நமது குமாரக் கடவுளின் தேரில் கொடியில்லை. ஆதலால் நீ சென்று கொடியாயிருப்பாயாக'' என்று ஏவினார்கள். தேவர்கள் பணித்தவாறு அக்கினி தேவன் கோழிக் கொடியாகி முருகப் பெருமான் திருத்தேரின் மீது ஏறி அண்டங்கள் வெடிபடக் கூவினான்.

> ஏவ லோ்டும்
> எரிதழற் பண்ணவன்
> வாவு குக்குட
> மாண்கொடி யாகியே
> தேவ தேவன்
> திருநெடுந் தேர்மிசை
> மேவி ஆர்த்தனன்
> அண்டம் வெடிபட

இமையவர்களின் ஆரவார ஒலி கேட்டுச் சினந்த சூரபன்மன், தேவர்

களை நோக்கி, ''என் முன்னே வருவதற்குப் பயந்திருந்த தேவர்களே! உங்களுக்கு இத்துணை ஆணவமா? ஆரவாரமா? முதலில் உங்களைக் கொல்வேன்'' என்று தேரை வானத்தில் செலுத்தினன். சூரபன்மன் தேரோடு விண்ணுலகத்தில் நின்று கோடானு கோடி பாணங்களைத் தேவர்கள் மீது செலுத்தினன். அதனால் தேவர்கள் புண்பட்டுச் சிதறி ஓடினர்கள். அதனைக் கண்ட கந்தக் கடவுள் பூமியில் நின்றபடியே எண்ணற்ற பாணங்களை விடுத்துச் சூரபன்மனின் கணைகளை அழித்தார். பின் வாயுவை நோக்கி, ''நம்முடைய தேரை விரைந்து வானத்தில் செலுத்து'' என்று பணித்தார். வாயு தேரைச் செலுத்திக் கொண்டு விண்ணுலகத்தில் சூரபன்மனுக்கு எதிரே கொண்டு போய் நிறுத்தினர். சூரபன்மனுக்குப் பயந்து சிதறிய ஓடிய தேவர்களுக்குக் குமாரக் கடவுள் அபயஹஸ்தம் தந்து அவுண மன்னனுடன் அற்புதப் போர் புரிந்தார். இருவருடைய தேர்களும் காற்றாடி போலவும் குயவனின் கைத் திகிரி போலவும் சரளமாகச் சுழன்றன. பாதாளத்திலும், கடல் நடுவிலும், அண்ட கடாகங்களிலும் சாரிகை வந்தன. அத்தேர்களின் ஒலியைக் கேட்டுத் தேவர்கள் பாடினர்கள். யட்சர்கள் மருண்டார்கள்; நாகர்கள் அலைந்தார்கள்; மலைகள் பிளந்தன; கடல்கள் வற்றின; பூதலம் நடுங்கின; நட்சத்திரங்கள் உதிர்ந்தன; மேகங்கள் சிந்தின.

இறுதியில் தேரையும், குதிரைகளையும், பல ஆயுதங்களையும் இழந்த சூரபன்மன் கையிலேந்திய வில்லோடு பூமியை அடைந்தான். சுவாமியும் பூதலமுற்றார். மீண்டும் பயங்கரப் போர் நடந்தது.

வெற்றி தோல்வியில்லாமல் போர் நீடித்தது. சூரபன்மன் மாய யுத்தம் செய்ய எண்ணி விண்ணில் தோன்றினன். உடனே குமாரக் கடவுளும் அவனைப் பின்தொடர்ந்து வானத்தில் சென்று அவனை எதிர்த்தார். சூரபன்மன் மீண்டும் மண்ணில் தோன்றினன். முருகவேளும் பூமியில் வந்து போர் செய்தார். சூரபன்மன் அங்கிருந்து மறைந்து தன் வடிவை மறைத்து நன்னீர்க் கடல் நடுவில் தோன்றினன். எங்கும் எப்போதும் தங்கும் முருகவேள் அங்கும் தோன்றிப் போர் செய்தார். சூரபன்மன் அவ்விடத்திருந்தும் மறைந்து திக்கின் முடிவுக்குச் சென்றான். முருகக் கடவுள் தொடர்ந்து சென்று சமர் செய்தார். சூரன் பாதாளத்துக்குச் சென்றான். முருகவேளும் பாதாளத்தில் பாத தளம் பொருத்திப் போர் செய்தார். சூரபன்மன் அங்கிருந்து மறைந்து மேரு மலையின் உச்சியில் தோன்றுவான்; மேக நடுவில் தோன்றுவான். முருகவேளும் ஆங்காங்கு தொடர்ந்து சென்று போர் புரிந்தார். சூரபன்மன் தன்னுடைய இந்திரஞாலத் தேரை நினைத்து அழைத்து அதன் மீதேறி ஒரு கணப் பொழுதும் ஓரிடத்தில் நிற்காமல் சூறைக் காற்று போல் சுழன்று அண்டகோளகையின் வாயிலை அடைந்தான். அங்கு சேனைகள் வராவண்ணம் முருகவேள் தம் கணைகளினல் வாயிலை அடைத்திருப்பதைக் கண்டு நகைத்தான். வில்லை வளைத்துப் பல கோடி கணைகளைச் செலுத்தி அண்ட கடாகத்தின் வாயிலை மூடியிருந்த தடைகளைத் துணித்தான். உடனே அப்பால் அண்டங்களில் நின்று கொண்டிருந்த நால்வகைச் சேனைகளும் ஆர்த்து வந்தன. அவை ஆயுதங்களை எறிந்து குமாரக் கடவுளைச் சூழ்ந்தன. குமரவேள் தீ எழும்படி சிறுநகை செய்தார். அந்தச் சேனைகள் யாவும் சாம்பராயின. உடனே மற்றோர் அண்டத்துள்ள சேனைகள் வந்து கந்தவேளை எதிர்த்தன. அந்தச்சேனைகளை ஹுங்காரத்தாலும் பார்வை





''பெண்களின் கண்களைக் கயல் விழிகள் என்று ஏன் மீன்களோடு ஒப்பிட்டுச் சொல்கிறார்கள்?''

''மணிபர்ஸ் என்ற தடாகத்தில் நீந்துவதால்...!''

யாலும் அழித்தார் எம்பெருமான். மீண்டும் மீண்டும் வேறு அண்டங்களி லுள்ள சேனைகள் வந்து கொண்டே யிருக்க, குமாரக் கடவுள் தமது திருக் கரத்திலுள்ள மழு, சூலம், சக்கரம், தண்டு, எழு என்ற ஐந்து படைக்கலங் களை நோக்கி, ''நீங்கள் விரைந்து சென்று நம்மைச் சூழ்ந்த அவுண சேனைகளையும் கொன்று வாருங்கள்'' என்று கூறி விடுத்தார். அப்படைக் கலங்கள் பற்பல உருவங்களை எடுத் துச் சென்று ஆயிரத்தேழு அண்டங் களுக்கும் சென்று அங்குள்ள சேனைகள் யாவற்றையும் அழித்து மீண்டன.

பல கோடி அவுணர்களும் அழிந்த தைக் கண்ட சூரபன்மன், 'ஒரு கணப் பொழுதில் இவனைக் கொல்வேன்' என்று கூறி முன்னர்ச் சிவபெருமான் தந்த சக்கரப் படையை எடுத்து வழி பட்டு முருகவேள் மீது செலுத்தி னன். முருகப் பெருமான் அதனை ஒரு திருக்கரம் நீட்டிப் பரிசுப்பொருளைப் பெறுவது போலப் பற்றினார்.

மனம் தளர்ந்தான் சூரபன்மன். உள்ளத்தை உறுதிப்படுத்திக் கொண்டு இந்திரஞாலத் தேரின் மீதேறினன். மாயையால் அளவற்ற உருவங்களை எடுத்துப் பாண மழை பொழிந் தான். குமாரக் கடவுள் ஞானாஸ் திரத்தை எடுத்து விடுத்தார். அந்த அஸ்திரம் விரைந்து சென்று சூரபன்ம னின் மாயைகளையெல்லாம் அழித் தது. வலியிழந்த சூரபன்மன் தேரோடு மறைந்து போய் விட்டான். அவ னுடன் எம்பெருமானும் மறைந்து போனார். அண்டங்கள் எல்லாம் நிலை குலைந்தன. முருகக் கடவுளைக் காணாது அமரர்கள் தாய் தந்தையரை விட்டுப் பிரிந்த குழந்தைகள்போல் வாடி வருந்தினர். பிரம்மதேவர் முதலி யோர் திருமாலிடம் சென்று, ''சூர பன்மனைத் தொடர்ந்து சென்ற பெரு மானின் நிலை யாதோ?'' என்று முறையிட்டுக் கொண்டனர்.

ஓதி யாகியும் உணர்ந்தவர்க்
குணர்வும் ஒன்னு

நீதி யாகியும் நிமலம
தாகியே நிகழுஞ்

சோதி யாகியும் தொழுதிடும்
எம்மனோர்க் கெல்லாம்

ஆதி யாகியும் நின்றவன்
அறுமுகன் அன்றோ!

''தேவர்களே! அஞ்சாதீர்கள! ஆதி பரம்பொருளாக இருக்கிற எம் பெருமானுக்கா ஆபத்து வரும்? சூர பன்மன் வலிமையை மதித்து அச்சப் படாதீர்கள். ஆறுமுகக் கடவுளாக விளங்குபவர் ஆதிமுதல்வர் என்பதை நீங்கள் மறந்து விடாதீர்கள்'' என்று கூறினார் திருமால்.

திருமால் கூறியதைக் கேட்டுத் தேவர்கள் மனத் தெளிவும் மகிழ்ச்சி யும் பெற்றனர்.

எல்லா அண்டங்களுக்கும் ஓடிய சூரபன்மன் அங்கெல்லாம் முருக வேளுடன் போர் செய்து கடைசியில் மகேந்திரபுரிக்கே திரும்பினன். குமாரக் கடவுளும் திரும்பி வந்து தேவர்கள் நெஞ்சில் பால் வார்த்தார். விடாது தொடர்ந்து சென்றார். அங்கிருந்த அவுண வீரர்கள் முருகவேளைச் சூழ்ந்து ஆரவாரம் செய்தனர். ஆறுமுகக் கடவுள் அந்தச் சேனைகளை நோக்கித் திருப் புன்முறுவல் செய்தார். அந்தப் புன்முறுவலால் சூரபன்மன் சேனை முழுவதும் அழிந்தது. அவுண சேனைகள் எல்லாம் அழிந்ததைக்கண்ட தேவர்கள் மகிழ்ந்து பூமாரி பொழிந்தார்கள்.

அவுண சேனைகள் எல்லாம் அழிந்து தனித்து நின்றான் சூரபன்மன்.

(தொடரும்)



ஸில்வர் சிப்ஸ்
Silver chips
தூய சலவைக்கும், துகிலின் வெண்மைக்கும்
அரிய, அற்புதத் தயாரிப்பு.
மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல்
கார்ப்பொரேஷன் லிமிடெட்
மேட்டூர் அணை R. S.
சேலம் ஜில்லா
மானேஜிங் ஏஜெண்ட்ஸ்:
சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிமிடெட்
Criterion-MC-615

அஜீரணத்தை

# அகற்ற



பிலிப்ஸ்

## மில்க் ஆப் மெக்னீஷியா டாபிலெட்

## உடனடி நிவாரணமளிக்கிறது

4 மாத்திரைகள்
20 பைசா




ஒவ்வொரு சுவையான பிலிப்ஸ் மாத்திரையும் உடனடியாக அதனுடைய எடைக்கு 189 மடங்கு அதிகப்படியாக வயிற்றில் உண்டாகும் எரிச்சல், புளிப்பான ஏப்பம் முதலியவற்றை இயக்கும் சக்தியுள்ளதால், மற்ற எல்லா மாத்திரைகளையும் விட வெகு விரைவில் குணப்படுத்துகிறது.

குழந்தைகள் இதன் இனிமையான சுவையை மிட்டாய் போன்று விரும்பிச் சாப்பிடுகிறார்கள். இதில் பரபரப்போ, தொல்லைகளோ கிடையாது. குடும்பத் தேவைகளுக்கு சிக்கனமான முறையில் 75 மற்றும் 150 மாத்திரைகள் கொண்ட பாட்டில்களில் கிடைக்கும். இப்பொழுதே உபயோகித்துப் பாருங்கள், எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்.

# பிலிப்ஸ்

## மில்க் ஆப் மெக்னீஷியா டாபிலெட்

மான்யுபாக்சரர் : ரிஜிஸ்டர்ட் யூஸர்
டேய்ஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் (மான்யுபாக்சரிங்) பிரைவேட் லிமிடெட்,
62, பண்டல் ரோட், கல்கத்தா-19

# பல்சுவைப் பக்கங்கள் 1

## செருப்பை விழுங்கும் எருமை!



உத்தரப் பிரதேசத்தில் 'பாரான்' என்னும் ஊரில் ஓர் எருமை எங்காவது செருப்பு கிடந்தால் உடனே அதைத் தின்று விடுகிறதாம். புல், தவிடு, புண்ணாக்கு இவற்றில் விருப்பம் கிடையாதாம். அந்த ஊர் பஞ்சாயத்தார் அதைக் கால்நடை வைத்தியசாலைக்கு அனுப்பி வைத்தார்கள். அங்கே அதன் வயிற்றை ஆபரேஷன் செய்து பார்த்ததில் 22 செருப்புகள் முழுசாகக் கிடைத்தனவாம். மற்றவை ஜீரணமாகி யிருக்கும் என்று கருதப்படுகிறது. ஆதாரம்: 'நவ பாரத் டைம்ஸ்'

## கால்களின் விலை ஐம்பது லட்சம்



ஹாலிவுட்டிலுள்ள நடிகைகளிலேயே மிக நீண்டதும் அழகானதுமான கால்களை உடைய நடிகையாக 'ஆங்கி டிக்கின்சன்' கருதப்படுகிறார். அவர் தம்முடைய இரு கால்களையும் கிட்டத்தட்ட அரைக்கோடி ரூபாய்க்கு லண்டனில் உள்ள லாயிட்ஸ் நிறுவனத்திடம் இன்ஷுர் செய்து கொண்டிருக்கிறார்.

## இவை எல்லாம் தெரியுமா?

1. 'தீ' என்றால் நெருப்பையும்—'பூ' என்றால் 'மலரை'யும் குறிக்கிறது. இப்படி ஒரே ஓர் எழுத்தை மட்டும் சொல்ல வேண்டும். அந்த ஓர் எழுத்து தனித்து நின்று ஒரு பொருளைக் குறிக்க வேண்டும். எத்தனை எழுத்துக்களைச் சொல்ல முடியும்? சொல்லுங்கள் பார்க்கலாம்!

2. தாமரை — வேங்கை — எழுந்திருந்தான் — இவற்றுக்கு வேறு பொருள் கூற முடியுமா?

3. சால, தவ, உறு, நனி, கூர், கழி இவற்றுக்கெல்லாம் ஒரே பொருள். அந்த ஒரே பொருளைத் தரும் சொல் உங்களுக்கு அதிகமாகத் தெரிந்ததே! அந்தச் சொல் என்ன?

4 'அந்தோ!' என்று எழுதுகிறோம். சொல்கிறோம். இது தமிழ்ச் சொல்லா?

5. ஈ, தா, கொடு என்று சொல்வதில் வேற்றுமை இருக்கிறதா?

6. ஓரறிவு முதல் ஐந்தறிவு வரை உள்ள ஜீவராசிகள் எவை என்று கூற முடியுமா?

[விடை : 45-ம் பக்கம் பார்க்கவும்]

— முத்துலட்சுமி

## பூச்சிகளுக்குத் தொல்லை!

கரப்பான் பூச்சி, மூட்டைப் பூச்சி, ஈ இவற்றை அழிக்க நம் வீடுகளில் மருந்து வாங்கித் தெளிக்கிறோம். ஏன்? அவை நமக்குத் தொல்லை தருகின்றன என்பதால். ஆனால் மனிதர்கள் மட்டும் பூச்சிகளுக்குத் தொல்லை கொடுப்பதில்லையா? இதோ சில உதாரணங்கள்:

காமாலை வியாதியைக் குணப்படுத்த, சில அமெரிக்க விவசாயிகள் பேன்களைப் பிடித்து உண்ணுகிறார்கள்!

செவ்விந்தியர்கள் கரப்பான் பூச்சிகளைக் கொளுத்திச் சாம்பலாக்கி அதில் தண்ணீர் கலந்து சிறந்த டானிக் என்று கருதிக் குடிக்கிறார்கள்!

வயிற்றுவலியைப் போக்கக் கிரேக்கர் சக்களைத் தேனில் போட்டுச் சாப்பிடுகிறார்கள்!

நரம்புத் தளர்ச்சியைக் குணப்படுத்த வண்டுகளைப் பாலிடன் சமைத்து செக்கோஸ்லாவிய விவசாயிகள் உண்ணுகிறார்கள்! வழுக்கை விழுந்த தலையில் மயிர் வளரும்படி செய்ய ஈக்களைப் பிடித்து அதன் தலைகளைத் தனியே எடுத்துத் தங்கள் வழுக்கை மண்டையில் தேய்த்துக் கொள்கிறார்கள்!

அமெரிக்காவில் டாக்டர் ஹார்வின் என்பவர் பூச்சிகளைப் பற்றி வெகுகாலமாக ஆராய்ச்சி செய்து 1500 புத்தகங்களுக்கு மேல் எழுதியிருக்கிறார்.

அவர் கொடுக்கும் தகவல்கள்தாம் இவை.

—காழி ஜெயா







''உணவுப் பஞ்சம் மாதிரி உடைப் பஞ்சம் ஏற்பட்டால்.....''

''தாராளமாகத் துணி கிடைக்கும் போது அரைக் கை சோளி போட்டுண்டு மானத்தை வாங்கற மாதிரி, துணிப் பஞ்சம் ஏற்பட்டால் முழுக் கை தொள தொள ஜிப்பா போட்டுக்கணும்னு உயிரை வாங்குவீங்க !''

## ஓர் எபிரேய கட்டுக்கதை



ஒரு நாள் ஆபிரகாம் தம் கூடாரத்தின் வாயிலில் அமர்ந்திருந்த போது நூறு வயதான ஒரு கிழவன் கைக்கோலை ஊன்றிக் கொண்டு வரக் கண்டார். உடனே அவர் எழுந்து போய் அந்தக் கிழவனை அழைத்துச் சென்று அன்னமிட்டு உபசரித்தார். ஆனால் அந்தக் கிழவன் கடவுளுக்கு நன்றி செலுத்தாமல் உண்ணத் தொடங்கியதைக் கண்ட ஆபிரகாம் கோபத்துடன் அவன் கையைப் பிடித்துத் தூக்கி வீட்டுக்கு வெளியே கொண்டு போய் விட்டு விட்டார்.

பின்னர் ஆபிரகாம் ஜெபம் செய்தபோது, கடவுள் அவருக்குக் காட்சியளித்து, 'நான் உன்னிடம் அனுப்பிய மனிதன் எங்கே?' என்று கேட்டார்.

'அவன் உம்மை வணங்காததால், அவனைத் துரத்தி விட்டேன்' என்றார் ஆபிரகாம்.

கடவுளோ, 'கடந்த நூறு ஆண்டுகளாக அவன் என்னை வணங்காவிட்டாலும் நான் பொறுமையாயிருக்கிறேன். உனக்கு ஒரு தீங்கும் செய்யாத அவனுக்கு நீ ஓர் இரவாகிலும் பொறுமை காட்டக் கூடாதா?' என்றார்.

ஆபிரகாம் வெட்கப்பட்டு உடனே ஓடிப் போய் அந்தக் கிழவனை அழைத்து வந்து உணவளித்து உபசரித்தார். அனுப்பியவர் : டமெம்மேஸ்.

## பல்சுவைப் பக்கங்கள் 2

## ஆர்ப்பாட்டம் செய்த அரசிகள் ஆறு பேர்

● இங்கிலாந்தின் முதல் எலிஸபெத் மகாராணிக்கு விதம்விதமான ஆடைகளை அணிவதில் அலாதி ஆனந்தம். அநேகமாக ஒவ்வொரு நாளும் புதிய உடைகளையே அணிய விரும்பினாள். ஒரு சந்தர்ப்பத்தில் அவள் விரும்பி உடுக்கும் உடைகளின் எண்ணிக்கை இரண்டாயிரத்தையும் தாண்டியதாம்!

● எட்டாவது ஹென்றியின் மனைவியான ராணி ஆன்போலின் எந்த நேரத்திலும் கை உறைகளுடனேயே காணப்படுவாள். ஒரு கையிலுள்ள ஆறாவது விரல் பிறர் பார்வையில் விழக்கூடாதே என்ற அச்சம்தான்!

● விக்டோரியா மகாராணி எப்போதும் கறுப்பு நிற பிளாட்டிங் பேப்பர்களையே எழுதும்போது உபயோகிப்பாள். தன் அந்தரங்கக் கடிதத்தின் வாசகங்களை யாரும் மை ஒற்றும் தாளிலிருந்து படித்துத் தெரிந்துகொள்ளக் கூடாது என்ற பயம்.

● ரஷ்ய ராணி காதரினுக்கு ஒவ்வொரு நாளும்போது யாராவது சேடிகள் காலைக் கூச்சம் காட்டிக்கொண்டே யிருக்க வேண்டும்.

● ஆஸ்திரிய நாட்டு எலிஸபெத் ராணி தூங்கும்போது இடுப்பைச் சுற்றி ஈரத் துணியைச் சுற்றிக் கொள்வாள். உடம்பு இளைக்க அது ஒரு வழி என்று கருதப்பட்ட காலம்.

● பிரான்ஸின் மன்னன் மூன்றாவது நெப்போலியனின் மனைவி யூஜின் ஒருதடவை போட்ட மிதியடிகளை மறுதடவை மாட்டிக் கொள்ள மாட்டாளாம்!

— மேனு (ஆதாரம்: காரனெட்)

## தெரிகிறதா ?

சென்னை கிறித்தவக் கல்லூரியில் பேராசிரியராக இருந்த டாக்டர் பௌள் அவர்களைப் பற்றி நிலவும் ஏராளமான தமாஷ்களில் ஒன்று!

ஒரு சமயம் ஹாஸ்டல் மாணவர் சிலருக்கு வான சாஸ்திரம் சொல்லித் தந்து கொண்டிருந்தார். இரவில் பாடங்கள் நடக்கும். ஓர் இரவு, ஒரு குறிப்பிட்ட நட்சத்திரத்தைச் சுட்டிக் காட்டியபோது ஒரு மாணவன், ''எங்கே இருக்கிறது? எனக்குத் தெரியவில்லையே!'' என்றான்.

உடனே டாக்டர் பௌள் கையிலிருந்த டார்ச் விளக்கை வானத்தை நோக்கிப் போட்டு, ''இப்போது தெரிகிறதா?'' என்று கேட்டாராம்.

- நஙி

## பல்சுவைப் பக்கங்கள் 3





★ஒரு பவுண்டு பட்டு நூல் அதிகக் கனமா அல்லது ஒரு பவுண்டு சிலந்தி வலை அதிகக் கனமா என்று கேட்டால் டக் கென்று பதில் சொல்லி விடு வீர்கள். ஆனால் உண்மையில் இலேசானது எது ?

ஒரு பவுண்டு பட்டு தயார் செய்ய 2,300 பட்டுப் பூச்சிகள் தேவை.

ஒரு பவுண்டு எடையுள்ள சிலந்திக் கூடு கட்ட, 27,600 சிலந்திகள் தேவை.

★ஈயின் குடலுக்குள் சுமார் இரண்டு கோடியே எண்பது லட்சம் நோய்க் கிருமிகள் ஒட்டிக் கொண்டிருக்கின்றன!

★கொசுக்கள் நிறைந்த ஓர் இடத்தில் ஒரு மனிதனை உடைகள் ஏதுமின்றிப் படுக்க வைத்தால், அவன் உடலில் உள்ள ரத்தம் முழுவதையும் 1 மணி 46 நிமிஷத்தில் கொசுக்கள் குடித்து விடும்! கொசு நிறைந்த பகுதி களில், ஒரு நிமிஷத்தில் 280 கொசுக்கள் கடித்து மனிதனின் இரத்தத்தைக் குடிக்கின்றன. இந்தத் திடுக் கிட வைக்கும் கவலையான தகவல் கொசுக்கடி பற்றிக் கனடாவில் நடந்த ஓர் ஆராய்ச்சியில் கிடைத்தது.

★உலக வாழ்வு அநித்திய மானது. கடைசியில் மிஞ்சுவது சாம்பல்தான் என்பார் வேதாந்திகள். அந்தச் சாம் பல்தான் எவ்வளவு என்று யாரேனும் கணக்கெடுத்த துண்டா? மனித உடலின் சடலம் தகனம் செய்யப்பட்ட பின்னர் மிஞ்சுவது 5 முதல் 7 பவுண்டு சாம்பல்.



ஐ. நா. வில் பாரத நாட்டின் பிரதிநிதி யாக நம்மவர் உள்ளனர். இது தெரிந்த விஷ யமே. ஆனால் பாரத நாட்டைத் தவிர பிற தேசங் களின் பிரதிநிதிகளாகவும் சில இந்தியர்கள் உண்டு! கீழ்ப் படத்தில் பாகிஸ்தான் ஆக் கிரமிப்பின்போது பாரத நாட்டுக்கு ஆதரவாக வெளு வெளு வென்று வெளுத்துக் கட்டிய மலேஷியப் பிரதிநிதி ராதாகிருஷ்ண ராமணி. அவருக்கு அருகில் ஊதாண்ட். மேல் படத் தில் ஆப்பிரிக்க நாடாகிய கென்யாவின் பிரதிநிதி எம். ரி. சிங்.

தகவல், படங்கள்: பி. ஸ்ரீ. கிருஷ்ணய்யா.

### ஓ! இவையெல்லாம் தெரிந்தவையே!

1. ஆ — பசு; ஊ — இறைச்சி; ஓ—மதகு நீர் தங்கும் பலகை; பே — நுரை; நே — அன்பு; நொ — துன்பப்படு; சோ — மதில்; து — உண்; ஈ—கொடு.
2. தாவுகின்ற மான், வேகின்ற கை, எழுந்து பின் நின்றான்.
3. மிகுதி.
4. சிங்களம்.
5. 'ஈ' என்றால் இழிந்தவன் உயர்ந்த வனிடம் பிச்சை கேட்டல். 'தா' என்றால் சரிசமமான நிலை யில் உள்ள இருவர் ஒருவர் மற்றவரிடம் கேட்பது. 'கொடு' என்றால், உயர்ந்தவன் தன்னைவிடத் தாழ்ந் தவனிடம் அதிகாரத் தோடு ஆணையிடல்.
6. ஓரறிவு — புல் லும் மரமும்; ஈரறிவு— சிப்பியும் சங்கும்; மூவறிவு— கறையா னும் எறும்பும்; நாலறிவு — தும்பியும் வண்டும்; ஐந்தறிவு — மனிதனும் மிருகமும்.






கண்ணைப் பறிக்கும் வெண்மை! கச்சிதமான தூயமை! எல்லாம் ஸர்ப் செயல்...அதன் எல்லை கடந்த வல்லமை! ஏராளமான நுரை, சலவையே வெகு எளிது. சிறுவர் ஆடை, சட்டை, சேலை....எதற்கும் நிகரில்லாத வெண்மை, சிகரமான தூய்மை. கைப்பட வீட்டிலே சலவை செய்திடவே கைகண்ட துணை ஸர்ப்.

## ஸர்ப் சலவை: வெள்ளைவெளேர் சலவை

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.

லின்டாஸ்-SU.49-140 T

# [illegible] இல்லையேல் [illegible]



## சோ

[சுரேஷ், பம்பாய்ப் பிரமுகர் சபேசனை எப்படியா வது மயக்கி அவரைத் தன் வழிக்குக் கொண்டு வரப் பெரு முயற்சி செய்கிறான். கடைசியில் அவன் விருப் பப்படி நாகராஜனுக்கு உதவுவதாகவும் வாக்களிக் கிறார் சபேசன். ஆனால் அந்த உதவி எப்படிப்பட்டது என்று தெரிந்தால் சுரேஷ் மூர்ச்சையடைந்து விழுந்து விடுவான். அவர் செய்யவிருக்கும் உதவி என்ன என்று பார்க்கலாம்!]

சபேசன்: எனக்குத் தெரிஞ்சவங்கிட்ட சொல்லி...

சுரேஷ் (சந்தோஷமாக): உம்...உம்...

சபே: பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலே சேர்த்துடலாம். பாவம்!

சுரே: அய்யய்யோ! நியாரு! நீ பைத்தியக் கார ஆஸ்பத்திரியிலா இருக்கணும்? ஸார் அவன் எப்படி ஸார் பைத்தியக்கார ஆஸ் பத்திரியிலே இருப்பான்?

சபே: பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலே இருந்தா என்னய்யா? இப்போ உன் ரூமிலே இல்லையா? அந்த மாதிரி அங்கே இருந்துட்டுப் போறான்!... நீ அடிக்கடி போய்க் கவனிச் சுக்க...

சுரே (விக்கி விக்கி அழுகிறான்): அவன் பெண்டாட்டி, பசங்க கதி என்ன ஸார்? அன்னையன் பெரிய கவிஞன். அவன் செத்துப் போன பிறகு அவன் குடும்பம் இப்படியா பாழாய்ப் போகணும்?

சபே: கவலைப்படாதேய்யா. அவன் குடும் பத்தை நான் காப்பாத்தறேன்.

சுரே: நிஜமாவா ஸார்?

சபே: என்னாலே முடிஞ்ச உதவியைச் செய்யறேம்பா!

சுரே: ஸார்... உங்கள் மாதிரி மனசு யாருக்கு ஸார் வரப்போகிறது? ஸார்... நாகராஜன் மறைவைக் குறிச்சு அநுதாபம் தெரிவிக்க ஒரு பொதுக்கூட்டம் நடக்கப் போறது. நீங்கதான் ஸார் அதற்குத் தலைமை வகிக்கணும்.

சபே: சே...சே... நான் எதுக்கப்பா?

சுரே: நீங்க தலைமை வகிக்கலேன்னு மீட் டிங்கே வேணாம் ஸார்.

சபே: சே...சே! பரவாயில்லே. நானே 'பிரஸைட்' பண்றேன். கும்மா மாலே, கிலே எல்லாம் போடக் கூடாது.

சுரே: அதில்லாமல் எப்படி ஸார்?

சபே (மாலே உண்டு என்ற திருப்தியோடு): சரி, தொலையட்டும். பேப்பர்லே நியூஸ் எல்லாம் போடக் கூடாது.

சுரே: அது போடலேன்னு எப்படி ஸார்?

சபே (பத்திரிகையில் வரும் என்ற சந் தோஷத்தோடு): சரி, அதுவும் போகட்டும். ஆனால் இப்பவே சொல்லிட்டேன். என் போட்டோ மட்டும் போடவே கூடாது.

சுரே: சே! இவ்வளவும் பண்ணிப்பிட்டு அந்த ஒரு குறை மட்டும் வைக்க முடியாது. உங்க போட்டோ ஒண்ணு எங்கிட்ட இருக்கு. போன மாசம் எடுத்தது. அதைக் கண்டிப்பா போடப் போறேன் ஸார்.

சபே: சே!.. அதெல்லாம் போடக்கூடா துய்யா.

சுரே: நீங்க அந்த மாதிரி சொல்லக் கூடாது ஸார்.

சபே: முடியாது... நீ போடக் கூடாது.

சுரே: ஸார் போட்டோ போடாமல் எப் படி ஸார்?

சபே: போட்டோ போட வேண்டாம்னு யாருய்யா சொன்னது? போன மாசம் எடுத்த போட்டோவைப் போடாதே. சின்ன வயசிலே எடுத்த போட்டோ இருக்கு அதைத் தரேன், போடு நல்லா யிருக்கும்!

சுரே: ஓ!... சரி, சரி! யெஸ்...

சபே: இந்தப் பொதுக்கூட்டம் ஆனதும் அந்தப் பையனைப் பைத்தியக்கார ஆஸ் பத்திரியிலே சேர்க்க நான் ஏற்பாடு பண் ணிடறேன்.

சுரே: அய்யய்யோ!

சபே: அவன் குடும்பத்தைப் பத்தி நீ கவலைப்படாதே! ஏதோ கொஞ்சம் பணம் கொடுத்திடலாம். இந்தப் பையன்தான் பாவம், பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலே! அவனைக் கண்டிப்பா அதிலே சேர்த்துத்தான் ஆகணும்!

### காட்சி-19

பம்பாயில் சுரேஷ் அறை

[சுரேஷும் நாகராஜனும் பேசிக் கொண்டிருக் கின்றனர்.]

நாக: எல்லாம் விவரமா சொல்றேன்னு சொன்னியே, சொல்லேண்டா. சபேசன் வீட்டிலே என்ன நடந்தது.

சுரே: நாகு! சபேசன் நான் சொன்னதை அப்படியே நம்பிட்டாரு. இனிமே அவர் இட்ட பணம் வாங்கறது ரொம்ப கஷ்டம்.

நாக: நம்பின உடனேயே ஏதாவது கொஞ்சம் அட்வான்ஸா கேட்டு வாங்கிக் கிட்டு வரதுதானேடா?

கரே: சரியான மடையன்டா நீ.

நாக: இல்லாட்டி உன்னே நம்பி நான் பம்பாய்க்கு வருவேனு?

கரே: இப்ப உனக்கு என்னடா குறைஞ்சு போச்சு? அந்தச் சபேசனே எப்படியெல்லாம் பேசி நம்ப வைச்சேன் தெரியுமா?

நாகு: அவர் என்னடா சொன்னுர்....?

கரே: சபேசன் உனக்கு எப்பேர்ப்பட்ட ஏற்பாடு பண்ணப் போறுர் தெரியுமா?

நாக (ஆவலோடு): என்னடா?

கரே: பம்பாயிலே நீ தங்கறதுக்கு ஒரு பெரிய பில்டிங்...... உன்னேக் கவனிக்கிற துக்கு எக்கச்சக்கமான ஆட்கள்.... உனக்கு வேளா வேளைக்குக் கரெக்டா நேரப்படி சாப்பாடு..... உன்னே யாராவது பார்க்கிறதுன்னு முன்னுலேயே பர்மிஷன் வாங்கிக் கிட்டுத்தான் வரணும். அந்த மாதிரி நீ பம்பாயிலே இருக்கிறதுக்கு வழி பண்றதா சபேசன் சொல்லியிருக்கார்ரா!

நாக: டேய்! ரொம்ப தாங்க்ஸ்டா!.. எங்கேடா இடம் அது?

கரே: பைத்தியக்கார ஆஸ்பத்திரி! உன்னே அங்கே சேர்க்கிறதுக்குச் சபேசன் கண்டிப்பாக உதவி பண்ணறதா சொல்லியிருக்கார்.

நாக(இடிந்து போய்): அடப்பாவி!

கரே: நான் என்னடா செய்யறது? அவர் என்னே என்னவெல்லாமோ கேள்வி மேலே கேள்வி கேட்டுக் குழப்பிப்பிட்டாரு. அவர் சாதாரணமா பேசினுலே குழப்பம் தான். இன்னிக்குக் கேக்க வேண்டாம்! எனக்கு ஒரே கன்ப்பூஷன். ஏதோ நிலைமையைச் சமாளிக்க உனக்கு, அதாவது நாகராஜன் தம்பி தியாகராஜனுக்குப் பைத்தியம் பிடிச்சுப் போச்சன்னு சொல்லிட்டேன்.

நாக: ஏன்டா, இப்படிச் செய்தே?

கரே: அப்பதானேடா அவருக்கு உன்மேலே இரக்கம் பிறக்கும்? நான் அந்த மாதிரி சொன்னதுனாலேதான் உன் பெண்டாட்டி, பசங்களை, அவர் காப்பாத்தறதா ஒத்துக்கிட்டாரு.

நாக: என்னது? பெண்டாட்டி—பசங்களா?

கரே: யெஸ்! தியாகராஜனுக்குக் கல்யாணமாகி டஜன் கணக்கிலே பசங்க இருக்காங்கன்னு சொல்லிட்டேன். அவங்களைக் காப்பாத்தறதுக்குப் பண உதவி செய்யறதா அவர் சொல்லிட்டார்.



நாக: மேலே என்னடா செய்யப் போறே?

சுரேஷ்: வர ஞாயிற்றுக்கிழமை ஒரு மீட்டிங். உன்னுடைய மறைவுக்கு அனுதாபக் கூட்டம். அன்றைக்கு நீயும் வரணும்.

நாக: என்னுடைய மறைவு நாளுக்கு, நானே எப்படிடா வர முடியும்?

சுரே: நாகராஜன் மறைவு நாள். நியோ. ராஜன் வரணும்.

நாகு: நியோகராஜனைத்தான் பைத்திய மாக்கிட்டியே. அவன், அதாவது நான், பைத்தியக்காரன் எப்படி அந்தக் கூட்டத்துக்கு வர முடியும்?



சுரே: ஏன்? வந்தா என்ன? இந்த மாதிரி கூட்டங்களுக்கு வர வங்க பாதிப் பேர் பைத்தியக் காரங்களாத்தான் இருப்பாங்க. கவலைப்படாமே நீ வரலாம்!

நாகு: விளையாடாதேடா!.....

சுரே: நாகு! உங்கண்ணன் செத்துப்போயிட்டான்னு கூட்டம் போட்டுப்பிட்டு நீ வராம இருந்தா எப்படி? நான் உனக்குச் சித்தப் பிரமைன்னுதான் சொல்லியிருக் கேன். அதனுலே ஒரு மாதிரியா அட்ஜஸ்ட் பண்ணிக்கலாம்.

நாக: கடவுள் விட்ட வழி!

சுரே: மேலே நம்ம ஏற்பாட் டைக் கேளு. ஞாயிற்றுக்கிழமை மீட்டிங்கிலே நம்ம சபேசன்தான் தலை வர். அவரைத் தவிர பத்து பேச்சாளர்கள்!

நாக: பத்துப் பேர் பேசப் போறுங்களா? எதுக்குடா அத்தனை பேர்?

சுரே: என்னடா இது. ஒண்ணும் தெரி யாத முட்டாளா இருக்கே. நமக்கு மீட் டிங்கிலே கும்பல் வேண்டாமா? இந்த மாதிரி நிறையப் பேரைப் பேசறதுக்குக் கூப்பிட்டா, அவங்க உறவுக்கா ரங்க, சிநேகிதங்க எல்லாரையும் தான் பேசறதைக் கேக்க இழுத் துக்கிட்டு வருவாங்க. நமக்கும் கொஞ்சம் கும்பல் சேரும்!

நாக: அவங்கள்ளாம் என் னடா பேசப்போறுங்க? அவங்க ளுக்கெல்லாம் என்னைப் பத்தி — நாகராஜனைப் பத்தி — என்ன தெரியும்?

சுரே: உன்னைப்பத்தி அவங்க ளுக்கு ஒண்ணும் தெரியாது. அதனுலேதான் அவங்களைத் தைரி யமா கூப்பிட்டேன்.

நாக: ஒண்ணும் தெரியாம என்னைப் பத்தி என்ன பேசப் போறுங்க?

சுரே: உன்னைப் பத்திப் பேசப் போறுங்கன்னு யார் சொன்னது? அவங்களைப்பத்தியேதான் பேசிக்கப் போறி ருங்க! அதுக்காகத் தானேடா அவங்க கூட்டத்துக்கே வராங்க! ஏதோ நடுவிலே ஒரு வார்த்தை இரண்டு வார்த்தை உன்னைப் பத்தியும் போட்டு வைப்பாங்க!

நாக: டேய்.....அந்த மீட்டிங்கிலே நான் எதுக்குடா இருக்கணும்? எனக்குப் பயமா இருக்குடா........

சுரே: இதுக்கே இப்படிப் பயப்பட்டா, நீ எப்படிடா மீட்டிங்கிலே பேசப் போறே?

நாக: பேசறதா? நானு? ஐயையோ! நான் மாட்டேன்.

சுரே: உதைப்பேன் ராஸ்கல். உங்கண்ணன் செத்ததுக்கு அநுதாபக் கூட்டம் நடத்தினதுக்கு நீதானேடா நன்றி தெரிவிக்கணும்?

நாக: நான்தான் பைத்தியமாச்சே? நான் பேசாமலே இருந்துட்டா என்ன?

சுரே: சித்தப்பிரமைதானே. திமிர்னு உளறுவே. திமிர்னு நல்லா பேசுவே. அதனால் மீட்டிங்லே பேசித்தான் ஆகணும். நீ அரை குறைப் பைத்தியம்தானேடா!

நாக: அதுலேகூட முழுசா இல்லே? டேய், சுரேஷ். எதை வேணுமானாலும் பொறுத்துக்கலாம். ஆறு போயும் போயும் என்னைப் பைத்தியக்காரன்னு சொன்னியே அதை என்னாலே தாங்க முடியலேடா!

சுரே: ஏண்டா? பைத்தியம்னு என்ன உன் கௌரவத்துக்குக் குறைச்சலா? பைத்தியக்காரன் கிட்டத்தட்ட ஒரு அரசியல் வாதிடா — பாலிடீஷியன்!

நாக: பைத்தியக்காரனுக்கும் அரசியல் வாதிக்கும் என்னடா சம்பந்தம்?

சுரே: ஏன் இல்லே? சம்பந்தா சம்பந்தமில்லாமே பேசறவன் பைத்தியக்காரன்;— அதே மாதிரி பேசறவன்தான் அரசியல் வாதி. பைத்தியக்காரன் பின்னாலே பத்துப் பேர்; பாலிடீஷியன் பின்னாலேயும் பத்துப் பேர்! தனக்குத்தானே பேசிக்கிறவன் பைத்தியக்காரன்; பாலிடீஷியனும் தனக்குத்தானே தான் பேசிக்கிறான் — ஏன்னு அவன் பேசறதை வேறு யாரும் கவனிக்கிறதில்லே! பைத்தியத்துக்குக் கோபம் வந்தா கண்டபடி பேசும். "நாய், கழுதை"ன்னு திட்டும். இப்ப அரசியல்வாதியே அப்படித்தான் திட்டறார்!

நாக: நீ ஏண்டா திமிர் திமிர்னு இப்படிப் பேசறே? நீ அரசியல்வாதியா, பைத்தியக்காரனா? சரி. சுரேஷ்! நடக்கிறது நடக்கட்டும். நீ சொல்றபடி கேக்க ஆரம்பிச்சுட்டேன். முழுக்கவும் கேட்டுடறேன்!

சுரே: கரெக்ட்!

நாக: டேய்..... மீட்டிங்குக்கு நல்ல கும்பல் வருமா?

சுரே: கண்டிப்பா வரும். மெட்ராஸ்லேருந்து ஒரு எக்ஸ்ட்ரா நடிகை வந்திருக்கா. அவளை மீட்டிங்குக்குக் கூப்பிட்டிருக்கேன். கும்பல் கண்டிப்பா வரும்! நாகு, ஒண்ணு மட்டும் ஞாபகம் வெச்சுக்க. சபேசன் எதிரே சித்தப் பிரமை பிடிச்சவன் மாதிரி நடிக்கணும்.

நாக: அது எப்படிடா?

சுரே: திமிர்னு பைத்தியம் பிடிச்சமாதிரி உளறணும். திமிர்னு சுய அறிவோட பேசணும்.

நாக: எப்படிடா? என்னாலே முடியாது!

சுரே: சுய அறிவோட பேசறதா? ஏண்டா, இப்படி என் பிராணனை வாங்கறே? எல்லாம் நான் கவனிச்சுக்கறேண்டா.

நாக: இரண்டே மாசத்துலே சபேசன் கிட்டேயிருந்து பத்தாயிரம் ரூபாய் கிடைக்கும்னு நினைக்கிறியா?

சுரே: முயற்சி பண்ணிப் பார்ப்போம். இல்லேன்னு வேறே எத்தனையோ வழி.

நாக: பாவம் அந்த சபேசன்! சுரேஷ்.... இந்த மாதிரி ஒருத்தரைப் பொய் சொல்லி ஏமாத்தலாமா?

சுரே: பொய் சொல்லாம எப்படி ஏமாத்தறது?

நாக: என்னதான் இருந்தாலும், எனக்கு மனசுக்குக் கஷ்டமாத்தான் இருக்குப்பா. ஒருத்தரை நல்லா ஏமாத்திப் பணம் சம்பாதிக்கிறது பாவம் இல்லையா?

சுரே: பெரிய பாவத்தைக் கண்டுப்பிட்டான். இந்தக் காலத்துலே எவண்டா ஏமாத்தாமே பணம் சம்பாதிக்கிறான்? தொழில் சம்பந்தப்பட்ட மட்டுலே ஒருத்தனே ஒருத்தன்தாண்டா — பொய் சொல்லாம, ஏமாத்தாமே தொழிலே நடத்தறான்.

நாக: யாருடா?

சுரே: திருடன். தன் தொழில்லே நேர்மை இருக்குன்னு சொல்லிப் புளுகாதவன் அவன் ஒருத்தன்தானேடா!

நாக: ரொம்ப நல்லாயிருக்குடா நீ சொல்றது. எந்தத் திருடனாவது மாட்டிக் கிட்ட பிறகு, தான் திருடினேன்னு ஒத்துக்கிறானு? புளுகத்தானே செய்யறான்?

சுரே: அதாவது தொழில் முறையிலே வேலையை முடிச்ச பிறகு புளுகறான். அதுவும் ஏன்? தன் தொழிலை நினைக்க அவமானப்படறான். அதனாலே திருடன் எவ்வளவோ தேவலே. மத்தவங்க பணத்தை எடுத்தாலும், அதை வெளியிலே சொல்ல வெட்கப்படறான். மத்த தொழில் செய்யறவங்களுக்கு அந்த வெட்கம், மானம்கூட இல்லேயேடா! அவங்க செய்யற ஏமாத்துத் தொழிலைப் பெருமையா சொல்லிக்கிறாங்களே!

நாகு: ரொம்ப தாங்க்ஸ் சுரேஷ்....

சுரே: எதுக்குடா?

நாகு: எனக்குச் சித்தப் பிரமை பிடிச்சவன் மாதிரி எப்படிப் பேசறதுன்னு புரிஞ்சுடுத்து. நீ இப்ப பேசினப்பிலே பேசினால் போதும். கரெக்டா இருக்கும்! இனிமே காரியம் ஸக்ஸஸ்தான்! (தொடரும்)

## நாட்டு வைத்தியர் டாக்டர் ஸ்ரீஹரி சுற்றுப் பயணம்

டாக்டர் ஸ்ரீஹரி அவர்கள் 12-11-65 சென்னையிலிருந்து புறப்பட்டுப் புதுடில்லி 14-11-65 சேர்ந்து அங்கு தென்னிந்திய கிளப்பில் தங்குகிறார். 17-11-65 டில்லியிலிருந்து புறப்பட்டு 19-11-65 யன்று சென்னை வந்து சேருகிறார்.

# நல் வாய்ப்பு

புத்தகங்கள் படிப்பதில் ஆர்வமுள்ள பெண்கள், தங்கள் ஓய்வு நேரத்தில் ஒரு சிறந்த தமிழ்ப் புத்தகச் சங்கத்திற்கு (Book Club) சந்தாதார் சேர்த்து பணமும், பயனும் அடையலாம். தீபாவளி முதல் கிருஸ்மஸ் வரை இரண்டு பங்கு கமிஷன். தமிழார்வம் உள்ளவர்கள் விவரங்களுக்கு உடனே எழுதவும்.

•

**லக்ஷ்மி கிருஷ்ணமூர்த்தி**
"வாசகர் வட்டம்"
14, தணிகாசலம் செட்டித் தெரு
சென்னை - 17.

---




**வாணி தமிழ் இங்கிலீஷ் போதினி**
90 நாட்களில் தமிழ் மூலம் ஆங்கிலம் தானே இலக்கணமாகப் படிக்க பேச, எழுத, சுலபமாகக் கற்க பெரிய புத்தகம்.
விலை தபால் செலவோடு ரூ. 6-25.

**ஜீவனோபாயம் (குடிசைத் தொழில்)**
சோப், இங்கி, பத்தி, ஸ்னோ போன்ற 206 புதுத் தொழில்கள் அடங்கியது.
விலை ரூ. 4-00. வி. பி. 0-85.

**தமிழ் ஹிந்தி சுபோதினி**
தமிழ் மூலம் சுலபமாக ஹிந்தி படிக்க பேச, எழுத, கற்க முடியும்.
விலை ரூ. 3-00. வி. பி. 0-85.

**குடும்ப இலகு வைத்தியம்**
பச்சிலை மூலிகைகள் கொண்டு ஆரோக்கியம், பலம்பெற வழிகாட்டும்.
விலை ரூ. 2-50. வி. பி. ரூ. 1-00.

**மாட்டு வாகடம் (பசு வைத்தியம்)**
விலை ரூ. 2-00. வி. பி. 0-85.

விக்கிரமாதித்தன் கதை — விலை ரூ. 5-00
நளின்தரேகை சாஸ்திரம் — விலை ரூ. 8-00
தபால் செலவு தனி

**வாணி புக் டிபோ (K)**
மலையபெருமாள் தெரு, சென்னை-1

---





## இலேசான மற்றும் சிரமமின்றி உபயோகிக்கத்தக்க பிரைட் பிளாஸ்டிக் சாமான்கள்

பிரைட் பிளாஸ்டிக் சாமான்கள் நேர்த்தியான மற்றும் நவநாகரீக முறையில் வாழ்க்கையை அனுபவிப்பதற்கு என்றே உருவாக்கப்பட்டிருக்கின்றன. அவை எவ்வளவு பயனுடையவையோ அவ்வளவு பிரகாசமானவை... எவ்வளவு உபயோகமானவையோ அவ்வளவு கவர்ச்சிகரமானவை. உங்களுடைய [illegible] மான மற்றும் வண்ண [illegible] முடிக்க அவை மிகவும் சாத்தியமாக்குகின்றன... இது மட்டுமல்ல, உங்கள் வீட்டிற்குத் தேவையான உபகரணங்களைத் தேர்ந்தெடுப்பதில் உங்களுக்குள்ள ருசிக்காக [illegible] பாராட்டுதலையும் பெறுவீர்கள். நாள் முழுவதும் மற்றும் [illegible] உங்களுடைய வாழ்க்கையை [illegible] நிறைவாக்கவும், மகிழ்ச்சிகரமாக்கவும் பிரைட் பிளாஸ்டிக் சாமான்கள் உங்கள் நம்பிக்கைக்கு பாத்திரமானவை. பல நிறங்களில் உங்களுக்கென தேர்ந்தெடுத்த விருப்பமான [illegible] சேர்க்கும் தயாரிப்புகள் கிடைக்கின்றன! ஏராள முதன்மையான ஸ்டோர்களிலும் கிடைக்கின்றன!

பிரைட் பிரதர்ஸ் பிரைவேட் லிட்., [illegible]

பிரைட்தான தரமான சாமான் தேர்ந்தெடுப்பு



# இந்த

'ஸ்பெஷல் ரயில்'
என்கிறார்களே,
அப்படியென்றால்
என்ன ?
அதில் என்ன
ஸ்பெஷல் ?

சமீபத்தில் தமிழ்நாடு கவர்னர் அவர்கள் 'ஸ்பெஷல் டிரெயி'னில் ராமேசுவரத்துக்கும் மற்றும் சில புண்ணிய ஸ்தலங்களுக்கும் விஜயம் செய்தார்.

அதி முக்கியமானவர்களுக்காகப் பிரத்தியேக வண்டிகள்





விடப்படுவதுண்டு. குறிப்பாக, பாரத ஜனாதிபதி, பிரதம மந்திரி, ராஜ்ய கவர்னர் ஆகியோருக்காகத் தனி ரயில்கள் ஏற்பாடு செய்யப்படுகின்றன. வெளிநாட்டுத் தலைவர்கள் நம் தேசத்துக்கு விஜயம் செய்து நாட்டின் ஒரு பகுதியிலிருந்து, வேறொரு பகுதிக்குப் போவதற்காகவும், தேவையை அனுசரித்து, விசேஷ ரயில்கள் விடப்படலாம். மார்ஷல் டிட்டோ பாரத நாட்டுக்கு வந்திருந்தபோது அவருடன் நூற்றுக்கணக்கானவர்கள் வந்திருந்ததால், தனி ரயில்கள் ஓட்டப்பட்டன.

''விசேஷ ரயில் தேவை'' என்ற தாக்கீது அரசாங்கத்திடமிருந்து ரயில்வே இலாகாவுக்குக் கிடைத்தவுடனேயே, சம்பந்தப்பட்ட அதிகாரிகள் எல்லோரும் மும்முரமாய் ஏற்பாடுகளைக் கவனிக்கத் தொடங்கி விடுவார்கள்.

பிரயாணம் செய்யப் போகிறவர்களின் மதிப்புக்கும் எண்ணிக்கைக்கும் தகுந்தபடி தேவையான பெட்டிகளை முதலில் நிர்ணயித்துக்கொள்வார்கள். பிரயாணப் பெட்டிகளைத் தேர்ந்தெடுத்து, விரைவில் அவைகளை ஒரே இடத்தில் ஒன்று சேர்ப்பார்கள். மின்சார சாதனங்களும், நுட்பமான இயந்திரப் பிணைப்புக்களும் நல்ல நிலைமையில் இருக்கின்றனவா என்பதும் பரிசீலிக்கப்படும்.

ஒரு ஸ்பெஷலில் ஏழெட்டுப் பெட்டிகள் இருக்கலாம் அல்லவா? எந்தெந்தப் பெட்டி எவ்வெவ்விடத்தில் இருக்க வேண்டும் என்பதையும் முன்கூட்டியே நிர்மாணித்து விடுவார்கள். பிரயாணம் செய்யும் 'அதி முக்கியஸ்தர்' உபயோகத்துக்கான பெட்டி அநேகமாக வண்டித் தொடரின் நடுவில் இருக்கும். இந்தப் பெட்டி சாமிதோஷணப் பிரயாணப் பெட்டியாக இருக்கும். அல்லது 'ஸலூன்' என்று சொல்லப்படும் விசேஷ சௌகரியங்கள் நிறைந்த தனி மாதிரியான பெட்டியாகவும் இருக்கலாம்.

எவ்வளவு முக்கியஸ்தர் பிரயாணம் செய்வதாக இருந்தாலும் தொடர் வண்டி என்றால், 'கார்டு' வேண்டுமே! 'கார்டு வான்' உள்ள பெட்டிகள் வண்டித் தொடரின் இரு முனைகளிலும் இணைக்கப்பட்டிருக்கும்.

'ஸ்பெஷல் டிரெயினு'க்கு வருகிற கார்டும் ஸ்பெஷலாகத் தான் இருப்பார். நல்ல தோற்றமும், திறமையும் உள்ள கார்டுகளாகப் பார்த்துத் தேர்ந்தெடுத்து 'ஸ்பெஷல் வண்டி'க்கு அமர்த்துவார்கள். ஆனால், பரிதாபம்! அழகாய் வெண்ணுடை தரித்துக் கொண்டு மேலும் கீழும் போய் வருவதைத் தவிர, 'விஸில்' அடிக்கும் உரிமைகூட அப்போது அவருக்குக் கிடையாது. ஆமாம்! 'ஸ்பெஷல்' புறப்படுகிறபோது கார்டு விஸில் ஊதக்கூடாது. பிளாட்பாரத்தில் மணியும் அடிக்கப்படக் கூடாது! அது மட்டுமா? கொடியையோ, கைவிளக்கையோ தானாகக் காட்டும் உரிமை கூட அவருக்குக் கிடையாது. மாவட்டப் போக்குவரத்துத் துறை அதிகாரியின் ஆணைப்படிதான் அவர் நடக்க வேண்டும். அந்த அதிகாரி 'கார்டு வானி'லேயேதான் போவார். என்றாலும், கொடி காட்டும் அதிகாரம் அவருக்கும் இல்லை!

சரி, வண்டியின் ஒரு கோடியில் இவ்வளவு தடபுடலானாலும் மற்றொரு கோடியான இஞ்சினில் என்ன அமர்க்களம் நடந்து கொண்டிருக்கும்? விசேஷ டிரைவரைப் பொறுக்கி யெடுத்து அமர்த்தியிருந்தாலும், மாவட்ட மெகானிகல் என்ஜினியர் இஞ்சினிலேயே நிற்பார்! விசேஷ ரக நிலக்கரியை அள்ளி அள்ளிக் கொட்டிக் கொண்டிருப்பார், 'பயர்மன்'.

வண்டி புறப்படவிருக்கும் நேரத்துக்கு முன்பாகவே, போலீஸ் உயர் அதிகாரி ஒருவர் வந்து அதிமுக்கியஸ்தர் பிரயாணம் செய்வதற்காக ஒதுக்கப்பட்டுள்ள பெட்டியில் ஏறிப் பார்ப்பார். வண்டியிலேயே சில அரசாங்க அதி

# ரயில் கூவாது!



அபர்ணா

காரிகள், பந்தோபஸ்துக்கான போலீஸ் படையினர் ஆகியோருடன் சில காங்கிமென், பிட்டர்கள், கைகாட்டிப் பழுது பார்ப்போர், ஒயர்லஸ் சாதனம் இயக்குவோர், டிரைவர், கார்டுகளுக்கான பார்த்தி ஆட்கள், ரயில்வே அதிகாரிகள் ஆகியோரும் பிரயாணம் செய்வார்கள்.

'எல்லோரும் ஏறி விட்டார்களா?' என்பதை நிச்சயப் படுத்திக் கொண்டு, ஓசைப்படாமல் வண்டி புறப்படும். ஆமாம், இஞ்சின் 'கூ...' என்று அலறக் கூடாது!

ஸ்பெஷல் வண்டி அவுட்டரைத் தாண்டியதும், நிலைய சிப்பந்திகளும், வி. ஐ. பி.க்காரர்களும் 'அப்பாடா!' என்று பெருமூச்சு விடுவார்கள்.

ஃ ஃ ஃ

ஸ்பெஷல் டிரெயின் ரொம்ப வேகமாகவோடும் என்று நீங்கள் நினைத்தால் அது தவறு. விசேஷ ரயில்கள் மிதமான, சீரான வேகத்திலேயே ஓட்டப்படுகின்றன.

ஃ ஃ ஃ

ஜனாதிபதி அல்லது பிரதமர் பிரயாணம் செய்யும் தனி வண்டிகளுக்குச் சற்று முன்னதாக இன்னொரு ஸ்பெஷல் ரயில் விடுகிற வழக்கமும் உண்டு. முதல் ஸ்பெஷல், ரயில் பாதையின் சீரான நிலைமையை உறுதிப்படுத்திக் கொள்வதற்காக. அந்த ஸ்பெஷலில் இன்ஸ்பெக்டர் — ஜெனரல் பிரயாணம் செய்வார். மூன்று, நான்கு பெட்டிகளுக்கு மேல் இருக்காது.

முதல் ஸ்பெஷல் புறப்பட்ட அரை மணிக்கெல்லாம் 'அதிமுக்கியஸ்தரின் இரண்டாவது ஸ்பெஷல் புறப்படும்.

இரண்டாவது ஸ்பெஷலில் உள்ள ஒயர்லெஸ் சாதனங்கள் மூலமாகச் சில நிமிஷங்களுக்கு ஒரு தடவை அந்த ஸ்பெஷலின் போக்கு பற்றிய தகவல் ஒலிபரப்பாகும். மத்திய அரசாங்கத்தின் சம்பந்தப்பட்ட இலாகாவினர் அந்த ஒலிபரப்போடு எந்த நேரமும் தொடர்பு கொண்டிருப்பார்கள்.

ரத்தினக் 'கம்பள வரவேற்பு' (Redcarpet Reception) என்ற மரியாதை சிலருக்கு வழங்கப்படுவதுண்டு. முக்கியஸ்தர் டிரெயினிலிருந்து இறங்குகிறபோதே செந்நிறக் கம்பளத்தில் காலடி வைத்து நடந்து வருகிற மாதிரியான ஏற்பாடு அது. ஸ்பெஷல் டிரெயின் ஒரு நிலையத்தில் வந்து நின்ற பின் முக்கியஸ்தர் இருக்கும் இடத்தைக் கண்டு பிடித்து, அதற்குப் பின் சிவப்புக் கம்பளத்துடன் குடுகுடுவென்று ஓடிவந்து கீழே விரித்தால் எப்படி யிருக்கும்! இவ்விதம் நேரக்கூடாது என்பதற்காக ஸ்பெஷல் ரயில் நிற்க வேண்டிய ரயில் நிலையத்தில் இஞ்ஜின் எங்கே நிற்க வேண்டும் என்பதையும் முக்கியஸ்தர் இறங்கும் படிக்கட்டு எவ்வளவு தூரத்தில் இருக்கும் என்பதையும் கணக்கெடுத்து வைத்துக் கொள்வார்கள். ஸ்பெஷல் டிரெயின் வந்து சேருவதற்கு வெகு நேரம் முன்னதாகவே பிளாட்பாரத்தில் சிவப்புக் கம்பளம் விரிக்கப் பட்டாலும் கூட முக்கியஸ்தரின் முதல் காலடி அந்தக் கம்பளத்தில்தான் படும்!

ஃ ஃ ஃ

ஒருதடவை காலஞ்சென்ற பிரதமர் நேரு அவர்கள் புதுச்சேரிக்கு 'ஸ்பெஷல்' டிரெயினில் போனார். ஸ்பெஷல் டிரெயினிலுள்ள 'டைனிங் கார்'க்குத் தேவையான உபகரணங்கள் கவர்னர் மாளிகையிலிருந்து ஏற்பாடு செய்யப்படவில்லை என்பது தெரிந்ததும் சென்னையில் உள்ள மேல்நாட்டுப் பாணி ஹோட்டல் ஒன்றிலிருந்து ரயில்வே அதிகாரிகள் ஏற்பாடு செய்தார்கள். பாத்திரங்களுக்காகவும், பரிமாறும் சிப்பந்திகளுக்காகவுமாகப் பெருந் தொகை வாடகையாகக் கொடுத்தார்கள். அந்தச் சிற்றுண்டிப் பெட்டியிலிருந்து நேரு அருந்தியது ஒரு கப் டீ மட்டுமே!

நமக்காக வேண்டுமானாலும் ஒரு 'ஸ்பெஷல் டிரெயின்' ஓட்டுவதற்கு ரயில்வேக்காரர்கள் தயார்தான். ஆனால் நமக்காக அதில் ஒரு ஸ்பெஷல் உண்டு. அவர்கள் குறிப்பிடும்தொகையை முன் பணமாகச் செலுத்தியாக வேண்டும்! ஜனாதிபதி அல்லது பிரதமர் ஸ்பெஷலானால் வண்டியை ஓட்டிய பின் கணக்குப் பட்டியலை அனுப்பி உள்நாட்டு இலாகாவிடம் கணக்கை நேர் செய்யும்படி வேண்டிக் கொண்டிருப்பார்கள்!





# காலச்சக்கரம்

## மூன்றாம் பாகம்

## நாளை

### கி.ராஜேந்திரன்

**கதாசிரியர் குறிப்பு:**

சாதாரணமாக முன்னுரைகள் எழுதுவதில் எனக்கு அதிகமான நம்பிக்கை கிடையாது. காலச்சக்கரம் என்ற இந்த நாவலுக்கும் முன்னுரை ஏதும் எழுதவில்லை நான். எனினும் இதன் மூன்றாம் பாகமாகிய 'நாளை'யை வாசக அன்பர்கள் படிக்கத் தொடங்கு முன்னர், பிரசங்கிகள் கூறுவது போல் 'நாலு' வார்த்தைகளையல்ல; எண்ணி ஐம்பத்திரண்டு வார்த்தைகளைக் குறைந்த பட்சம் கூறுவது அவசியம் எனக் கருதுகிறேன்:—

1962ம் வருஷத்திய தேர்தல் ஜுரம் தீவிரமாகப் பரவி யிருந்த காலத்தில் தமிழ்நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் விரிவாகச் சுற்றுப் பயணம் செய்து கண்டறிந்த விஷயங்களை இந்நாவலை எழுதத் தூண்டின என்னை. இது வரை இன்றைய நமது ஜனநாயகத்தின் யதார்த்த நிலையைப் படம் பிடித்துக் காட்ட முற்பட்ட நான் இனி அடுத்த பாகத்தில் ஓர் அதீத கற்பனையில் இறங்குகிறேன். 'நாளை இப்படியெல்லாம் நடக்குமா?' என்று என்னைக் கேட்காதீர்கள்; நடக்கக்கூடாது என்பதே என் பிரார்த்தனை!



### அத்தியாயம் 1

## சத்தியம் செத்ததோ?

தங்கப்பன் எப்போது ஒரு தீவிர கம்யூனிஸ்டாக மாறினான் என்பது அவனுக்கே தெரியாது. 'செல்லரித்தெடுத்த வேலிக் கம்புநீங்கள். உங்களை விழ்த்தத் தேவைப்படுவது ஓர் அதிர்ச்சி, அவ்வளவுதான்' என்று கூறியிருந்தாள் மிருணாளினி, முன்பு. உண்மையிலேயே தங்கப்பனுடைய உள்ளத்தில் நம்பிக்கை என்னும் உறுதியான மத்திய பாகத்தை ஏமாற்றமளித்த பல நிகழ்ச்சிகள் அரித்தெடுத்து அழித்துவிட்டுத்தான் இருந்தன. அதையடுத்து மிருணாளினி கூறியது போல் ஒன்றல்ல; ஒன்றுக்கு மூன்றாகவே அதிர்ச்சிகள் பேரிடிகளாக விழுந்தன. முதலில் தீனதயாளு போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப் பட்டார் என்றும் தன் சகா ராமபத்திரனின் எதிர்ப்பு விலைக்கு வாங்கப் பட்டதென்றும் அவனுக்குச் செய்தி கிடைத்தது. அதைத் தொடர்ந்து சில தினங்களில் தங்கப்பனும் தேர்தலில் தோல்வியடைந்ததைத் தெரிந்து கொண்டு வந்தார் மாருதி. இந்தத் துயரச் சுமையைத் தாக்க முடியாமல் தாக்கிக் கொண்டு வந்தவர், கண் கலங்க, "தம்பி! சத்தியம் செத்து

விட்டது'' என்று திரும்பத் திரும்ப நாத் தழுதழுக்கக் கூறியபடியே நெஞ்சைப் பிடித்துக் கொண்டு தடுமாறினார்.

நான் வெற்றி பெறவில்லை என்பதைப் புரிந்து கொண்டு விட்டான் தங்கப்பன். 'சத்தியம் செத்துவிட்டது' என்ற அவரது மூன்று வார்த்தைகளும் மூன்று துப்பாக்கிக் குண்டுகளாக மாறித் தன் நெஞ்சைப் பிளப்பது போலிருந்தது அவனுக்கு. காந்தியடிகளின் மீது பாய்ந்த மூன்று குண்டுகளின் நினைவு ஒரு கணம் அவன் மனக் கண்ணெதிரே பளிச்சிட்டது. அடுத்த விநாடியே தோல்வியளித்த வேதனையைக்கூட மறக்கடித்தது மாருதியின் நிலை. ''மாருதி ஸார்! உங்களுக்கு என்ன?'' என்று கேட்டபடியே அவரைக் கைத்தாங்கலாகப் பற்றிக் கொண்டான். தரையில் உட்கார்ந்து மெல்ல அவர் தலையை மடியில் சாய்த்துக் கொண்டான். இந்த ஒரு வாய்ப்புக்காகவே அவர் இதுவரை உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு வந்தது போல் தோன்றியது. பொறுக்க முடியாத வலியைப் பிரதிபலித்த முகத்தில் ஒரு கணம் சாந்தி நிலவியது. ''தம்பி! எனக்குப் பிள்ளை கிடையாது; உன்னைத்தான் என் மகனாக நினைத்து வந்தேன். எனக்கு உன் கையால் கொள்ளி வைப்பாயா?'' என்று தட்டுத் தடுமாறிக் கேட்டார் அவர்.

''ஆகட்டும் அப்பா!'' என்று துக்கம் தொண்டையை அடைக்கக் கண்ணீர் பெருக்கி மெல்லிய குரலில் கூறினான் அவன்.

உணர்வுகள் அடங்கிக் கொண்டிருந்த போதிலும், இறுதி மூச்சு பிரியுமுன்னர், அவசியம் கேட்க வேண்டியதைக் கேட்டே ஆக வேண்டும்; அதையும் நன்றாக, செவி குளிர, உள்ளம் மகிழக் கேட்டே தீரவேண்டும் என்பது போல் அவர் ஆர்வத்துடன் கண்கள் புத்தொளி பெற்று ஒளிர, ''உரக்கப் பேசு தம்பி!'' என்றார்.

அணையவிருக்கும் விழிச்சுடர்களைப் பார்த்தவாறே, ''நான் உங்க மகன்; அப்பாவுக்கு



இறுதிச் சடங்குகளையெல்லாம் செய்கிறது பிள்ளையோட கடமையில்லையா?'' என்றான் தங்கப்பன். ''நிம்மதியா இருங்க.''

நிம்மதியாக இறந்தார் அவர்.

வயது முதிர்ந்த தேகம் அவருடையது. தொழிலகத்துக்குத் தொடர்புடைய வழக்கமான அலுவல்களைக் கவனிப்பதே அவருக்கு அதிகம். அத்துடன் தேர்தலையொட்டி ஏராளமான வேலைச் சுமைகள். குண்டர்களால் தாக்குண்ட அந்தத் தளர்ந்த மேனி ஏராளமான இரத்தத்தை இழந்து மேலும் சக்தி குன்றி யிருந்தது. தங்கப்பனின் தோல்வி என்ற உருவிலே உள்ளத்தில் விழுந்த அடியைப் பலவீனமுற்றிருந்த அவருடைய இதயத்தினால் தாங்க முடியவில்லை. சற்று முன்னால்தானே அவர் மக்களிடம் தமக்கு என்றுமே மதிப்பு உண்டு என்றும் தாம் நம்பிக்கை இழக்கவில்லை என்றும் தங்கப்பனிடம் கூறிச் சென்றிருந்தார்? பெருத்த ஏமாற்றம் பலமாகத் தாக்கியது அவரை.

வலியாவது வலி! இடதுபுறத்துத் தோளில் பழுக்கக் காய்ச்சிய கட்டப்பாரையைப்போல ஊடுருவுகிறது! இருதயத் துடிப்பு நிற்பதற்கு முன்னால் ஏற்படும் பொறுக்க முடியாத வலி அது என்று புரிந்து கொண்டார் மாருதி.

யாரிடம் தமது சொந்த மகளைவிட அதிக பாசம் வைத்திருந்தாரோ, யாருடைய அன்பு காரணமாகப் பிள்ளையில்லாக் குறை தமக்கு இல்லை என்று கண்டுகொண்டாரோ, அந்தத் தங்கப்பனைப் பார்த்தவாறே பிராணனை விட வேண்டும் என்ற ஒரே ஆசைதான் அவருக்கு.

உடல், உள்ளம், செல்வம், அந்தஸ்து, பெருமை, மதிப்பு, திறமை, அறிவு முதலிய பல விதங்களிலும் தங்கப்பன் வாழ்க்கையில் வளர வேண்டும் என்பதற்காகவே அவர் பாடுபட்டு உழைத்தார். அவனது உயர்வில் ஆசையோடு அக்கறை எடுத்துக் கொண்டார். அதே தங்கப்பனுடைய மடியில் தலை வைத்து உயிரை விடுவதைவிட வேறு பாக்கியம் ஏதும் தமக்கு இருக்கக் கூடும் என்று அவர் நினைக்கவில்லை. அவனை அணுகுவதற்கு முன்னால் உயிர் பிரிந்துவிடக் கூடாதே என்ற ஒரே கவலைதான் அவருக்கு.

அந்த நிலையில் மாடி ஏறி வருவதென்பது மாருதிக்கு நரக வேதனையாக, நரகத்தைச் சென்றடையும் படிகளில் ஏறுவது போலத் தானிருந்திருக்கும். ஆனால் அவர் அதிர்ஷ்டக்காரர். தங்கப்பனின் மடியில் சொர்க்க பதவியே கிடைத்து விட்டது அவருக்கு.

❖ ❖ ❖

''தம்பி! உண்மையான ஜனநாயகம் இந்த நாட்டில் நிலவச் செய்வதில் நாம் தோல்வியுற்றால் அல்லது நாம் அமைத்துள்ள இந்த ஜனநாயகம் மக்களின் நல்வாழ்வுக்குத் துணை புரிவதில் வெற்றி பெறாமல் போனால் பேராபத்துக்கள் நம்மைச் சூழ்ந்துவிடும். அந்த ஆபத்துக்களைத் தவிர்க்க இங்கே ஜனநாயகம் வெற்றி பெற்றேயாக வேண்டும்!'' புறச் செவிகளுக்குக் கேட்ட சங்கொலிக்கும் மேலாகத் தங்கப்பனின் அகச் செவிகளில் மாருதியின் குரல் கணீரென்று ஒலித்துக்கொண்டிருந்தது.

அவன் மேனி அனலாகக் கொதித்தது. 'நெருப்பே வேண்டாம்! என் தேகத்தின் சூட்டிலேயே சிதை பற்றி எரிந்துவிடும்' என்று நினைத்தான் அவன்.

அங்கு இறுதி மரியாதை செலுத்தத் தினதயாளனோ உஷாவோ வரவில்லை என்பதை அவனால் கவனிக்காமல் இருக்க முடியவில்லை. 'அடிபட்டுக் கிடந்தவரை ஆஸ்பத்திரியில் வந்து பார்த்தபோது அதற்குப் பிரதியாக என்ன கிடைத்தது? தங்கப்பனின் பழித்துரைகள்தானே? இப்போது மீண்டும் போவானேன், அவமானப்படுவானேன் என்று அவர்கள் கருதியிருக்கக் கூடுமோ?' இப்படி ஒரு கேள்வியைக் கேட்டுக்கொண்டு, தானே 'இராது, இராது' என்று பதிலும் அளித்துக் கொண்டான். 'வெற்றி விழாக் கேளிக்கைகளுக்கிடையில் குதூகலத்துடன் மிதக்கும் அவர்களுக்குச் சுடுகாட்டுக்கு வரத் தோன்றுமா என்ன?'

சிதைத் தீயின் செந்நாக்குகள் உயரே உயரே தாவிச் சென்றன. ''கொன்றுவிட்டார்கள்!'' என்று புலம்பினான் தங்கப்பன். அவர்கள் கொன்றுபோட்ட உண்மை ஜனநாயகத்தைப் பாடை கட்டி எடுத்து வந்து இதோ சிதை மீது இட்டுக் கொள்ளியும் வைத்துவிட்டேன்!'' என்று கதறி அழுது கேசத்தைப் பிய்த்துக் கொண்டான்.

மகனுக்குச் சித்தம் கலங்கிவிட்டதோ என்று திகைப்புடன் அவனைப் பார்த்துப் பயந்தாள் தாமரை.

மாருதியின் மாப்பிள்ளைக்கும் மகளுக்கும் இஞ்சினியர் குமாரனுக்கும் சுற்றிலுமிருந்த சில தொழிலாளருக்கும் கூட ஒன்றும் புரியவில்லை. தங்கப்பன் வேதனை மிகுதியில் வாய்க்கு வந்ததை உளறத் தொடங்கிவிட்டதாகவே எண்ணினார்கள்.

அவனை நன்றாகப் புரிந்துகொண்டது மிருணாளினி மட்டுமேதான். இடுகாட்டுக்கு வந்து அதுவரை மற்றவர்களிடமிருந்து ஒதுங்கித் தனித்து நின்ற அவள், இப்போது அவன் தலையில் படீர் படீர் என்று அடித்துக் கொண்டு கதறுவதைக் காணச் சகியாமல் அதற்கு ஒரு முடிவு கட்ட அவன் அருகில் வந்தாள்.

முழங்கால்களைக் கட்டிக் கொண்டு தரையில் உட்கார்ந்து தங்கப்பன் தலைகுனிந்திருந்தான். உச்சந் தலையில் தன் கையைப் பதித்துக் கழுத்துவரை ஒரு முறை கேசத்தைக் கோதி விடுவது போல் தடவிக் கொடுத்தாள் மிருணாளினி.

தலையை நிமிர்த்தி அவளைப் பாராத முன்னமேயே, அந்த ஸ்பரிசம், அந்தச் செயல் இரண்டும் அவளை இன்னாரெனக் காட்டிக் கொடுத்து விட்டன.

அவன் மேனி சிலிர்த்தது. அவள் துயருறுவாளென்றும், ஆறுதல் அளிக்க வேண்டும் என்றும் உணர்ந்து அவள் இங்கு — மயானபூமிக்கு வந்திருப்பதே போதும்! அதுவே அவனுக்குத் துயர் துடைப்பது போல் இருந்தது. 'மாருதிக்கும் இவளுக்கும் என்ன சம்பந்தம்? ஏன் எனக்கும் இவளுக்கும் இடையில் கூடச் சில தினங்களுக்கு முன்புதானே நட்பு உருவாயிற்று? இவள் இங்கு வரவில்லை



நாளுக்கு நாள்...
உங்கள் மேனியெழிலை
ஓங்கச் செய்வது
ரெக்ஸோனா
அழகுசாதனத் தைலங்கள் இணைந்த விசேஷக் கலவை
யாகிய 'கேடில்' அடங்கியது ரெக்ஸோனா ஒன்றுதான்.
பூரிக்கும் இன்ப நறுமணம் நேரமெல்லாம் உங்கள்மீது
நின்றுநிலவச் செய்வது ரெக்ஸோனா ஒன்றுதான்.
அன்றாடம் உபயோகியுங்கள் ரெக்ஸோனா.
Rexona
GOOD FOR YOUR SKIN
'கேடில்' அடங்கிய ரெக்ஸோனா
உங்கள் மேனியெழிலுக்கு உகந்தது
லின்டாஸ் - RX. 25-140 TH
இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு



உங்கள் கூந்தலின் உண்மையான
அழகை வெளிப்படுத்த
கால்கேட் பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்
COLGATE
HAIR OIL
பளபளப்புடனும், அடர்த்தியுடன் இளமைத் துடிப்போடும் விளங்கும் நீண்ட கூந்தலின் ரகசியம் தினந்தோறும் குளிக்குமுன் மயிர்க் கால்களிலும், கேசத்திலும் கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயில் தேய்த்துக்கொள்வதே என்பதை லக்ஷக்கணக்கான குடும்பத்தினர் அறிந்திருக்கின்றனர். அதன் உன்னதமான நறுமணத்திலும் நீங்கள் பரவசமடைவீர்கள்... கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயில் உங்கள் கேச வளர்ச்சிக்கு உதவுவதைக் கண்டு நீங்களே ஆனந்தமடைவீர்கள்!
அதன் பரவசமூட்டும் நறுமணத்தை உங்கள் குடும்பத்தினர் விரும்புவர்
எகானமி சைஸ் வாங்கி பணத்தை மிச்சப்படுத்துங்கள்
கால்கேட்
பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்
இப்பொழுது
கால்கேட் பெர்பியூம்டு கோகோனட் ஹேர் ஆயில்

என்று குறைப்படக்கூட இடமில்லையே! அவ்வாறிருந்தும்...'

கண்ணீர் ததும்பி நின்ற கண்களால் அவளை ஏறிட்டு நோக்கினான் அவன். நீர்த் திரையினூடே கலங்கலாகத் தென்பட்டாள் மிருணாளினி. ''தைரியமாக இருக்கவேண்டும் நீங்கள். எழுந்திருங்கள், போகலாம்'' என்று கூறினாள்.

மௌனமாக எழுந்து நின்ற அவன் தோள்களில் கரம் பதித்துப் பின்னோடு நடந்து சென்றான். பக்கத்திலுள்ளோரில் அநேகமாக யாருக்குமே மிருணாளினியை இன்னாரென்று தெரியாதுதான். இருப்பினும் அவர்களில் யார் தன்னைப் பற்றி என்ன நினைப்பார்களோ என்பது குறித்து அவன் கொஞ்சமேனும் கவலைப்பட்டதாகத் தோன்றவில்லை. தங்கப்பன் இதனை உணர்ந்தான். மற்றவர்கள் அவ்விருவருக்கும் உள்ள தொடர்பு குறித்துத் தங்கள் உள்ளங்களில் எழுந்த சந்தேகங்களை அந்தச் சந்தர்ப்பச் சூழ்நிலையில் நிவர்த்தி செய்து கொள்ள முற்படுவது அழகாயிராது என்ற காரணத்தால் கேள்விகளைக் கேட்கத் துடித்த நாவை அடக்கிக் கொண்டார்கள் என்பதையும் ஊகித்தான்.

மிருணாளினியின் கரம் அவன் தோளில் பதிந்து ஊட்டிய தெம்புக்குப் போட்டியாக அதற்கு ஈடான அளவில் நன்றி உணர்ச்சி பெருக்கெடுத்தது தங்கப்பனின் உள்ளத்தில்.

ஓரளவு நிம்மதி பெற்று நிமிர்ந்து நடக்க ஆரம்பித்தான் அவன்.

## அத்தியாயம் 2

# மனம் மாறுமா?

அதிர்ச்சிக்கு மேல் அதிர்ச்சியாகத் தங்கப்பன் அனுபவிக்க நேர்ந்த போதிலும், மிருணாளினி எதிர்பார்த்ததுபோல் அவனிடத்தில் அரசியல் நோக்கில் ஒரு பெருத்த மாறுதலை ஏற்படுத்திவிட வில்லை. தான் நினைத்தது போல் தன் வேலை அத்தனை எளிதாக முடியக் கூடியதில்லை, சிரமசாத்தியமானது தான் என்று கண்டுகொண்டாள் மிருணாளினி. ஆனால் அவள் அடியோடு ஏமாந்து போகவுமில்லை. அச்சம்பவங்கள் காந்து போன அவன் உள்ளத்தில் மனமாற்றத்துக்கான ஒரு வித்தை மட்டும் ஊன்றி விட்டிருந்தன. அதனை எப்படியோ கண்டு கொண்டாள் மிருணாளினி. அது முளைவிட்டு வளர்ந்து தழைக்குமாறு கவனித்துக் கொள்ளும் பொறுப்பைத் தனக்குத் தானே சுமத்திக் கொண்டாள் அவள், மனம் தளராமல்.

ஒரு சமயம் அவளைத் தான் ரொம்பவும் புரிந்து கொண்டு விட்டது போலிருந்தது தங்கப்பனுக்கு. வேறொரு தருணத்தில் அவள் புரியாத புதிராக விளங்கினாள். அவன் மனத்தை எப்படியேனும் மாற்றிவிட வேண்டும் என்பதில் அவள் தீவிர சிரத்தை எடுத்துக் கொண்டாள் என்பது புரிந்தது. ஆனால் எதற்காக அவள் தன் பொருட்டு இத்தனை பாடுபட வேண்டும்?

அவள் தன்னை ரகசியமாக நேசிக்கிறாளா? தன் காதலுக்குப் பாத்திரமான ஒருவன் வேறு பல விதங்களிலும் தன்னுடன் மனமொன்றி இருப்பது போலவே அரசியல் நோக்கத்திலும் ஒன்றுபட்டு இருக்க வேண்டும் என்று விரும்புகிறாளா?

பிறரை மதம் மாறச் செய்து தங்கள் மதத்தை அவர்கள் தழுவுமாறு செய்வதே தங்கள் மதத்துக்குத் தாங்கள் செய்யும் மிகப் பெரிய தொண்டு என்று கருதும் சிலரைத் தங்கப்பன் அறிவான். 'இவளும் பொதுவுடைமை சித்தாந்தத்துக்குத் தான் புரியும் பணியில் இத்தகைய ஒரு கொள்கையையே கடைப்பிடிக்கிறாளோ? மதம் மாற்றுவதில் சிலர் காட்டும் ஆவேசம் போல் இவளும் அரசியல் கொள்கையளவில் மனம் மாற்றுவதில் தீவிரம் காட்டுகிறாளோ?

'அல்லது எனக்கு நன்மை செய்ய வேண்டும் என்று மனப்பூர்வமாகக் கருதி, என் மன மாற்றமே எனக்கு அவள் செய்யக் கூடிய மிகப் பெரிய நன்மை, உதவி என்று திடமாக நம்பி இந்தக் காரியத்தில் இறங்கி யிருக்கிறாளா?'

இப்படிப் பலவாறாக அவன் எண்ணிக் குழம்பினான். கடைசியில், 'நான் ஏன் இப்படிச் சிரமப்பட வேண்டும்? மிருணாளினி எதையும் மறைக்கத் தெரியாதவள், இன்று மாலை அவளையே நேரிடையாகக் கேட்டுவிட்டால் போயிற்று' என்ற முடிவுக்கு வந்தான்.

பொழுது சாயும் நேரத்தில் மிருணாளினி அவன் வீட்டுக்கு வருவது வழக்கமாயிருந்தது. மாடியில் தங்கப்பனுடைய தனி அறையில் அவர்கள் இருவரும் நீண்ட பொழுது நேரம் போவது தெரியாமல் பேசிக் கொண்டிருப்பார்கள்.

அவள் இப்படி அடிக்கடி வந்து போவதைக் கொஞ்சம் கலக்கத்துடன் கண்ட தாமரைக்கும் இப்போது அது பழகிப் போயிருந்தது. ஆரம்பத்தில் அவள் யார், எங்கிருந்து வருகிறாள் என்பன போன்ற விவரங்களை யெல்லாம் தங்கப்பனிடம் கேட்டறிந்து கொண்டாள் தாமரை. ஆனால் அதற்கு மேல் ஏதும் கூற அவளுக்குத் தயக்கம். 'அவள் இப்படித் தினமொரு முறை வந்து போகத்தான் வேண்டுமா?' என்றோ, 'மாடியில் தனித்திருந்து அப்படி என்னத்தைத்தான் மணிக்கணக்கில் ஓயாமல், நிறாமல் பேசிக் கொண்டிருப்பீர்கள்' என்றோ கேட்க அவளுக்குத் துணிவில்லை. அப்படியே அவள் அவனைக் கண்டிப்பது போல் கேட்டிருந்தாலும் தங்கப்பன் அந்த வார்த்தைகளை லட்சியமே செய்ய மாட்டான் என்பது அவளுக்குத் தெரியும். 'அநாவசியமாக மரியாதையைக் கெடுத்துக் கொள்வானேன்?' என்று வாளாவிருந்து

காரியாலயத்தி லிருந்து திரும்பிய தந்தை இளைப்பாறிக் கொண்டிருந்தார். அவர் குழந்தை அவரைப் பல கேள்விகள் கேட்டு அவருக்குத் தொந்தரவு தரலாயிற்று. கடைசியாக 'அப்பா! நீங்கள் ஆபீஸில் என்ன செய்கிறீர்கள்?' என்று கேட்டது.

'ஒன்றுமில்லே!' என்று அலுத்துக் கொண்டார் தந்தை.

'அப்படியானால் உங்களுக்கு எப்படியப்பா வேலை முடிந்து விட்டது என்று தெரியும்?' என்று கேட்டது குழந்தை!

விட்டாள். தன்னால் அடக்கி ஆளப்படக் கூடிய சிறு பிள்ளையல்ல தங்கப்பன். பிறரது வார்த்தைகளுக்கு அவன் மதிப்புத் தருவானென்றாலும் அது ஓர் அளவோடு நிற்கும். தனக்குச் சரி என்று தோன்றுவதையே செய்வான், செய்ய வேண்டும் என்று நிர்மாணித்ததைச் செய்தே தீருவான். இதை யெல்லாம் அவள் உணரத் தொடங்கி நீண்ட நாட்களாகி விட்டிருந்தன.

மிருணாளினியின் சிரித்த முகத்திலும் கலகலப்பான பேச்சிலும் தன்னிடமும் தன் மகனிடத்திலும் அவள் பழகுகிற முறையிலும் தாமரையால் பிழை எதும் கண்டுபிடிக்கவும் முடியவில்லைதான். என்றாலும் உள்ளூற அவளுக்கு ஏதோ ஒரு குடைச்சல். இவர்கள் பழகும் விதத்தை என்னவென்று தான் எடுத்துக் கொள்வது? அரசியல் சர்ச்சையா? நண்பர்களின் உரையாடலா? இது இத்துடன் இப்படியே நிற்குமா? அல்லது வேறு விதமாகக் கிளைவிட்டுப் படருமா?

இதுபோன்ற ஒரு சலனமுற்ற மன நிலையில் அவளால் மிருணாளினியுடன்கூட நெருங்கி உறவாடவும் முடியவில்லை. மிருணாளினி, "மாதாஜி" என்று குழையக் கூப்பிட்டுக் கிட்டத்தில் வந்தாலும் அவள் ஒன்றிரண்டு வார்த்தைகளுடன் பேச்சை முடித்துக் கொண்டு ஒதுங்கி விடுவாள். அப்படி அவ்வாறு அவள் விலகாமலிருந்திருந்தால் ஒரு வேளை அவளுக்கு மிருணாளினியிடம் மதிப்பும் அன்பும் பிறந்திருக்கலாம். ஆனால் அது நடைபெறாத வகையில் மிருணாளினியைக் காணும்போதெல்லாம், அவளையும் தன் மகனையும் சம்பந்தப்படுத்தி நினைக்கும் போதெல்லாம் தாமரைக்குத் தன்னையறியாமல் செல்லத்தின் ஞாபகம் வரும். பல வருஷங்களுக்கு முன்னால் சென்னையில் செல்லத்துக்கு மஞ்சள் நீராட்டுவிழா நடந்த தருணத்தில் அவள் சர்வாலங்கார பூஷிதையாகத் திகழ்ந்து தனக்கு நமஸ்கரித்த காட்சியை எண்ணிப் பார்ப்பாள். அடுத்தாற்போல் சத்தியபுரியில் செல்லம் தன்னுடன் தன் பாதுகாப்பில் தங்கியிருந்த பல நாட்களும், அப்போதெல்லாம் அவள் தனக்கு அனுசரணையாக, உதவியாக இருந்து பல வீட்டுக் காரியங்களைக் கச்சிதமாகவும், குடும்பப் பாங்காகவும், அழகாகவும், அணுவளவும் குறைகூறவே இடம் வைக்காத வகையிலும் செய்து முடித்த வக்கணையை எண்ணிப் பெருமூச்சு விடுவாள். செல்லம் தன் மகனிடத்தில் கொண்டுள்ள அளப்பரிய காதலையும் வேறு மாப்பிள்ளை தேடுவதில் தீவிரம் காட்டிய தன் பெற்றோரைக் காத்திருக்குமாறு அவள் மன்றாடிக் கேட்டுக் கொண்டிருப்பதையும் அவள் கண்ணீரில் தோய்ந்து வந்திருந்த பல கடிதங்கள் வாயிலாக அறிந்திருந்த தாமரைக்குத் தங்கப்பனின் போக்கு பிடிக்கவில்லைதான். 'நிலத்தை விற்பதோ, தொழிற்சாலையைத் தொடங்குவதோ, யூனியனை ஆரம்பிப்பதோ, தேர்தலில் குதிப்பதோ எதுவானாலும்தான் என்ன? கல்யாணத்தைச் செய்து கொண்டு அப்புறம் எதை வேண்டுமானாலும் நடத்தட்டும், செய்யட்டும், யார் தடுக்கிறார்கள்?'

அன்று மாலை தொழிலகத்திலிருந்து திரும்பிக் கைகால் முகமெல்லாம் கழுவிக் கொண்டு மிருணாளினியின் வருகைக்காக ஆர்வத்துடன் காத்திருக்க ஆரம்பித்தான் தங்கப்பன். இன்று நேருக்கு நேராகக் கேட்டுவிட வேண்டும், தன்னை ஒரு கம்யூனிஸ்டாக மாற்றி விடுவதில் அவள் ஏன் இத்தனை சிரத்தை காட்டுகிறாள் என்று.

அவள் வந்தாள், "ஹௌ இஸ் தி பிக் பாஸ் டுடே ?" என்று வினவியபடியே.

"இந்த முதலாளி, தொழிலாளர் சமூகத்தில் கம்யூனிஸம் வெகு வேகமாகப் பரவுவதை எப்படித் தடுக்கலாம் என்று யோசிக்கக்கிட்டிருக்கிறார்" என்றான் தங்கப்பன்.

"அதையே வேறு விதமாகவும் சொல்லலாம் நீங்கள்" என்றாள் மிருணாளினி. தான் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு வந்த புத்தகச் சுமையைப் 'பொதுக்'கென்று பெரிய ஓசையுடன் தரையில் போட்டுவிட்டு "அப்பாடா" என்று பெருமூச்சு விட்ட கையோடு, "அதாவது தொழிலாளர் சமூகத்தை மேலும் எப்படிக் கசக்கிப் பிழிந்து வேலை வாங்குவது என்று இந்த முதலாளி ஐயா யோசித்துக் கொண்டிருக்கிறார், அப்படித்தானே?" என்றாள்.

"அதை ஏன் கேட்கிறீங்க...." என்றான் தங்கப்பன், அலுப்புடன் பேசுவது போல நடித்து. "அவங்களை வேலை வாங்குவது ரொம்பக் கஷ்டமாக இருக்குது இப்போதெல்லாம். அதனால் அவங்க உடலிலே கடைசிச் சொட்டு ரத்தம் இருக்கும் வரை அவங்களை உழைக்க வைக்க ஓர் இயந்திரம் கண்டுபிடிக்கப் போகிறேன். அப்புறம், கம்யூனிஸத்தின் பிரதிநிதியாக உங்களைக் கருதி, உங்களுக்கு என் அந்தரங்கப் பரிசாக அந்த இயந்திரத்தைக் கொடுக்கப் போகிறேன். பிறகு அதை உங்களோட கண்டுபிடிப்பாக நீங்க பகிரங்கப்படுத்திக் கொள்ளலாம். உடனே நீங்க பொதுவுடைமை உலகத்தின் நன்றிக்கும் போற்றுதலுக்கும் பாத்திரராகிப் பெரும் புகழடைவீங்க!"

"பொல்லாதவர் நீங்கள்; பொடி வைத்துப் பேசுகிறீர்கள்" என்றாள் மிருணாளினி சற்றும் முகம் சுளிக்காமல். சிரிக்கவும் செய்தாள் அவள்.

"உங்களை எப்படியாவது என்றாவது ஒரு நாள் கோபப்பட வைத்துப் பார்க்கத்தான் போகிறேன்" என்றான் தங்கப்பன். (தொடரும்)

**காலச் சக்கரம் தொடர்கதையில் ஒரு ரசமான திருப்பம் ஏற்படுகிற இந்தக் கட்டத்தில், ஓவியர் வினு, கதாநாயகன் தங்கப்பனையும் அவன் வாழ்வை அமைத்துத்தரும் முக்கிய சக்திகளான மூன்று பெண்களையும் இவ்விதம் மேலட்டையில் தருகிறார்.**

# ஸ்ரீ விநாயகர் புராணம்

எழுதியவர்: எஸ். இராமநாதன் (கார்த்திகேயன்)

இன்னும்,

- ஸ்ரீ விநாயகர் பெருமானின் பலதேச உருவப்படங்கள்,
- பூஜிக்கும் விளக்கங்கள், விரத மகிமைகள், பலன்கள்,
- ஸ்தோத்திரம், மந்திரம், இன்னும் அநேகம் அடங்கியது

400 பக்கங்கள் .... விலை ரூ: 3.00 தான்.

விலாசத்திற்கு:

**வானதி பிரசுரம்**

த. பெ. 659. சென்னை-14.



---

## ஜலதோஷமா?

## பெப்ஸ் சாப்பிடுங்கள்!

பெப்ஸ் வில்லைகளை மெதுவாகச் சுவையுங்கள். குணமளிக்கும் ஆவிபோன்ற அதன் சத்து உடனே வேலை செய்யத் தொடங்குவதை உணரலாம் ... எரிச்சலூட்டும் ரணமான பகுதிகளுக்கு இதமூட்டுகிறது. உபாதை பரவுவதைத் தடுக்கவும் உதவுகிறது. விரைவில் நீங்கள் உடல்நலம் பெறுகிறீர்கள்,

- ★ தொண்டைப் புண்ணுக்கும் பராங்கைடிஸுக்கும் நிச்சய நிவாரணம்.
- ★ குழந்தைகளுக்கு ஆபத்தில்லாதது.
- ★ எல்லா மருந்து வியாபாரிகளிடமும், பலசரக்குக் கடைகளிலும் விற்கப்படுகிறது.

## பெப்ஸ்

உடனடி நிவாரணமளிக்கிறது




சென்னை ராஜ்ய டிஸ்ட்ரிப்யூட்டர்கள்:

மெஸர்ஸ் மோஜி & கம்பெனி, 214, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, தபால் பெட்டி நெ. 1102, சென்னை-.

---

பண்டிட்

டி. கோபாலாச்சார்லுவின்

# ஜீவாம்ருதம்

ஆரோக்யத்திற்கும் பலத்திற்கும்




## முதல் காட்சி

[சந்திரகிரி மலைப் பிரதேசம். கலை வளம் நிரம்பிய அழகிய குகைக் கோயில்கள் நிரம்பிய அவ்விடத்தில் இரு துறவிகள் அமர்ந்துள்ளனர். அவர்களில் ஒருவரின் முகத்தில் சோக முத்திரையும் மற்றவரின் முகத்தில் அமைதியும் காணப்படுகின்றன.]

பத்ரபாகு: சந்திரகுப்தா! இங்கு வந்து இத்தனை நாட்களாகியும், இயற்கையன்னையின் இனிய தோற்றங்களைப் பல கோணங்களில் அள்ளித் தரும் இந்த அழகு பூமியின் மடியில் வந்துமா உன் துன்பம் உன்னை விட்டு நீங்கவில்லை?

சந்திரகுப்தன் (விரக்தியாக): ஆச்சார்ய! சோகம் நீங்குவதா? என்னை விட்டா? உம்... நான் இறந்தால்தான் என் வேதனைகளுக்கு விடிவு. ஸ்வாமி, நான் இப்போது பூண்டுள்ள துறவறம் உண்மையாகப் பார்க்கப் போனால் அன்றே பூண்டிருக்க வேண்டும். என்றைக்கு என் அன்பு ஹெலன் என்னிடமிருந்து விடை பெற்றுக் கொண்டு போனாளோ, அன்றே நான் நாடு துறந்து காடு சென்றிருக்க வேண்டும். ஆனால் என்னையும் ஆளாக்கி, ஆண்டியாக, பஞ்சை, பரதேசியாக ஊர் சுற்றித் திரிந்த என்னையும் ஒரு மனிதனுக்குச் சரித்திரப் புகழ் பெறச் செய்த அறிவுக் களஞ்சியமாம் என் அன்பு சாணக்கியரின் வேண்டுகோளுக்கிணங்கி ஆட்சி புரிந்தேன். சில வருடங்கள் வரை...உம் (பெருமூச்சு விடுகிறான்).

பத்ர: சந்திரகுப்தா! உனது வாழ்க்கைச் சரிதையை நானும் ஓரளவு அறிவேன். ஆனால் முழு உண்மையும் எனக்குத் தெரியாது. உன் மனச் சுமை தீரச் சற்று என்னிடம் உன் வாழ்க்கை ஏடுகளைப் புரட்டிக் காட்டு. உன் உள்ளமும் அமைதி பெறும். எனக்கும் உண்மை புரியும்.

சந்திர (வேதனையுடன்): சொல்கிறேன், ஸ்வாமி சொல்கிறேன். குமுறும் எரிமலை



### பாத்திரங்கள்

| | | |
|---|---|---|
| சந்திரகுப்தன் | ... | மௌரிய அரசன் |
| சாணக்கியன் | ... | சந்திரகுப்தனின் மந்திரி-அரசியல் ஞானி |
| செல்யூகஸ் | ... | சிக்கந்தரின் சேனாபதி-யூனன் தேசத்தரசன் |
| அந்தோணி | ... | செல்யூகஸின் தளபதி |
| மெகஸ்தனிஸ் | ... | கவிஞன் - ராஜதூதன் |
| பத்ரபாகு | ... | ஜைனத் துறவி |
| ஹெலன் | ... | செல்யூகஸின் மகள்-சந்திரகுப்தனின் மனைவி |

என்றைக்காவது வெடித்துத்தானே தீர வேண்டும்? கேளுங்கள் குருவே...

அந்தக் காலத்தில் இந்தச் சந்திரகுப்தன் அநாதை. இப்போது மௌரிய வம்சத்தை ஸ்தாபித்த நான் அப்போது காட்டிலே அலைந்துகொண்டிருந்தேன், ஆதரவைத்தேடி. நந்த வம்சத்துக் கடைசி அரசனான தனநந்தனிடம் என் தந்தை சிறைப்பட்டுக் கிடந்தார்; நந்தனைப் பழி வாங்கத் துடித்தேன் நான். 'சாணக்கியர்' என்ற அரசியல் தந்திரியின் உருவில் எனக்கு அறிவுரை கிடைத்தது. சந்தர்ப்பங்களும், சூழ்நிலைகளும் சாதகமாக அமைய, அறிஞர் சாணக்கியரின் மூளை பலத்தாலும், என் புஜ பலத்தாலும் நந்தனைத் தோல்வியுறச் செய்தேன். நல்லதோர் அரசை நிறுவினேன். அரசாட்சி அமைதியாக நடந்தது...... ஒரு நாள்...

## இரண்டாம் காட்சி

*[சாணக்கியரின் இருப்பிடம். தனிமையில் அமர்ந்திருக்கும் அந்தத் தத்துவ ஞானி ஆழ்ந்த ஆலோசனையில் இருக்கிறார். அப்போது வேகமாக வருகிறான் சந்திரகுப்தன்.]*

சந்திர (பதற்றமாக): கௌடில்யரே, சேதி தெரியுமா உமக்கு? வந்து....

சாணக்கியர் (நிதானத்துடன்): மௌரிய வேந்தா, ஏன் இந்தப் பதற்றம்? பாஞ்சாலத்தின் மீதும் சிந்துவின் மீதும் சிக்கந்தரின் சேனாதிபதி செல்யூகஸ் படையெடுத்திருக்கிறான்...... இவ்வளவுதானே ?

சந்திர (வியப்புடன்): அர்த்த சாஸ்திரியே! தாங்கள் அறியாதது ஏதும் இல்லை !

சாணக்கியர்: சந்திரகுப்தா! செல்யூகஸின் படையெடுப்பைப் பற்றிக் கலங்காதே. அன்று எத்தனையோ இடையூறுகளுக்கிடையே அலெக்ஸாண்டர் பாஞ்சாலத்தின் மீது படையெடுத்தான். அப்போது பாஞ்சாலம் பிளவுபட்டிருந்தது. அப்படியிருந்தும்கூட அவனால் வெற்றியைக் காண முடியவில்லை. போர் முரசு கொட்டச் சொல்லு, சந்திரகுப்தா ! செல்யூகஸின் வீழ்ச்சியைக் கண்டு களிக்க வேண்டிய காலம் வந்து விட்டது.

சந்திர: விஷ்ணுகுப்தரே! வீணாக இரத்த ஆறு ஓட வேண்டுமா?

சாணக்கியர் (சிரித்தபடி): வீரனே! நாம் வீண் சண்டைக்குப் போக வில்லை. ஆனால் வந்த சண்டையை இழந்து விட்டுக் கோழையாக இருக்கக் கூடாது. தவிர நீ நினைக்கிற அளவு செல்யூகஸ் வீரனல்ல. இரத்த ஆறு ஓடாது. உன் படையைக் கண்டு அவனே பயந்து பணியப் போகிறான் பார். எனவே, பயப்பட வேண்டியதில்லை. சந்திரகுப்தா, உம்..... இனி ஆக வேண்டியதைக் கவனி.

சந்திர: தங்கள் விருப்பப்படியே செய்கிறேன். வருகிறேன்.

## மூன்றும் காட்சி

*[ஹெலன் இருப்பிடம். இரவு நேரம். தோட்டத்திலே தன் கண்களைப் பதித்த வண்ணம் அமர்ந்திருக்கிறாள் ஹெலன். ஏதோ சிந்தனையில் ஆழ்ந்துள்ளாள் என்பது அவள் முகத்தைப் பார்க்கும் போது நன்றாகப் புரிகிறது. அப்போது வேகமாக வருகிறான் ஒரு வாலிபன்.]*

வாலிபன்: ஹெலன்.......

ஹெலன் (திடுக்கிட்டுத் திரும்பி): யார்...? அந்தோணியா? வா..... உன்னைப் பற்றித் தான் யோசித்துக் கொண்டிருந்தேன். நீயும் வந்து விட்டாய்.

அந்தோணி (அன்புடன்): என்ன யோசித்தாய் ஹெலன் ? சிறு வயதிலிருந்து நம்முடன் கைகோத்து விளையாடிய அந்தோணி, இன்று செல்யூகஸின் தளபதியானதும் நம்மை அடியோடு மறந்து விட்டானே என்று யோசித்தாயா? என்னைப் பற்றிக் கவலை கொண்டாயா?

ஹெலன் (சிரித்தபடி): இதில் கவலைப் படுவதற்கு என்ன இருக்கிறது? என் அன்புக் காதலன் என் தந்தையின் தளபதியானது கண்டு பெருமகிழ்ச்சி கொள்கிறேன். காதலியைக் காணக்கூட நேரமில்லாமல் கடமை உங்களைக் கைகொட்டி அழைக்கிறது என் பதை அறிந்து அகமகிழ்கிறேன். (பெருமூச்சு விட்டபடி) ஆகாயத்தைப் பார்த்தேன். நிலவு என்னை..... எங்கோ இழுத்துச் சென்றது. நக்ஷத்திர விளக்கை ஏற்றிக் கொண்டு தன் ஆசைக் காதலனைத் தேடிப் புறப்பட்டு விட்டாள் இரவு ராணி. இந்தச் சமயத்தில் நீயும் என் அருகில் இருந்தால் எப்படி யிருக்கும் என்று சிந்தித்தேன். வைரப் பூப்போட்ட பட்டுப் புடவைகளால் தன்னை அலங்கரித்துக் கொண்டு நிலவுக் காதலனுடன் கொஞ்சி விளையாடும் மேகராணி உன் நினைவை எனக்கு ஊட்டினாள்! வேறு ஒன்றும் இல்லை.

அந்தோணி (சிரித்தபடி): அழகாகப் பேசுகிறாய், ஹெலன். ஆனால் நீ கூறும் இவ்வுண்மையைச் சற்று மாற்றிக் கூறினால் அது உன் தந்தைக்குப் பொருந்தும்.

ஹெலன் (வியப்புடன்): என் தந்தைக்கா? என்ன? எப்படி?

அந்தோணி (வெற்றிப் பெருமிதத்துடன் அகங்காரக் குரலில்): இந்த வானத்துத் தாரகைகள் வாய் விட்டுச் சிரிக்கின்றன— உன் தந்தையின் மூளையற்ற செயலைக் கண்டு! இந்த வானத்து மின்மினிப் பூச்சிகள் எக்காளமிடுகின்றன உன் தந்தையின் தோல்வியைக் கண்டு !

ஹெலன் (கோபத்துடன்): போதும் அந்தோணி. புதிர் போடாமல் புரியச் சொல்.

அந்தோணி: சொல்கிறேன், ஹெலன், சொல்கிறேன். சந்திரகுப்தனுடன் வீணே சண்டையைத் தொடங்கினார் உன் தந்தை. சந்திரகுப்தனின் படை பலத்தையும் அவனுக்கு உதவியாக இருக்கும் அந்த அந்தணனின் அறிவுப் பலத்தையும் நன்கு அறிந்திருந்த நான் உன் தந்தையைத் தடுத்தேன், சண்டை செய்ய வேண்டாமென. 'அரசியலைப் பற்றி நீ எனக்கு அறிவுரை வழங்க வேண்டாம். நீ என் தளபதி. நான் சொன்னதைச் செய்ய வேண்டியதுதான் உன் கடமை' என்று சபையில் அவமதித்துப் பேசி விட்டார் உன் அருமைத் தந்தை. கொதித்தது என் உள்ளம். குமுறியது நெஞ்சம். பொறுத்துக் கொண்டேன். யாருக்காகத் தெரியுமா ? உனக்காகத்தான் ஹெலன் ! உனக்காகத் தான்! அன்றே உன் தந்தையை அவமதிக்க

வெகு நேரமாகி விட்டிராது. ஆனால் நான் என் நாவைக் கட்டுப்படுத்தினேன். எதற்காக? காதல் போதை தரும் உன் கருவண்டு விழி வீச்சுக்காக! மின்னல் கொடியாள் என் ஹெலனின் காதலை நான் இழந்து விடக் கூடாதே என்பதற்காகப் பொறுத்துக் கொண்டேன் ஹெலன். இன்று உன் தந்தை மண்ணைக் கவ்வி விட்டார்.

(இரைந்து நகைக்கிறான்)

சந்திரகுப்தனின் படையைக் கண்டு நடு நடுங்கிய உன் தந்தை நாலு பேர்கள் நகைக்கச் சமாதான உடன்படிக்கை செய்து கொண்டிருக்கிறாராம். வெட்கத்தை விட்டு...தூ...

ஹெலன் (சற்றுக் கோபத்துடன்): போதும் அந்தோனி. இவ்வளவுதானே விஷயம். வீணில் குருதியைப் பெருக்காமல் சமாதான உடன்படிக்கையின் மூலம் எண்ணற்றோர்களைக் காப்பாற்றியதைப் புகழத்தானே வேண்டும்? அது சரி, உடன்படிக்கையின் ஷரத்துக்கள் என்னவாம்? தெரியுமா உனக்கு?

அந்தோனி (அலட்சியமாக): வேறு என்ன இருக்கும்? பொன்னையும் மணியையும் நவரத்தினங்களையும் வாரித் தருவதாக ஒப்புக் கொண்டிருப்பார். போதாக்குறைக்குத் தாம் ஜெயித்த இரண்டொரு நாடுகள் பாரதத்தில் இருந்தால் அதையும் தந்திருப்பார். அவ்வளவுதான். நன்றாக வேண்டும் அவருக்கு. என்னைச் சபை அறிய அவமானப்படுத்தினார் அன்று. இன்று நாடே சிரிக்கிறது அவர் நடத்தையைக் கண்டு!

ஹெலன் (உருக்கமாக): அன்பே! நீண்ட நாட்களுக்குப் பிறகு இன்று சந்திக்கிறோம். நமது இன்றையப் பேச்சு இப்படி ஆத்திரத்திலும் ஆவேசத்திலும் கழிய வேண்டுமா?

அந்தோனி (அன்புடன்): ஹெலன், இந்த அந்தோனி உன் அன்புக் காதலன்தான். உன் ஆசைக்கு உரியவன்தான். ஆனால் என்னைப் பகைத்துக் கொண்ட எவரும், அது உன் தந்தையாக இருந்தாலும் சரி, நிம்மதியாக வாழ்ந்துவிட முடியாது!

ஹெலன்: போதும்..... போதும். வேம்... வாருங்கள்..... சற்று உலாவி வருவோம்.

[இருவரும் செல்கின்றனர். அப்போது இதுவரை மறைவிலிருந்த ஓர் உருவம் வெளியே வருகிறது.]

செல்யூகஸ் (தனக்குள்): அந்தோனி! (ஆத்திரத்துடன் பற்களைக் கடிக்கிறான்) உம்..... உனக்கு இவ்வளவு ஆணவமா? இந்த செல்யூகஸின் சக்தியைப் பற்றி அவ்வளவு குறைவாகவா மதிப்பிட்டு விட்டாய்? நான் சந்திரகுப்தனிடம் தோற்றது உண்மை. ஆனால் உன்னிடமும் தோற்றுவிட மாட்டேன், அந்தோனி. என் தோல்வி உனக்கு இவ்வளவு மகிழ்ச்சியூட்டுமானால் உன் தோல்வியையும் நான் காண வெகு நாட்களாகி விடாது. பொன்னையும், மணியையும் நான் சந்திரகுப்தனுக்குத் தந்தது உண்மைதான். ஆனால் அந்தோனி, உன் கர்வத்தை ஒடுக்க, உன் கற்பனைக் கனவுகளைச் சிதைக்க நான் என் பெண்ணையும் கொடுப்பதாகத் தீர்மானித்து விட்டேன் சந்திரகுப்தனுக்கு! நீ விரும்பும் மாணிக்கத்தை உன்னிடமிருந்து பிரித்து மற்றவனுக்கு உடைமையாக்கப் போகிறேன்! அப்போது என்ன செய்வாய்? பார்க்கலாம், உன் வீரத்தை!

(கோபமாகப் போகிறான்)

## நான்காம் காட்சி

[செல்யூகஸின் இருப்பிடம் — அவன் எதிரில் ஹெலன் கோபமாக நிற்கிறாள்.]

ஹெலன்: அப்பா, நீங்கள் சொல்வது உண்மைதானா?

செல்யூ (நிதானமாக) ஆம், மகளே! ஆம். உடன்படிக்கையின்படி நீ சந்திரகுப்தனின் மனைவியாக வேண்டும்.

ஹெலன் (கோபமாக): அப்பா, யாரைக் கேட்டுக்கொண்டு உடன்படிக்கை செய்தீர்கள்?

செல்யூ (அமைதியாக): ஹெலன், மகளின் திருமணத்தை முடிக்கத் தந்தைக்கு உரிமையில்லையா?



"என்னதான் நடந்தது?"

"ஒன்றுமில்லே. நல்லா மூக்க விடுன்னேன். ஒரே அடியா மூச்சையே விட்டு விட்டார்!"

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

ஹெலன் (கோபமாக): உரிமை! உம் அந்த உரிமையோடு உங்கள் மகளின் மன அபிப்பிராயமும் கலந்திருக்க வேண்டுமப்பா. நீங்கள் இப்போது தீர்மானித்தது மணமல்ல. மரணம்! என் வாழ்வுக்கு ஒரு முடிவு!

செல்யூ: ஹெலன், உன் எதிர்காலத்தை வளமாக்க நினைக்கும் எனக்கு, உன் வாழ்க்கைப் பாதையை வகுக்க உரிமையில்லையா?

ஹெலன் (உணர்ச்சியுடன்): அப்பா! என் வாழ்வை உண்மையாக வளமாக்க நினைத்தால் இந்தத் திருமணத்தை உடனே நிறுத்துங்கள். என் மனம் கவர்ந்த அந்தோணியுடன் என் வாழ்வைப் பிணையுங்கள். (விம்முகிறாள்)

செல்யூ (வேதனையுடன்): ஹெலன்! இனியும் உண்மையை மறைப்பதில் பயனில்லை. எனக்கு அழகான பெண் இருக்கிறாள் என்பது எப்படியோ அந்த மூர்க்க அரசன் சந்திரகுப்தனுக்குத் தெரிந்துவிட்டது. நம்மிடையே நல் உறவு என்ற போர்வையைப் போர்த்தி உன்னைத் தனக்கு மணம் செய்துதான் தர வேண்டுமென்று அவன் கூறி விட்டான்! போதாக் குறைக்கு அவ்வப்போது ஆலோசனைகள் சொல்லித் தர அந்தச் சாணக்கியன் வேறு. உன்னைத் தாமறுத்தால்? யுத்த பேரிகை முழங்குமாம்! இரத்த ஆறு ஓடுமாம்! உனக்கு நான் இதைச் சொல்ல விரும்பாததன் காரணம், நாளைக்கு நீ சந்திரகுப்தனின் மனைவியானாலும் அவனை வெறுத்து விடக் கூடாதே என்பதற்காகத்தான்! இப்போது புரிந்து விட்டதல்லவா? சொல், ஹெலன், உன் ஒருத்திக்காக நாடு சாந்தியடையும் என்றால், உன் ஒருத்தியினால் எண்ணற்ற உயிர்கள் பலி பீடத்திலிருந்து காப்பாற்றப்படும் என்றால், உன்னால் உன் தந்தையின் வாக்கு நிறைவேறும் என்றால் நீ அந்த மாபெரும் தியாகத்தைச் செய்ய முன் வர மாட்டாயா?

ஹெலன் (கதறியபடி): அப்பா, ஐயோ! என் மூளை குழம்புகிறது. என்ன செய்வதென்று புரியவில்லையே!

செல்யூ (நிதானத்துடன்): ஹெலன்! இதோ என்னைப் பார். எனக்கு மட்டும் இதயமில்லையா? என் செல்வமகளின் இருண்ட வாழ்வையா நான் விரும்புவேன்? நீ சந்திரகுப்தனின் மனைவியானால், மௌரிய அரசனின் பட்டத்து ராணியானால் அது எத்தனையோ விதத்தில் நல்லதம்மா!

ஹெலன் (வேதனைச் சிரிப்புடன்): பட்டத்து ராணி! எனக்கு அப்பதவி கிட்டுமென நினைக்கிறீர்களா அப்பா? யூனான் தேசப் பெண்ணைப் பாரத நாட்டின் பட்டத்து ராணியாகச் சந்திரகுப்தன் அமர்த்துவான் என்று கருதுகிறீர்களா? போகட்டும். நீங்கள் சொல்வது உண்மையானால்..... என்னால் பல்லாயிரக்கணக்கான உயிர்கள் காப்பாற்றப்படும் என்பது உண்மையானால் உங்கள் ஹெலன் தன் உணர்ச்சிகளைக்கொன்று விடுவாள் அப்பா கொன்று விடுவாள்! அப்பா, எனக்காக நீங்கள் உங்கள் பெயருக்கு இழுக்குத் தேடிக் கொள்ள வேண்டாம்! இன்றே சந்திரகுப்தனுக்கு ஓலை போகட்டும். ஹெலன் மணப்பெண்ணாகத் தீர்மானித்து விட்டாள் என்ற செய்தி ஓடட்டும்.

செல்யூ: ஹெலன், ஹெலன்!

ஹெலன் (அழுத வண்ணம்): இனி வேறு என்ன பேச இருக்கிறது? நான் வருகிறேன்.

(அவ்விடத்தை விட்டு அழுதவண்ணம் நகருகிறாள்)

## ஐந்தாம் காட்சி

[சந்திரகுப்தனின் அரண்மனை - அந்தப் புரத்தில் அமர்ந்திருக்கும் ஹெலனை நாடிச் சந்திரகுப்தன் வருகிறான். அவள் சிலை சிந்தனையைக் கண்டு சற்றே திகைக்கிறான் பிறகு....]

சந்திர (குழைவாக): ஹெலன்!

ஹெலன் (திடுக்கிட்டவளாய்): யார்? சக்கரவர்த்தி! வாருங்கள்.

சந்திர (சிரித்தபடி): ஹெலன், மணமாகித் திங்கள் பல சென்ற போதும் இன்னும் என்னைச் சக்கரவர்த்தி என்றுதானே கூப்பிடுகிறாய்? உன் பவள வாயைத் திறந்து, 'அன்பே' என்று என் ஆசை தீர அழைக்க மாட்டாயா ஹெலன்?

(ஹெலன் மௌனமாக இருக்கிறாள். அவள் விழிகளில் நீர் துளும்புகிறது.)

சந்திர (திடுக்கிட்டு): தேவி; இதென்ன? உன் இன் முகத்தில் நான் இதுவரை மலர்ச்சியையே கண்டதில்லை. அயினும் இன்றுதான் முதன் முறையாகக் கண்ணீரைக் காண்கிறேன் உன் கயல்விழிகளில்! ஹெலன், உன் மனத்தை வாட்டும் கவலை என்ன? என்னை மணந்து கொண்டதில் உனக்கு விருப்பமில்லையா? உன் கடைக்கண் நோக்குக்காகக்

---



"என்ன சார், தாடி வளர்க்கிறீர்கள்?"
"என் வழுக்கைத் தலையில் நன்றாய் மயிர் முளைக்கணும் என்று திருப்பதிக்குப் பிரார்த்தனை பண்ணிக் கொண்டிருக்கிறேன்!"

தவிக்கும் என்னைக் குழப்பாதே பெண்ணே! உன் உள்ளத்தில் என்னதான் இருக்கிறது?

ஹெலன் (அடக்கத்துடன்): பிரபோ! உடன்படிக்கையின்படி நடப்பவை நடந்து தானே தீர வேண்டும்? என் உள்ளத்தை என்ன கவலை வாட்டுறது தங்களுக்கு என்ன?

சந்திர (வியப்புடன்): ஹெலன்! நீ என்ன சொல்கிறாய்? உன் திருமணத்தைப் பற்றி ஏதும் உடன்படிக்கை செய்யப்படவில்லை! உன்னைத் தாமே விரும்பித்தான் உன் தந்தை எனக்கு அளித்தார். அதுவும் உன் சம்மதத்துடன்தான் என்று எண்ணுகிறேன்.

ஹெலன் (அதிசயத்துடன்): என்ன? நீங்கள் என்னைத் தங்களுக்குத் தாரமாக்க வேண்டும் என்று வற்புறுத்தவில்லையா?

சந்திர (சிரித்தபடி): இல்லை ஹெலன், இல்லை. உன்னை நான் கண்டதே யில்லை. ஆனால் உன் அழகைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் உடன்படிக்கை என்ற பெயரால் உன் அன்பைச் சிறை செய்ய என்றுமே எண்ணியது கிடையாது நான். உன்னை எனக்கு மனமுவந்து தந்தார் உன் தந்தை. ஏற்றுக் கொண்டேன் நான். நீ என் மனைவியாக ஆன தினத்திலிருந்து உன் பண்பட்ட உள்ளம் என்னைக் கவர்ந்து விட்டது. ஹெலன்! என்னிடம் ஏதாவது குறைகளைக் காண்கிறாயா? வாய் திறந்து சொல். உன் விருப்பம் எதுவாயினும் விரைவில் நிறைவேற்றி வைக்கிறேன்.

ஹெலன் (உணர்ச்சியினால் குரல் கம்ம): பிரபோ! ஹெலன் பாக்கியம் செய்தவள் தான். தங்களைப் போன்ற உயர்ந்த லட்சிய புருஷரைக் கணவராக அடைந்துவிட்ட நான் பாக்கியவதிதான். உண்மையில் தங்களுக்கு என்னிடம் அன்பு இருக்குமானால்.... என் அறியாத ஆசை ஒன்று...... அதை நிறைவேற்றுவீர்களா? (தயங்குகிறாள்)

சந்திர (மகிழ்ச்சியுடன்): நிறைவேற்றுகிறேன் ஹெலன், கட்டாயம் நிறைவேற்றுகிறேன். உன் அன்பின் மீது ஆணை.

ஹெலன் (உணர்ச்சியுடன்): பிரபோ!

(அப்போது வேகமாக வருகிறான் ஒரு சேவகன்.)

சந்திர: யார்? என்ன வேண்டும்?

சேவகன்: தங்களைச் சாணக்கியர் அவசரமாகப் பார்க்க வேண்டுமாம்.

சந்திர: சரி, நீ போ. நான் வருகிறேன்.

(சேவகன் போகிறான்)

ஹெலன்: போய் வாருங்கள், அரசே! பிறகு என் விருப்பத்தைக் கூறுகிறேன்.

சந்திர: ஹெலன், உன் விருப்பம் எதுவாயினும் தயக்கமின்றிக் கேள் என்னிடம். சாணக்கியருடன் பேசி விட்டுப் பிறகு வருகிறேன். (போகிறான்)

ஹெலன் (தனக்குள்): நீ அதிர்ஷ்டக்காரியடி. உன் காதல் கனவு ஈடேறப் போகிறது. ஆம், உன் நீண்ட நாளையக் கனவு நனவாகப் போகிறது. அப்பா, என்னை நீங்கள் ஏமாற்றி விட்டபோதும் உங்கள் மகளின் காதல்தான் கடைசியில் ஈடேறப் போகிறது அப்பா. (மகிழ்ச்சியுடன் சிரிக்கிறாள்)

## ஆறாம் காட்சி

(சாணக்கியரின் இருப்பிடம். அவர் எதிரில் இருவர் அமர்ந்திருக்கின்றனர். ஒருவன் அந்தோனி; மற்றவன் மெகஸ்தனிஸ். இப்போது வேகமாக வருகிறான் சந்திர குப்தன்.)

சாண: வா, சந்திரகுப்தா! இவர்கள் இருவரையும் செலியூகஸ் அனுப்பியிருக்கிறார், நம் அரண்மனை விருந்தாளிகளாக. இவர் பெயர் மெகஸ்தனிஸ். கவிஞர். இவர் பெயர் அந்தோனி. செலியூகஸின் தளபதி.

சந்திர (மகிழ்ச்சியுடன்): அப்படியா? மிகவும் மகிழ்ச்சி. அந்தோனி, மெகஸ்தனிஸ்! உங்கள் இருவரையும் கண்டதில் பெரும் ஆனந்தம் கொள்கிறேன். இன்று முதல் நாம் நண்பர்கள், உயிர் நண்பர்கள்.

அந்: நான் நாளையே ஊர் திரும்ப வேண்டும். ஏதாவது செய்தி உண்டா?

சாண (யோசனையுடன்): தளபதியாருக்கு என் இத்தனை அவசரம்? தங்கள் அரண்மனைச் செல்வி, எங்கள் அரண்மனையின் அரசியாக அமர்ந்திருக்கும் ஹெலனைக்கூடக் கண்டு பேச வேண்டாமா?

அந் (சமாளித்தவாறு): உம், செலியூகஸ் கூடத் தன் மகளைப் பற்றி விசாரித்து வரச் சொன்னார். ஹெலன் சுகமா? சந்தோஷமாக இருக்கிறாளா?

சந்திர: பாக்கியசாலியப்பா, உங்கள் அரசர் பெற்ற செல்வம். அறிவுச் சுடர்! அவளை மனைவியாக அடைந்த நான் பாக்கியசாலி.

சாண (நிதானமாக): சந்திரகுப்தா! வந்தவர்கள் சிரம பரிகாரம் செய்து கொள்ளட்டும். நாம் அப்பால் போவோம்.

சந்திர: அதுவும் சரிதான். ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள். நாளை எல்லா இடங்களையும் சுற்றிப் பார்க்கலாம்.

(சந்திரகுப்தனும் சாணக்கியரும் செல்லுகின்றனர்.)

## ஏழாம் காட்சி

[ஹெலனின் இருப்பிடம். அவளைக் காண அந்தோனி வருகிறான்.]

ஹெலன் (திடுக்கிட்டு): யார்? அந்தோணியா?

அந் (ஏளனமாக): ஏன் பதறுகிறாய்? நீ ஆடம்பர வாழ்வு நடத்துவதை நான் கண்டு விட்டேனே என்று கலங்குகிறாயா? உன் காதல் வெறும் நாடகம் என்பது வெட்ட வெளிச்சமாகி விட்டதே என்பதைக் கண்டு பயந்து சாகிறாயா? வஞ்சகி.... காதலிப்பது ஒருவனை, கைப்பிடிப்பது மற்றொருவனையா? துரோகி!

ஹெலன் (கோபமாக): அந்தோணி, உண்மையை அறியாமல் உளறாதே. அதிகம் வார்த்தைகளைச் சிந்துகிறாய் நீ. வறண்ட மணலிலே வீழ்ந்த தண்ணீர்த் துளிகளையும் தெரிய வார்த்தைகளையும் மீண்டும் எடுத்து விட முடியாது.

அந்: எது உண்மை? மௌரிய சாம்ராஜ்யத்தின் ராணியாக ஆசை கொண்டு தந்தையைத் தூண்டிவிட்டுச் சந்திரகுப்தனை மணந்தது உண்மையா? அல்லது மணமாகுமுன் செய்தி கேட்டு உன்னைக் காண வந்த என்னைச் சந்திக்காமல் விரட்டி விட்டது உண்மையா? எது உண்மை?

ஹெலன் (சிரித்தபடி): அந்தோணி.... நீ இன்னும் பழைய அந்தோணியாக இருக்கிறாய். நீ கூறியவையெல்லாம் உண்மைகளே அல்ல. சந்திரகுப்தனை நான் மணக்க விரும்பவில்லை. அது என் தந்தையின் சூழ்ச்சி என்பது இப்போதுதான் புரிந்தது எனக்கு..... அன்று உன்னை விரட்டியது உண்மைதான். ஆனால் அதில் ஆணவம் இல்லை! அன்பு இருந்தது. உன்னைக் கண்டால் எங்கே உன் உள்ளம் உறுதியிழந்து விடுமோ என்றுதான் அன்று உன்னைக் காண அஞ்சினேன். என் தந்தையின் சொல்லை உண்மை என்று நம்பியதால் ஏற்பட்ட விளைவுகள் இவை. சந்திரகுப்தனை வெறுத்தேன். ஆனால்.... உண்மை எனக்கு நேற்றுத்தான் தெரிந்தது.

அந்தோணி: போதும், ஹெலன்! உன் நாடகம். நீ சந்திரகுப்தனை வெறுத்தாயா? மனதார ஏன் இந்தப் பொய்யைச் சொல்கிறாய்? அவனை வெறுக்கும் உன்னையா அவன் அப்படிப் புகழ்கிறான் 'அறிவுச் சுடர்' என்று? மனமொத்து நீங்கள் இல்வாழ்வில் ஈடுபடாவிட்டால் அவன் உன்னை அப்படிப் புகழ்ந்து பேசுவானா? (அட்டகாசத்துடன் சிரித்தபடி) ஹா.... ஹா.... பத்தினித் தெய்வமே, பார்த்து விட்டேனடி, உன் பதிவிரதைத் தன்மையை. சந்திரகுப்தனை வெறுத்தாளாம்! கதை அளக்கிறாள்! கணவனும் மனைவியும் மாறி மாறி ஒருவரை யொருவர் புகழுகிறீர்கள். இதில் என் நினைவு வேறு உனக்கு இருக்கிறதா? நான் இங்கு வந்த காரணம் நீ அறிவாயா? உன்னைப் பழி வாங்க வந்தேன். அந்த நாடோடிப் பயல் சந்திரகுப்தனை ஒழித்துக் கட்ட வந்தேன்.

ஹெலன் (பதற்றத்துடன்): அந்தோணி! நீ இவ்வளவு அழுக்கு நெஞ்சம் கொண்டவனா? இத்தனை கொடியவனா நீ?...உன்னையா காதலித்தேன் நான் ஒரு காலத்தில்! சந்திரகுப்தனை இதுவரை என் சகோதரனைத்தான் எண்ணியிருந்தேன் நான். உன்னைத்தான் நெஞ்சிலே பூஜித்துக் கொண்டிருந்தேன்.



"என்னடா இது...?"
"அம்மாதான் 'நவராத்திரி'க்குத் திருடன் வேஷம் போட்டு விட்டாங்கப்பா!"

சந்திரகுப்தனைப் பற்றிய என் கருத்து மாறும்படி செய்து விட்டாய் நீ. சந்திரகுப்தனின் கம்பீரமான குணம் எங்கே? பெருந்தன்மை எங்கே? உன்னுடைய அற்ப குணம் எங்கே? அவருக்கு என்ன தீங்கிழைத்தாய் சொல்? சொல், அவரை என்ன செய்தாய்?

அந்தோணி: சந்திரகுப்தனைக் கொல்ல எண்ணி, அவனுடன் பேசிக் கொண்டிருந்த போது அவன் குடிக்கப் போகும் பழ ரசத்தில் விஷத்தைக் கலந்து விட்டேனே. இத்தனை நேரம் அவன் அதைக் குடித்திருந்தால்....?

ஹெலன்: ஐயோ, பாவி! என்ன காரியம் செய்தாய்?

(கதறிக்கொண்டு ஓடுகிறாள் வெளியே. அந்தோணியும் பின் தொடருகிறான்.)

## எட்டாம் காட்சி

[சந்திரகுப்தன் பழ ரசக் கோப்பையைக் கையில் வைத்தவாறு யோசனையில் ஆழ்ந்துள்ளான். அப்போது வேகமாக வருகிறார் சாணக்கியர்.]

சாண: சந்திரகுப்தா, நில், அதைக் குடிக்காதே.

சந்திர (திடுக்கிட்டு): ஏன் சுவாமி? தாகமாக இருக்கிறதே!

சாண: இது உன் தாகத்தைத் தணிக்காது சந்திரகுப்தா. உன் வாழ்வையே ஒரே அடியாகத் தணித்து விடும்.....

சந்திர: என்ன?

சாண: ஆம், இதில் கலந்திருப்பது விஷம். கலக்கியது அந்தோணி; தூண்டியது ஹெலன்!

சந்திர (கோபத்துடன்): அறிவுக் களஞ்சியமே! ஹெலனின் மீது பழி சுமத்த எண்ணி அர்த்தமற்ற பொய்களைப் பேசாதீர். உண்மையில் இதைத் தூண்டியவள் ஹெலனாக இருந்தால் நான் கட்டாயம் இதைப் பருகியே தீர வேண்டும்.

சாண: சந்திரகுப்தா, இதில் விஷம் கலந்திருப்பது உண்மை. இதை அந்தோணி கலப்பதை நான் என் கண்ணால் கண்டேன். இதைக் கலந்தவன் நேரே ஹெலனைச் சந்திக்கப் போயிருக்கிறான். எனவே......

[அப்போது ஹெலன் வருகிறாள்]

ஹெலன்: ...எனவே ஹெலன்தான் குற்ற வாளி எனத் நிர்மானித்து விட்டீர்கள், இல்லையா ?

சந்திர: ஹெலன்..... வா.... இதில் என்ன இருக்கிறது?

ஹெலன் : அதை இப்படித் தாருங்கள்... நான் குடிக்கிறேன்.

[சட்டெனக் குடித்து விடுகிறாள்.]

சந்திர : பார்த்தீர்களா, கௌடில்யரே ! இதில் விஷம் கலந்திருந்தால் ஹெலன் குடித் திருப்பாளா? இப்போதாவது தெரிந்துகொள் ளுங்கள், ஹெலன் குற்றமற்றவள் என்று....

ஹெலன் (சிரித்தபடி) : பிரபோ.... ஹெலன் குற்றமற்றவள்தான்... ஆனால் இதில் கலந்திருப்பது விஷம்தான்...ஆனால்...

சந்திர (பதற்றத்துடன்): என்ன? பின் அதை நீ ஏன் குடித்தாய்? ஹெலன்? ஐயோ!

[அப்போது வேகமாக அந்தோணி வருகிறான். அவனுடன் மெகஸ்தனீஸும் வருகிறான்.]

அந் (கதறியபடி): ஹெலன்! ஐயோ! விஷத்தைக் குடித்து விட்டாயா? நான் வைத்த விஷம் உன் உயிருக்கே உலை வைத்து விட்டதா? அதை ஏன் குடித்தாய் ஹெலன்?

ஹெலன்: அந்தோணி...உன் ஆத்திரத்தில் அரசனுக்கு விஷமிட்டாய். சாணக்கியரின் அறிவால் அந்தப் படுபாதகமான காரியம் தடைப்பட்டது. இவ்வுலக வாழ்வை விரும் பாத நான் அதை எடுத்துப் பருகி விட்டேன். சாணக்கியரே! அரசியலின் அறிவுப் பொக் கிஷமே! இப்படியே நீங்கள் என்றென்றும் வீரர் சந்திரகுப்தனைக் காப்பாற்றுங்கள்..... ஆனால்..... உங்கள் அபார அறிவு அளவுக்கு மீறி வேலை செய்தால் அநாவசியமாகப் பெண் ணின் மீது மட்டும் பழியைப் போடாதீர்கள். நான் நிரபராதி. குற்றமற்றவள். ஒரு காலத்தில் நான் அந்தோணியைக் காதலித் தது உண்மை. ஆனால்.... இன்று கயவனாக மாறிவிட்ட அவனை என் காதலன் என்று சொல்லக்கூட என் நாக் கூசுகிறது.....சக்கர வர்த்தி..... அன்று ஒரு நாள்..... இல்லை, நேற்றுத்தான்..... தங்களிடம் என் ஆசை ஒன்றைக் கூற நினைத்தேன். அது என்ன தெரியுமா? எனக்கு விடுதலையைத் தரச் சொல்ல எண்ணியிருந்தேன். தங்களின் அன்புப் பிடியிலிருந்து அந்தோணியின் காதல் பிடியில் சிக்க நினைத்தேன். இன்று.... அந்த விடுதலையை நானே தேடிக் கொண்டு விட் டேன்...... வேண்டுமென்று நான் விஷம் குடித்தேன். கொடியவனுகி என் எதிரில் நிற்கும் அந்தோணியை நான் மீண்டும் காதல னாக ஏற்க முடியாது..... அவனைக் காதலித்த உள்ளத்தால் உத்தமரான சந்திரகுப்தரின் மனைவியாக வாழ முடியாது. இந்தத் திராப் பிரச்னைகளுக்கு ஒரு முடிவு தந்து விட்டது, இந்த விஷம். சந்திரகுப்தரே! என் அன்பே! வாய் நிறைய அழைக்கிறேன். 'அன்பே' என்று...... அந்தோணியை மன்னித்து விடுங்கள். அந்தோணி, அப்பாவிடம் என் அஞ்சலியைக் கூறு. சந்திரகுப்தரே... ஹா.. நெஞ்சை வலிக்கிறதே..... நான் வருகிறேன்.

[ஹெலனின் தலை சாய்கிறது. ''ஐயோ'' என்ற பலத்த பேரொலி எழுகிறது.]

ஒன்பதாம் காட்சி

[மீண்டும் பழைய வனப் பிரதேசம். இரு துறவிகள். இருவர் விழிகளிலும் கண்ணீர்த் துளிகள்.]

பத்ர: சந்திரகுப்தா! இத்தனை சோகம் நிறைந்ததா உன் வரலாறு?

சந்திர: ஆம், பிரபோ! என் மனம் அமைதி பெறவில்லை..... நானும் வகையறியாது விழிக்கிறேன். இவ்வேதனைகளுக்குக் கடைசி யாக முடிவு காணத்தான் உம்முடன் துற வறப் போர்வை போர்த்திக் கொண்டு வந்து விட்டேன். உண்மையில் நான் இங்கு வந்த தின் காரணம் என் அன்பு ஹெலனை அல்லும் பகலும் நினைந்து நினைந்து கண்ணீர் விட்டுத் தனிமையில் கதறியழத்தான்.

(பெருமூச்சு விடுகிறான்)

பத்ர: சந்திரகுப்தா, அதோ பார்.... தன் கரங்களை நீட்டி உன்னை.... வாவென அழைக் கிறாள் ஹெலன். அவளை நீ அடையும் காலம் நெருங்கி விட்டது..... வா, நேரமாகி விட் டது. ஆசிரமத்துக்குச் செல்லலாம்!

[இருவரும் மௌனமாகச் செல்லுகின்றனர்.]



# இரு கண்கள்

**கே. ரகுபதி**

அதிகாரம் என்பது மது போதைக்கு ஒப்பானது. பதவி வரும்போது பணிவு வர வேண்டும். அது வருவது கடினம் என்பது மட்டுமல்ல; தான் ஏற்கனவே இருந்த நிலைமையை ஒருவன் எண்ணிப் பார்க்க வேண்டும். அதுதான் சிரமமாகி விடுகிறது. பதவியும் பண பலமும் ஏற்படும் போது, பணிவு வராததோடு மட்டுமல்லாமல் அதை யாராவது சுட்டிக்காட்டினால் அவர்கள் பேரில் ஆத்திரம் வருகிறது. சைக்கிளில் இருந்து கீழே தவறி விழுகிறவன், அனுதாபம் கொண்டு, வந்து விசாரிக்கிறவர்கள் பேரில் எரிந்து விழுவதைப் போல.

தவசி ஒருவர் 'நோஞ்சான்' நாய் ஒன்று வளர்த்தார். தம் தவபலத்தால் அதை வேங்கைப் புலியாக்கினார். அதுவோ அவரையே அடித்துத் தின்றதாம். ஏன்? தான் ஏற்கனவே நோஞ்சானாக இருந்ததை அறிந்தவர் இவர் ஒருவர்தானே என்ற அருவையால்.

அதைப் போல ஏற்கனவே தம் நிலைமையை அறிந்தவன் இவன் ஒருவன்தானே, இவன் ஒழிந்தால் தேவலாம் என்று நினைக்கிற அளவுக்குக் குரோதமும் அருவையும் பிறந்து தவறான முறையில் புத்தியைச் செலுத்துகிறான்.......

எதிரில் நிழலாடவே புத்தகத்தை மூடி விட்டு நிமிர்ந்தார் ராமையா.

மணி.

முகத்தில் கேள்விக்குறியோடு அவனைப் பார்த்து நோக்கினார்.

கும்பிடு போட்டான் மணி.

அவனை ஏறஇறங்கப் பார்த்தார் ராமையா.

ஆளே அடையாளம் தெரியவில்லையே! எப்படி இருந்தவன் இந்த மணி? அழித்தால் எட்டு ஆள் பண்ணலாம் என்று சொல்லுவோமே, அவனா இவன்? எலும்பும் தோலுமாக இளைத்து, தினி கிடைக்காத கோவில் யானை மாதிரி ஆகிவிட்டானே!

''என்ன மணி? உடம்புக்கு என்ன?''

மேல் துண்டால் தரையில் தட்டி விட்டு உட்கார்ந்தான் மணி.

''என்ன அண்ணா இப்படிக் கேட்கிறீர்கள் ஒன்றும் தெரியாத மாதிரி? நாங்கள் இருந்த நிலை என்ன? இப்போது நாங்கள் இருக்கிற இருப்பு என்ன?''

நாற்காலியை விட்டு எழுந்து பின்னால் கையைக் கட்டிக் கொண்டு குறுக்கும் நெடுக்குமாய் நடந்தார் ராமையா. அவர் சிந்தனையில் பல விஷயங்கள் அலைமோதுகின்றன என்று அதற்கு அர்த்தம்.

''அதுக்குள்ளே அலுத்துப் போய்விட்டதா என்ன கூட்டுறவு ஓட்டல்? எல்லோரும் முதலாளி! முடிசூடா மன்னர் நீங்க எல்லாம். உங்களுக்கென்ன கஷ்டம்?''

உடல் படபடக்க, கண்களில் நீர் துளித்து நிற்க, தொண்டை கம்மிக் குரல் அடைக்க, கதறி விட்டான் மணி.

''டிகிரிப் பாலுக்கும் தண்ணிப் பாலுக்கும், வித்தியாசம் தெரியாமே மோசம் போய் விட்டோம் அண்ணா! ஒரு தகப்பனார் தம் மகனை




அடிக்கிறார் என்றால் அவன் திருந்தி நல்ல முறையில் வளர வேண்டுமே என்ற ஆசையினால் தான். அது தெரியாமல் வீட்டை விட்டு ஓடிப் போய் நாலு பேரிடம் பேச்சுக் கேட்ட பிறகு, அடித்தாலும் உதைத்தாலும் தகப்பனார் எவ்வளவு பாசத்தோடு நம்மை வளர்த்தார் என்பது மகனுக்குப் புரிகிறது. அந்த மாதிரி, திருவாரூமை வெய்யிலில் வாடின பிறகுதான் தெரிகிறது அண்ணா!''

''ஒரேயடியா தத்துவமாக உதிர்க்கிறியே, மணி? எனக்கு ஒன்றும் புரியவில்லையே !''

''உங்களுக்கா அண்ணா புரியவில்லை? நீங்க நிரம்ப படித்தவர். நான் ஏதோ படிப்பில்லாவிட்டாலும் அனுபவப்பட்டவன். அடுப்படியிலேயே வாழ்நாள் கழிஞ்சாலும் எத்தனையோ நல்லது கெட்டது பார்த்தவன். 'சந்திர விலாஸ்' அல்வாத் துண்டு சாப்பிட வேண்டும் என்றே கிராமங்களிலே இருந்து வண்டி கட்டிக் கொண்டு வருவார்களே, அந்த நாளிலே எடுபிடிப் பையனாகச் சேர்ந்து, சரக்கு மாஸ்டர் அளவுக்கு உயர்ந்திருக்கிறேன் என்றால், அதுக்கு இந்தத் தெய்வம்தான் காரணம் !''

யாரிடமோ சொல்வதுபோல, அவரையே சுட்டிக் காட்டினான் அவன்.

புன்னகை செய்தார் ராமையா.

''என்னையா சொல்கிறாய் மணி? நான் தொழிலாளர் துரோகி, ஏழை வயிற்றில் அடிப்பவன், கொடும் ஆட்சி நடத்தினவன்.''

காதைப் பொத்திக் கொண்டான் மணி.

''நிறைந்த வீட்டில் இருந்து கொண்டு இப்படி யெல்லாம் பேசாதீர்கள் அண்ணா? எலும்பில்லாத நாக்கு எது வேண்டுமானாலும் பேசும். வாய் வாழ்த்தாவிட்டாலும் வயிறு வாழ்த்தியாகத்தான் வேண்டும்.''

''போதும் மணி. இங்கே வந்து என் புகழ் புராணம் பாடாதே. உன்னைக் கருங்காலி என்பார்கள்.''

''சொல்லட்டுமே! நான் எந்த நிமிஷமும் துண்டை உதறித் தோளில் போட்டுக் கொண்டு, ''கணக்கைத் தீர்த்துக்கங்கடா'' என்று சொல்லத் தயாராக இருக்கிறேனே ! ராமர் இருக்கிற இடம் அயோத்தி என்ற மாதிரி நீங்க இருக்கிற இடத்திலே நானும் என் ஜீவியத்தை ஓட்டிடுவேன்.''

பேச்சை மாற்ற எண்ணினார் ராமையா.

''உடம்பு பார்க்கச் சகிக்கவில்லையே மணி! உடம்பைப் பார்த்துக் கொள். சுவரை வைத்துத்தானே சித்திரம் ?''

விரக்தியாகச் சிரித்தான் மணி.

''உடம்பு ஏன் இப்படி ஆயிற்று தெரியாதா அண்ணா? நமக்கு இரண்டு இட்லி ஒரு காப்பிதான். சாப்பாடு அளவுதான். எல்லாம் புது முதலாளி உத்தரவு.''

''நல்லதுதானே? அப்போதுதானே நிறைய லாபம் கிடைக்கும்?''

''நன்றாக இருக்கிறது. எங்களைப் போன்ற சிப்பந்திகளுக்கு மட்டும்தான் இந்தக் கெடுபிடி. தலைவருக்கோ, அவரைச் சேர்ந்த இதர லொட்டாக்களுக்கோ கேள்வி முறையே கிடையாது. இஷ்டத்துக்கு வந்து உட்கார்ந்து கொண்டு அதிகாரம் செய்து சாப்பிட்டாகிறது. ம்.... விதி அப்படி ஆகிவிட்டது. அனுபவித்துத்தானே ஆகவேண்டும்? யானை தன் தலையில் தானே மண்ணை அள்ளிப் போட்டுக் கொள்கிற மாதிரி.......''

''ம்...... அப்புறம்?''

இந்தக் கேள்வியைக் கேட்டதும் எழுந்து விட்டான் மணி. அவன் அனுபவத்தில் இந்தக் கேள்வி ராமையா கேட்டார் என்றால் இத்துடன் பேச்சை முடித்துக் கொள்ள வேண்டும் என்பதாகும்.

''போய் வருகிறேன் அண்ணா. ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். முன் மேலே இருக்கிறாப்போல் இருந்து கொண்டிருக்கிறேன். எந்த நிமிடமும் வந்து விடுவேன். கொல்லை மாட்டுக் கொட்டகையிலாவது ஒண்டிக் கொள்ள இடம் கொடுத்தாக வேண்டும்.''

கையெடுத்துக் கும்பிட்டுவிட்டு நடந்தான் மணி, மனத்தில் நம்பிக்கையோடும், பேச்சில் உரிமையோடும்.

அவன் போவதையே பார்த்துக் கொண்டு திகைத்து நின்றார் ராமையா.

சந்திரவிலாஸ் !

இன்றைக்கு சந்திர விலாஸ் போர்டில் அண்ட் லாட்ஜிங் என்று நியான் விளக்கு ஒளி வீசக் கூட்டம் கூட்டமாக மக்கள் உள்ளே நுழைந்து வெளி வந்து கொண்டிருக்கிறார்களே, அது ஆதியில் ராமையா ஒரு சின்னஞ்சிறு கீற்றுக் கொட்டகையில் மணி என்ற பொடியனை உதவிக்கு வைத்துக் கொண்டு தொடங்கிய காப்பி கிளப் என்பதை இன்றும் ஞாபகம் வைத்துக் கொண்டிருப்பவர்கள் ஊரில் உள்ள சில வயதானவர்கள் மட்டுமே.

''ராமையா அல்வா போட்டுச் சாப்பிட வேண்டும்'', ''ராமையா கடை ரவா

தோசை ருசியே தனி'' என்றெல்லாம் சொல்லிக் கொண்டு சுற்று வட்டக் கிராமங்களிலிருந்தெல்லாம் கூட வண்டி கட்டிக் கொண்டு வந்து மிராசுதார்கள் சாப்பிடுவார்கள். ராமையாவே சர்வர், முதலாளி எல்லாம் என்றிருந்த அந்த ஹோட்டல் படிப்படியாக உயர்ந்து அறுபது சர்வர்கள், இருபது கிளீனர்கள் அளவுக்கு வளர்ந்து பெரிய ஹோட்டலாகி விட்டது ஒரு வெள்ளி விழாக் காலத்தில்.

ஒரு ஸ்தாபனம் நல்ல முறையில் நடக்கிறது. தொழிலாளர்கள், முதலாளியைத் தந்தையாகப் பாவிக்கிறார்கள், எல்லாமே சுமுகமாக இருக்கிறது என்றால் பார்க்கிறவர்களுக்குக் கஷ்டமாக இருக்காதா என்ன?

அப்படி இந்தச் சந்திர விலாசைப் பார்த்து மனக் கஷ்டப்பட்டான் குமரேசன். எனவே குமரேசன், ''உழைக்கப் பலர், உண்டு கொழுக்கச் சிலர். இந்த நிலை ஒழியப் பாடுபடுவோம். லாபத்தில் பங்கு கேட்போம்'' என்று மேடையிலே முழங்கிய போது முறுகலான ரவா தோசை போட்டவுடன் வாயில் கரைவதைப் போல் சந்திர விலாஸ் சிப்பந்திகள் மனம் கரைந்தது. அடுப்பில் ஏற்றிய பச்சைப் பால் சூடேற ஏறப் பொங்குவதைப் போலத் தங்களுக்கு இழைக்கப்பட்டு வந்திருக்கும் தீங்குகளைக் குமரேசன் வாயிலாகக் கேட்டதும் பொங்கினார்கள் அவர்கள்.

தொழிலாளர்கள் சங்கம் உருவானது. குமரேசன் ஏகமனதாகத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டான். மாபெரும் ஊர்வலம், வாழ்த்தொலிகள். அதே நேரத்தில், ''தொழிலாளர் துரோகி ராமையா ஒழிக'' என்ற வசைமாரிகள்!

நடந்த நிகழ்ச்சிகளையெல்லாம் கேட்டு மனம் நொந்து போனான் மணி. அவனுக்கு ஆரம்ப முதலே இதெல்லாம் பிடிக்கவில்லை. சர்வர் வேணு, சீனு எல்லோரும் புதிய சங்கத்தின் தொடக்கத்தையும் தலைவர் குமரேசனால் தமது வாழ்வு மலரப் போகிறது என்ற பேருண்மையையும் எடுத்துச் சொன்னது அவனுக்குக் கசப்பாக இருந்தது. அதிலும் ராமையா திட்டியதையெல்லாம் கேட்டுக் குமுறிப் போனான் அவன்.

இதெல்லாம் நல்லதற்கா? ராமையா யாரையும் அதிர்ந்து பேசியது கிடையாதே! யாருக்கும் தீங்கு இழைத்தது இல்லையே! சம்பளத் தேதிக்கு முன்னால் கேட்கும்போதெல்லாம் முன் பணம், வேண்டிய மட்டும் இனி, நினைத்தால் லீவு..... தகப்பனார், பிள்ளைகள் மாதிரி இருந்த இடத்தில் இனி எல்லாம் சட்டப்படிதானா?

ராமையாவின் காதுக்கும் இதெல்லாம் எட்டாமல் போகுமா? மணி போய்ச் சொல்வதற்கு முன்பே அவருக்கு எல்லாம் தெரிந்துதான் இருந்தது.

''இருக்கட்டுமே மணி! நல்லதுதானே? அடாபிடியாகப் பணம் சேர்க்க வேண்டும் என்று எனக்கு ஆசை கிடையாது. மிகத் தாழ்ந்த நிலையிலிருந்து நான் முன்னுக்கு வந்திருக்கிறேன். மிக உயர்ந்த நிலையையும் பார்த்தாகி விட்டது. கணக்கிலே 'டிமிக்கி' கொடுக்கிறவன் அல்லவா பயப்பட வேண்டும்? பார்த்துக் கொள்ளுங்கள் என்று புத்தகத்தைப் போட்டால் போயிற்று. சட்டப்படி பங்கு கொடுத்து விட்டுப் போகிறார்கள். ரொம்ப மிஞ்சிப் போனால் கடையை மூடி விட்டுப் போகிறேன்......''

கையெடுத்துக் கும்பிட்டான் மணி.

''அது மட்டும் வேண்டாம், அண்ணா! இத்தனை பேருடைய குடும்பங்களும் உங்களை வாழ்த்திக் கொண்டிருக்கிறது இப்போது. அவர்கள் வயிற்றில் மண் அடித்துவிடாதீர்கள். ஏதோ போதாத காலம் எல்லாரும் இப்படி ஆடுகிறார்கள். தானே உணர்ந்து விடுவார்கள்.......''

அதைக் கேட்டுச் சிரித்தார் ராமையா.

ஒரு நாள்.

சர்வர் சீனுவுக்கும் சாப்பிட வந்தவருக்கும் வாக்குவாதம் முற்றிய நிலை.

ராமையா சப்தம் கேட்டு அருகே போனார்.

சாப்பிட வந்தவர், ''முதலாளியே சொல்லட்டும் நியாயத்தை! தோசை கொடுத்தார்; சாப்பிட்டேன். காப்பி கேட்டால் என் வேலை நேரம் முடிந்து விட்டது. வேறு ஆள்வந்து தருவார் என்கிறார்'' என்றார்.

ராமையாவுக்குக் கோபம் வந்து விட்டது.

''என்னடா, சீனு? என்ன இதெல்லாம் புது வழக்கம்? கிராக்கியைக் கவனிக்காமல் அப்படி என்ன நேரமாகி விட்டது? நேரப்படிதான் வர்றீங்களோ வேலைக்கு? எவ்வளவு நாள் தூங்கிவிட்டு லேட்டா வந்திருக்கிறே?''

சீனு அவர் முகத்தை நிமிர்ந்து பார்க்காமல் சுவரைப் பார்த்துப் பேசினான்.

''அதெல்லாம் எட்டு மணி நேரம்தான் வேலை பார்க்க முடியும். தலைவர் உத்தரவு.''

ராமையாவுக்கு — எப்போதுமே அமைதியாக இருப்பவரான அவருக்கு — ஆத்திரம் அதிகரித்து விட்டது.

''ஓஹோ! அதே தலைவர் இரண்டு இட்டிலிக்கு மேலே தின்னக் கூடாதுன்னு சொல்லியாக்கும்?''

''எதுவாக இருந்தாலும் தலைவரைக் கேளுங்க!''

தம் நிலை மறந்தார் ராமையா.

''வெளியே போடா. 'மூணு நாள் பட்டினி. எங்கம்மா சாகக் கிடக்கிறா'ன்னு சொல்லிக் கண்ணீரோட காலிலே வந்து விழுந்து கதறினியே, அப்போ இந்தத் தலைவனைக் கேட்டுக்கொண்டா வேலை கொடுத்தேன்? போடா வெளியே!''

ரோசக்காரன் சீனு. காதில் செருகிய பென்சிலை மேஜையில் விட்டெறிந்துவிட்டு, ''ம்...'' என்று உறுமியபடி வெளியேறினான்.

மறு நாள் காலை.

வழக்கம் போல் ஓட்டலை அடைந்த ராமையா அங்கிருந்த நிலை கண்டு அதிர்ச்சி அடைந்தார்.

நடுவில் ஒரு பெஞ்சு. அதில் சர்வர் சீனு படுத்திருக்கிறான். பக்கத்தில் நாற்காலியில் தலைவர் குமரேசன், கழுத்தில் ரோஜா மாலையுடன். சீனுவின் பக்கத்தில் ஒரு பலகையில், ''பழி வாங்கப்பட்ட சீனு உண்ணாவிரதம் இருக்கிறார். பொதுமக்கள் ஆதரவு தாரீர்'' என்று எழுதப்பட்டு, பக்கத்தில் ஓர் உண்டியல் வைக்கப்பட்டிருந்தது.

சிரிப்பதா, அழுவதா என்று தெரியவில்லை ராமையாவுக்கு. காரிலிருந்து இறங்கி நெருங்கி வந்தார்.

# கால்கேட் டூத் பிரஷ்

**மேலும் துப்புரவாக உங்கள் பற்களை சுத்தம் செய்யும்படி அமைக்கப்பட்டிருக்கிறது!**

4 சைஸ்கள் - அடல்ட் - ஜூனியர் - சைல்ட் - பேபி
ஹார்ட் - மீடியம் - சாஃப்ட்




ஸ்டெரிலைஸ் செய்யப்பட்ட நைலான் பிரிஸில்கள் உறுதியாகப் பொருத்தப்பட்ட படியால் அதிகநாள் உழைக்கக்கூடியது!



புதியது
மிகவும்
கவர்ச்சியானது!!
கால்கேட்
சூபர் டீலக்ஸ்
டூத் பிரஷ்

கவர்ச்சியான, நவீன பெட்டியில்......விசேஷமான கருவமைப்புடன் அதிகமான பிரஸில்களைக் கொண்ட முன் தலையாக வேலை செய்யும் டூத் பிரஷ்!

வாய் துர்நாற்றத்தை அகற்ற கால்கேட் காட்டும் வழி

# க்ருஷன் ஸால்ட்ஸ்

அருந்துங்கள்

**பசியைத்** தூண்டுகிறது அது

அதன் பயன்
மிக்க 7-வழிச்
செயல் முறை
உங்கள் உடல்
நலனைத்
தந்தபடி
பாதுகாக்கிறது




நிக்கோலஸ் (N) தயாரிப்பு

KS-G-7 TAM

''ஒழிக!'' கூச்சல் ஒலிப்பது ராமையாவைக் கண்டதும். சர்வர்களோடு சேர்ந்துகொண்டு வேலையில்லாதவர்கள், பொழுதைக் கழிக்க நினைப்பவர்கள், எல்லாருமே வீதியில் வேடிக்கை பார்த்தார்கள்; பலமாகக் கூச்சல் போட்டார்கள்.

குமரேசன் ராமையாவை நெருங்கி வந்தான். ''தொழிலாளர்களுக்கு நியாயம் வழங்குங்கள். வயிற்றில் அடிக்காதீர்கள்'' என்றான்.

ராமையா அவனை ஏளனமாகப் பார்த்தார். ''என்ன அநியாயம் நடந்துவிட்டது இப்போது? அப்படியே இருந்தாலும் அதைக் கேட்க நீ யார்?''

குமரேசன் இடையில் கையூன்றிக்கொண்டு, ''நான் யார் என்று கேட்கிறீரே, சொல்லுங்களேன்டா'' என்றான்.

''எங்கள் தலைவர்!''

''எங்கள் தெய்வம்!''

நாலா பக்கமிருந்தும் குரல்கள் எழுந்தன.

''அப்படியா? பேசவேண்டிய இடத்தில் நாம் பேசிக்கொள்ளலாம்'' என்று சொல்லி விட்டுத் திரும்பக் காரில் ஏறிக்கொண்டார் ராமையா.

பத்து நாட்கள் ஓட்டல் மூடிக் கிடந்தது. ஸ்ட்ரைக் என்று பல நாட்கள் நடத்தலாம் என்று திட்டம் போட்டிருந்தான் குமரேசன். அதற்குப் பயந்தோ பணிந்தோ வராமல் மூழுக்க ஒதுங்க நினைத்துவிட்டார் ராமையா.

எனவே ஓட்டல் கைமாறியது. குமரேசனுக்கு வேண்டிய பிரமுகர் ஒருவர் உதவ முன்வந்தார். எல்லா சர்வர்களும் தலா ரூபாய் கொடுத்துப் பங்குதாரராக ஆகிக் கூட்டுறவு ஹோட்டல் நடத்தத் திட்டம் வகுத்து அழகாகப் பேசினான் குமரேசன். சிப்பந்திகள் ஒவ்வொருவரும் தானே முதலாளியாகிவிட்ட மகிழ்ச்சியோடு காலி வயிறே நிரம்பிவிட்ட திருப்தியில் மிதந்தனர். தங்கள் தங்கள் கையில் இருந்த பணத்தை யெல்லாம் குமரேசனிடம் கொடுத்தனர்.

பத்து நாட்கள் இருளில் மூழ்கியிருந்த சந்திர விலாஸ் மீண்டும் ஒளி வெள்ளத்தில் மிதந்தது. ராமையா அமர்ந்து ஆட்சி நடத்திய சிங்காதனத்தில் — கல்லாப் பெட்டியில் குமரேசன் பெருமிதத்தோடு அமர்ந்தான். குமரேசனுக்குத் தெரிந்தவர்கள், வேண்டியவர்கள் எல்லாம் ஹோட்டலில் நுழைந்து இஷ்டப்படி சாப்பிட்டார்கள். சர்வர்கள் மகிழ்ச்சியோடு ஓடியாடி அவர்களை உபசரித்து உவகை அடைந்தார்கள். மனவேதனையை வெளிக்காட்ட முடியாமல் அடுப்படியில் வெந்துகொண்டிருந்தவன் மணி ஒருவன்தான்.

புதிய சட்ட திட்டங்கள் உருவாயின.

தலைக்கு இரண்டு இட்லி, ஒரு காப்பிக்கு மேல் எந்தச் சிப்பந்தியும் சாப்பிடக் கூடாது.

சம்பள நாளைத் தவிர இதர வேளையில் ஒரு காசுகூட முன்பணமாகக் கேட்கக்கூடாது.

வேலை நேரத்தில் பேசக் கூடாது.

குமரேசன் ஆட்சி கெடுபிடியாகத்தான் இருந்தது. ஓரிரு துணிந்த சர்வர்கள் அவனிடமே கேட்டபோது, ''நாமே முதலாளிகள் நாமே சாப்பிடலாமா? அப்படி எப்படி லாபம் காண முடியும்?'' என்று அழகாகச் சொல்லி 'ஜஸ்' வைத்து அனுப்பிவிட்டான் அவன்.

எட்டு மணி நேரம் வேலை முடிந்தது என்று நழுவ முடியவில்லை. ''நமக்கு லாபம் வரவேண்டுமானால் உழைக்கத்தான் வேண்டும்'' என்று அடிக்கடி கூறிப் பத்து மணி நேரத்துக்கும் மேலாக வேலை வாங்கினான் அவன்.

இதைக் கண்டு பொறுமிய சர்வர்கள் மணியிடம் புகார் செய்தார்கள். அவன்தானே சீனியர் ஆசாமி?

''மணி அண்ணே தெரியுமா விஷயம்? நம்மைத் தலைக்கு ரெண்டு இட்டிலிக்கு மேல் சாப்பிடக் கூடாதுன்னு உத்தரவு போட்டானே? இவன் எவ்வளவு தின்கறான் தெரியுமா? வீட்டுக்கு வேறே இருபது இட்டிலி கட்டிப் போறது.''

''சும்மா சொல்லக் கூடாது. எப்போ கேட்டாலும் எதுக்குன்னு கேட்காமே முன் பணம் கொடுப்பாரே அவர்! இவன் கிட்டே ஒரு பைசாப் புரட்ட முடியலியே!''

''என்னமோ கரப்பான் பூச்சிக்குப் பயந்து நெருப்பிலே குதிச்ச கதையாக ஆகிவிட்டதோன்னு பயப்படறேன் நான்.''

முகத்தில் முறுவலோடு தோசையைத் திருப்பிப் போட்டுக் கொண்டிருந்தான் மணி.

''அநாவசியமா இங்கே வந்து பேசிக் கொண்டு நிற்காதீர்கள். தலைவர் கோபித்துக் கொள்ளப் போகிறார்.''

''மணி அண்ணே! கிண்டல் பண்ணுறீர்கள். பசும் பாலுக்கும் பவுடர் பாலுக்கும் வித்தியாசம் தெரியாமல் நாங்க மோசம் போயிட்டோம். நீங்க ஒண்ணுமே நடக்காத மாதிரி பேசாதீங்க.''

குமரேசன் தலை அந்தப் பக்கம் தென்படவே, தொந்துபோன சர்வர் கூட்டம் நகர்ந்தது, அவரவர் ஜோலியைக் கவனிக்க.

மணி சிரித்துக் கொண்டான். கல்லாப் பெட்டியருகில் இரைச்சல் கேட்டு எட்டிப் பார்த்தான் மணி. சர்வர் சுப்புவுக்கும் குமரேசனுக்கும் சண்டை நடந்தது.

''என்னடா பயமுறுத்தறே? எவன்கிட்டே பேசறேன்னு நினைச்சுப் பேசு. உங்க முதலாளி ராமையா மாதிரி பயந்துகிட்டு ஓடுவேன்னு நினைச்சுக்கிட்டியா? நான் விரலை அசைச்சா, பத்தாயிரம் பேர் ஓடிவந்து உன்னை ரொட்டி தட்டிடுவான் தெரியுமா? ஜாக்கிரதை!''

சுப்புவும் சளைக்கவில்லை. ''நீ என்னய்யா தலைவன்? தொழிலாளி கூட்டுறவு ஓட்டல்னு வாய் இனிக்கப் பேசினே! கடைசியிலே ஒரு அவசரம்னு கேட்டா பத்து ரூபாய் தர மாட்டேங்கிறியே? பெட்டி நிறையப் பணத்தை வெச்சுக்கிட்டு ஏழை வயிற்றிலே அடிக்கிறியே! வீட்டிலே அவசரமா மருந்து வாங்கணும்னுதானே கேக்கறேன்! கொஞ்சம்கூட இரக்கமில்லையே!''

''பேசினேயோ, உதைப்பேன்! போடா வெளியே!''—கையைக்காட்டினான் குமரேசன்.

கண்களில் நீரோடு வெளியேறினான் சுப்பு. வேலை கொடுத்து வாழ்வளித்த ராமையா ஒரு சொல் சொன்னதற்கு மாபெரும் போராட்டத்தைத் தொடங்கி விட்டவர்கள், இன்று செய்வதறியாது கைகளைப் பிசைந்தார்கள்.

ராமையா வம்புக்குப் பயந்தவர். மானத்துக்கு அஞ்சிக் கௌரவமாக விலகிவிட்டார். ஆனால் குமரேசன் அப்படி அல்லவே? இந்த மாதிரி தொழிலாளர்களைக் கருவியாகக் கொண்டே தன் வாழ்வு நலத்தைப் பெருக்கிக் கொண்டவனாயிற்றே, அவனா பயப்படுவான்?

பல்லைக் கடித்துக் கொண்டு நாட்களைக் கடத்தினார்கள் சந்திர விலாஸ் சிப்பந்திகள், சம்பள நாளை நினைத்துக் கொண்டு.

ஒரு மாதம் ஓடியது. சம்பள நாள் வந்தது.

காலையிலிருந்தே சிப்பந்திகள் சுறுசுறுப்பாக வேலை செய்தார்கள். ராமையா கொடுத்ததைப் போல் இரட்டிப்புச் சம்பளமல்லவா தரப் போகிறான்? அந்தத் தெம்பு அவர்களைப் பம்பரமாக இயக்கியது. குமரேசன் கல்லாவில் அமர்ந்து கணக்குகளைப் பார்ப்பதும், ரூபாய் நோட்டுகளை எண்ணிப் பெரிய பர்ஸில் அடைப்பதுமாக இருந்தான்.

மாலை ஏழரை மணி.

சர்வர் ஒருவர் உள்ளே அடுப்படியிலிருந்த மணியிடம் ஓடிவந்து, "அண்ணே! இன்னிக்கு சம்பளம்..." என்றான்.

வியர்வையை வழித்தெறிந்து விட்டு, "ஆமாம். அதற்கென்ன? ராத்திரி கடை கட்டும்போது கொடுப்பான் என்று நினைக்கிறேன்" என்றான் மணி.

"அப்படித்தான் நாங்களும் நினைத்திருந்தோம். இப்போது முதலுக்கே மோசம் வந்து விட்டதே!"

"என்னது?"

"ஆமாம். அரை மணியாக ஆளைக் காணோம்! ரூபாய் நோட்டுக்களை எண்ணிக் கொண்டிருந்தவர்; எல்லோரும் பார்த்திருக்கிறோம். வாசல் பக்கம் போய் ஒரு காரில் ஏறினதாகக் கிளீனர் தங்கவேலு சொல்லுகிறான். யாரையாவது பார்க்கப் போயிருக்கிறார் என்று நினைத்துக் கொண்டிருக்கிறோம். விமான நிலையத்துக்குப் போய்விட்டார் என்று அங்கே பார்த்த ஒருவர் சொல்கிறாரே!"

குமரேசன் கம்பி நீட்டிவிட்டான் பணத்தைச் சுருட்டிக் கொண்டு என்று புரிந்து விட்டது மணிக்கு.

"தலைவர் வருவாரா மணி அண்ணே?"

"சம்பளம் கிடைக்குமா இன்று?"

"சாயந்திரம் போனவரை இன்னும் காணோமே!"

"சாமி! சம்பளம் உண்டுங்களா?"

கடைகட்டும் நேரத்தில் பல சிப்பந்திகளும் ஏககாலத்தில் கேட்டபோது, "எல்லோரும் என்னுடன் வாருங்க, சொல்கிறேன்" என்றான் மணி, ஒரு தீர்மானத்துக்கு வந்தவனாக.

எழுபதுக்கும் மேற்பட்டவர்கள் ஒரே சமயத்தில் வந்து கையைக் கட்டிக்கொண்டு தலைகுனிந்து எதிரில் நிற்பதைக் கண்டதும் திகைத்துப் போய்விட்டார் ராமையா, இந்த இரவு நேரத்தில்.

"என்ன இது? ஏன் எல்லோரும் கூட்டமாக வந்திருக்கிறீர்கள்? இந்த ராத்திரியிலே?"

மணிதான் பேசினான்.

"நான்தான் அழைத்துக்கொண்டு வந்தேன். தாயை விட்டுப் பிரிந்த கன்றுகள் திசைகொன்றாகத் திண்டாடின. ஒன்றாகச் சேர்த்து அழைத்து வர்றதுக்கு ஒரு மாத காலமாச்சு."

"ஏன் என்ன நடந்தது? உங்க தலைவன் குமரேசன் உங்களைப் போகச் சொல்லிவிட்டானா?" என்று கேட்டார் ராமையா.

சர்வர் சீனு அவரை ஏறிட்டுப் பார்க்காமலேயே பேசினான். "அப்படி இருந்தால் தான் பரவாயில்லையே. போய்விட்டான் எல்லாப் பணத்தையும் சுருட்டிக் கொண்டு.



"ஐயோ! உன்னுடைய ஐம்பது ரூபாய் கடனுக்கு நூறு ரூபாயாகக் கொடுத்துடறேன். அடுத்த டயலாக் மறந்து போச்சே, சொல்லேன். ப்ளீஸ்....ப்ளீஸ்.... மானம் போறதே!"

நாங்க செய்த பழிக்குப் பலனை அனுபவிச்சுட்டோம். அதான் உங்க காலிலே விழுந்து மன்னிப்புக் கேட்க வந்து விட்டோம்."

ராமையா குறுக்கிட்டார்: "சேச்சே! இதெல்லாம் என்ன? நான் எதிர்பார்த்தது தான். ஆனால் இவ்வளவு சீக்கிரம் நடக்கும் என்று நினைக்கவில்லை."

மணி பேசினான்.

"நடந்தது நடந்துவிட்டது. எல்லோரும் எல்லாவற்றையும் மறந்துவிடுவோம். நீங்க வந்து பழையபடி அங்கே நாளைக் காலையிலே உட்கார்ந்தாகணும். அப்பத்தான் எங்கவீட்டு அடுப்பு எரிய முடியும்."

"நானா? மறுபடியும் முதலாளியாகவா?"

"ஆமாம், ஆமாம்!" என்று பல குரல்கள் சேர்ந்து ஒலித்தன.

ராமையா சொன்னார்:

"நான் என்றைக்குமே தொழிலாளிதான். பாடுபட்டு முன்னுக்கு வந்தேன். ஒவ்வொருவரும் முன்னுக்கு வர நன்றாக உழைக்க வேண்டும். அதற்காகத்தான் ஒவ்வொருவருக்கும் அறிவைக் கொடுத்திருக்கிறார் கடவுள். கல்லாவில் இருப்பவனும் காசை வாங்கி உள்ளே போடுகிற ஒரு தொழிலாளி என்று நினைத்துக் கொள்ளுங்கள். அப்புறம் அசூயைக்கோ, பொறாமைக்கோ இடமே வராது. லாபக் கணக்கைச் சரிசமமாக எல்லோருக்கும் பிரித்துத் தர நான் எப்பவும் தயார்."

மணி கூறினான்:

"உங்க நல்ல குணம் எங்களுக்குத் தெரியாதா அண்ணே? இருந்தாலும் இப்படி ஓர் அனுபவம் ஏற்பட்டது நல்லதாகி விட்டது. சர்க்கரை போட்ட காப்பிக்கும், வெல்லம் போட்ட காப்பிக்கும் வித்தியாசம் பார்வைக்குத் தெரியாது. ஆனா ருசிச்சுப்பார்த்தா புரிஞ்சுடறது இல்லையா? அந்த மாதிரி எல்லாரும் உண்மையை உணர்ந்து விட்டார்கள். தொழிலாளியும் முதலாளியும் பாலும் டிகாக்ஷனும் மாதிரி. இரண்டும் சேர்ந்தால்தான் காப்பி. அந்த மாதிரி தொழிலாளி வாழ முதலாளி அவசியம். அந்த மாதிரி முதலாளி வாழத் தொழிலாளி அவசியம். அவர்கள் இரு கண்கள். இனிமேல் வேற்றுமை இல்லாமல் உழைக்க நாங்க தயாராகிவிட்டோம்; நீங்க வந்து உங்கள் பொறுப்பை ஏற்றுக் கொள்ள வேண்டும்."

ராமையா மன நிறைவோடு தலை யசைத்தார்.

# வட்ட மேஜை

* தொடர்கதை இலக்கியம்
* உற்பத்தி பெருகுமா?

“கல்கி”யில் சில வாரங்களுக்கு முன்னால் திரு க. நா. சு. 'சுவையான சர்க்கரை'கள் பகுதியில் கூறியிருந்த கருத்துக்கள் சிலவற்றின் எதிரொலி இந்தக் கடிதம்.

'விமர்சனம்' என்ற பெயரால் சிலர் தற்கால தமிழ் இலக்கியம் 'வளரவில்லையே, வளரவில்லையே' என்று புலம்புகிறார்கள்.

இவர்களுடைய முதல் எதிரி பத்திரிகைகள். பத்திரிகைகளில் வரும் அனைத்துமே இலக்கியத் தரமற்றவை என்பது இவர்களது கொள்கை. அதுவும் பத்திரிகைகளில் தொடர்ந்து வரும் நாவல்கள் இவர்களுக்கு 'மாற்றாந்தாய்க் குழந்தைகளே!' பத்திரிகைகளில் வரும் தொடர்கதைகள் அனைத்துமே இலக்கியத் தரமுள்ளவை என்று கூற வரவில்லை நான். 'அவற்றிலும் இலக்கியத் தரமுள்ளவை உள்ளன' என்பதுதான் என் வாதம். அன்றியும் பத்திரிகைகளில் வாராந்தர சஸ்பென்ஸ்கள் தேவைகளுக்குத் தகுந்தாற் போல வெளியாகும் விஷயங்கள் புத்தக உருவில் முழுமையடையும்போது சோபிக்காமல் போவதில்லை” என்பது ஒருசில ஆரம்ப எழுத்தாளர்களுக்கு வேண்டுமானால் பொருந்தும். ஆனால் வளர்ந்துவிட்ட எழுத்தாளர்கள் வாராந்தர சஸ்பென்ஸை நம்பித்தான் வாழ வேண்டுமென்பதில்லை. வாசகர்களும் அவற்றையே எதிர்பார்த்துப் படிப்பதுமில்லை. உலகம் போற்றும் டால்ஸ்டாயின் 'அன்னா கரீனா'வும் மற்றொரு நாவலும் தொடர்கதைகளாக வந்தவையே! டிக்கன்ஸ் நாவல்களும், ஆல்டஸ் ஹக்ஸ்லே நாவல்களும் மற்றும் பல உலக எழுத்தாளர்களின் நாவல்களும் முதலில் தொடர்கதைகளாக வெளிவந்தவையேயாகும். இந்த ஒரே காரணத்தால் இவை இலக்கியத் தரமற்றவை என்று கூறத் துணிவாரா திரு க. நா. சு.? இந்த நேரத்தில் அகிலனின் 'கயல் விழி'க்குப் பேராசிரியர் தெ. பொ. மீ. அவர்கள் வழங்கிய மதிப்புரையில் ஒரு பகுதி நினைவுக்கு வருகிறது: “இந்த நிலையில் வரலாற்றுச் சுந்தர பாண்டியனைத் தமிழ் வாழும் அளவும் வாழத்தக்க தமிழாக ஆசிரியர் படைத்துள்ளார்.” இலக்கியத் தரமில்லாமலா இத்தகைய பாத்திரங்கள் உருவாகிவிட்டன? பத்திரிகைகளில் வெளிவராமல் ஆங்கில மொழியில் தோன்றும் ஆயிரமாயிரம் நாவல்களுமா இலக்கியத் தரமாக உள்ளன? அப்படியாவது அதே பாணியைப் பின்பற்றி ஒரே கொள்கையாக பத்திரிகை 'மீடிய'த்தை நம்பாமல் எழுதும் டாக்டர் மு. வ. வின் நாவல்கள் சிறந்த நாவல்கள் என்று க. நா. சு. ஒப்புக்கொள்கிறாரா? அதுவும் இல்லை. (இவை தமிழில் வந்தவையாயிற்றே? எப்படி ஒப்புக்கொள்வார்?) 'தமிழில் வெளிவரும் எல்லா நாவல்களுமே இலக்கியத் தரமற்றவை' என்பது தான் இவர் கொள்கையோ? அப்படியானால் 'தரம்' என்பதுதான் என்ன?

இன்னும் கூறப்போனால் மார்கரெட் கல்லின் பெனிங் என்னும் ஆசிரியர் தொடர்கதைகளாக எழுதுவதால் ஆசிரியர் திட்டமிட்டு ஒழுங்காகத் தம் வேலையைத் திறம்படச் செய்து வெற்றி யடையலாம் என்று கருதுகிறார்.

இத்தகைய விமர்சகர்கள் தங்கள் தாக்குதல்களுக்குப் பயன்படுத்தும் கருவிகள் ஒன்று ஜனரஞ்சகம்; மற்றொன்று இலக்கியத் தரம். 'ஜனரஞ்சகத்துக்கும் இலக்கியத் தரத்துக்கும் ஸ்நானப் பிராப்திகூடக் கிடையாது' என்பது திரு க. நா. சு. கருத்து. 'ஜனரஞ்சக'மென்றால் என்ன? ரசிகர்கள் விரும்புகிறார்கள் என்பதுதானே பொருள்? ரசிகர்களைப் புறக்கணித்தால் எந்த இலக்கியம் வாழும்?—வாழ முடியும்?

சென்னை — ஆ. இரா. தண்டாயுதம், எம்.ஏ.
20-10-65 — ஆராய்ச்சி மாணவன், தமிழ்த் துறை, சென்னை பல்கலை கழகம்

'ரேஷன்' என்ற பெயரில் அரசாங்கம் விவசாயிகளிடம் நெல் கொள்முதல் செய்கிற லட்சணத்தைப் பார்த்தால் மிக அநியாயமாக இருக்கிறது. ஏக்கருக்கு நாலு மூட்டை நெல் எடுக்கிறார்கள். ஆனால் விவசாயிக்கோ ஏக்கருக்குக் கூலியாட்கள் செலவு போக மிஞ்சுவது சாதாரணமாக எட்டு மூட்டைகள் தான். எங்களுக்கு இரண்டு ஏக்கர் வயல் இருக்கிறது. மொத்தம் 16 மூட்டை மிஞ்சியது. இதில் சர்க்கார் எடுத்துக்கொள்வது —தவறு, பிடுங்கிக்கொள்வது—எட்டு மூட்டை. அதோடு விவசாயியை விடுகிறார்களா என்றால் இல்லை! கணக்குப்பிள்ளையிடம் நெல் அளந்து விட்டதாக அத்தாட்சி பெற்று, தாசில்தாரிடம் ஓடிப்போய் மீதி நெல்லை வீட்டுக்கு எடுத்துப் போக அனுமதி வாங்க வேண்டியல்லவா வேண்டும். நாலு மூட்டைக்குச் சர்க்கார் கொடுக்கிற பணம் 105 ரூபாய்தான். ஆனால் வெளியில் அதே அளவு நெல் 160 ரூபாய்க்குக் குறையாமல் விற்கிறது. எக்கச்சக்கமான கூலியைக் கொடுத்து, உரங்கள் வாங்கிப் போட்டு, நெல் விளைவித்துப் பாடுபடுகிற விவசாயிக்கு அரசாங்கம் தருகிற பணம் அசல் மாதிரியாகிறது. அப்படியானால் பாடுபட்ட விவசாயிக்குப் பலனில்லையா?

நெல்லை அளந்த பிறகு மீதி நெல்லை விவசாயி தன் விருப்பப்படி செய்துகொள்ள முடிகிறதா என்றால், அதுவுமில்லை! சான்றாக அவன் தன் நெல்லைச் சாப்பாட்டுக்காக மிஷினில் அரைத்துக்கொள்ள வேண்டுமானாலும் அதற்காக மணியக்காரரிடமும், ரெவின்யூ இன்ஸ்பெக்டரிடமும் கையெழுத்து வாங்கித் தொலைக்க வேண்டுமாம். ஆக விவசாயிக்கு அங்கே இங்கே என்று கையெழுத்து வாங்கு வதிலேயே காலம் போய்விடும் போலிருக்கிறது. அதுமட்டுமல்லாமல் அவன் உற்சாகமும் போய்விடுகிறது. அப்புறம் எங்கே அவன் உற்பத்தியைப் பெருக்கப் போகிறான்?

அந்தியூர்,
26-10-65 — மு. தவசியப்பன்

Edited printed & published by T Sadasivam on behalf of Messrs. Bharathan Publications Private Ltd., at the Kalki Press, Kilpauk, Madras-10

Agfa

ஆக்ஃபா

# க்ளிக் III

## அவளுடைய முதல் காமிரா



**நீங்களும் அதை உபயோகிக்க விரும்புவீர்கள்!**

கச்சிதமான இப் புதிய ஆக்ஃபா காமிராவைக் கையாளுவது மிக எளிது. கணக்குநுணுக்கம் பார்க்கவேண்டியதில்லை. எவ்விதத் தொல்லையும் கிடையாது. இலக்கு வைத்துச் சடக்கென்று எடுத்துவிடலாம். பளிச்சென்று, எடுத்த எடுப்பிலேயே பலன்... ஒவ்வொரு தடவையும் வெற்றி. 120 பிலிம் சுருள் ஒவ்வொன்றுக்கும் 12 ஆல்பம்-சைஸ் படங்கள். அருகிலுள்ள ஆக்ஃபா வியாபாரியிடம் சென்று பார்வையிடுங்கள்.



அம்சங்கள்: மெனிஸ்கஸ் லென்ஸ் • உடனடிப் படமெடுப்புக்கான ஆட்டோமேட் ஷட்டர் • மேகக் காட்சிகளுக்குரிய, உட்பொருந்திய மஞ்சள் பில்ட்டர் • 'வெயில்' 'மூட்டம்' இரண்டுக்கும் ஏற்ற லென்ஸ் இமைப் பொருத்தங்கள் • ஃப்ளாஷ் இணைப்புகள் • காட்சி கோட்டம் காட்டும் பெரிய வியூஃபைண்டர் • முக்காலி முனைப் பிணைப்பு (கழற்றாமலே படமெடுப்பதற்கான தோலுறைக்கும் ஏ1 ஃப்ளாஷ் லேட்டுக்கும் தனி விலை).

விலை ரூ.35.00. பிரதேச வரிகள் தனி.

இந்தியாவிலே தயாரிப்போர்:
தி நியூ இந்தியா இண்டஸ்ட்ரீஸ் லிட்., பரோடா

பூரண விநியோகஸ்தர்கள்:

**ஆக்ஃபா இந்தியா லிமிடெட்**

பம்பாய் • புது டெல்லி • கல்கத்தா • சென்னை

கீர்த்திமிக்க பிரிண்டுகளுக்கும், என்லார்ஜ்மெண்டுகளுக்கும் ஆக்ஃபா போட்டோத் தாள்களே வேண்டுமெனக் குறிப்பிடுக.

CHAI-BITH

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

